# கல்கி

## பொருளடக்கம்

கீலக ஆடி 27 — — ஆகஸ்டு 11



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

< படவிளக்கம் 8ம் பக்கம்


ஐயோ, என்னால்
நகர முடியவில்லை
மொழிப்
பிரச்னைக்குத்
தீர்வு
மும் மொழித்
திட்டம்
காங்கிரஸ்
PK


காங்கிரஸ்
இது
முறையீனம்!
காங்கிரஸ்காரர்
கட்சி
மாறுபவர்
ஆகா, என்ன
முறையான
காரியம்!
காங்கிரஸ்காரர்
கட்சி
மாறுபவர்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 □ இதழ் 2



# அணு ஆயுதப் பிரச்னை

**அ**ணுகுண்டு முதன் முதலில் பிரயோகிக்கப்பட்டது ஏன் என்று நினைவுபடுத்திக் கொள்வோம்: ஜப்பானியர்கள் போரில் தங்களுக்கு ஏற்பட்ட தோல்வியை உணர்ந்தார்கள். என்றாலும், எதிரிகளிடம் தங்களது சக்கரவர்த்தியை அடிபணிய வைக்க அவர்களுக்கு மனமில்லை. சரணாகதி அடையுமாறு எதிரிகள் கூறியபோது, ஜப்பானியர்கள் தாங்கள் அடைந்த தோல்வியை ஒப்புக் கொண்டார்கள். என்றாலும் தமது சக்கரவர்த்தியின் கௌரவத்துக்குப் பங்கம் ஏற்படாமல் காக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். வெற்றி கொண்ட நேசநாடுகள் இவ்விதம் நிபந்தனையுடன் ஜப்பான் சரண் புகுவதை ஏற்கவில்லை. எவ்வித நிபந்தனையுமின்றிச் சரணாகதி செய்ய வேண்டும் என்று வற்புறுத்தினர். இதற்கு அடுத்தபடியாகவே, அமெரிக்காவில் தயாரிக்கப்பட்ட முதல் அணுகுண்டுகள் ஹிரோஷிமாவிலும் நாகஸாகியிலும் வீசப்பட்டன.

அன்று எடுக்கப்பட்ட அந்தத் துரதிர்ஷ்டவசமான நடவடிக்கையிலிருந்து தொடங்கி இவ்வுலகம் அணுகுண்டு என்ற கோர மிருகத்தின் பிடியில் சிக்கிவிட்டது. அந்தச் சைத்தானின் பரம்பரையாகத் தோன்றிய மற்ற விளைவுகளிலும் உலகம் சிக்கிவிட்டது. நேச நாடுகளின் பல படைத் தலைவர்கள் — முக்கியமாக அமெரிக்கத் தளபதிகள் சிலர் — இந்த விளைவுகளை முன்பே எதிர்பார்த்து, எச்சரித்து எழுதினர். ஆயினும் பயனில்லை. அணுகுண்டு வீச்சுக்குப்பின் ருஷியாவுக்கும் மற்ற நேசநாடுகளுக்குமிடையே பனிப்போர் தொடங்கிற்று. அசல் யுத்தம் மூண்டால் ருஷியா அணுகுண்டு போடுமோ என்று அமெரிக்காவும், அமெரிக்கா அணுகுண்டு போடுமோ என்று ருஷியாவும் பரஸ்பரம் பயப்பட்டுக் கொண்டே தத்தம் அணு ஆயுதக் கையிருப்பைப் பெருக்கி வந்துள்ளன.

ஆறு ஆண்டுகளுக்குமுன், அணுகுண்டுகளைச் சோதனை செய்து பார்த்து உலகச் சூழலை நச்சு மயமாக்குவதை நிறுத்துவதற்கு நடவடிக்கை எடுக்கப்பட்டது. பூமி மட்டத்துக்கு மேல் அணு ஆயுதப் பரிசோதனைகளை நிறுத்துவதற்கு அமெரிக்காவும் பிரிட்டனும் ருஷியாவோடு உடன்படிக்கை செய்து கொண்டன. இதனால் உலகின் சூழலும் நீரும் மாசாவது தடுக்கப்பட்டது. இவ்வுடன்பாடு கண்டது எளிய காரியமல்ல. ருஷியப் பிரதமர் குருஷேவும், அமெரிக்க ஜனாதிபதி கென்னடியும் விடாமுயற்சியுடன், தீரத்துடன் எடுத்த நடவடிக்கைகளின் வெற்றியாகவே இந்த நல்ல முன்னேற்றம் உண்டாயிற்று. ஆயினும் இந்த உடன்பாடு ஏற்படுவதில் பிரான்ஸ் ஒத்துழைக்கவில்லை. ஏற்கனவே அணு ஆயுதத்தைக் குவித்துக் கொண்டுள்ள வல்லரசுகளுக்கு மட்டுமே இவ்விஷயத்தில் ஏகபோக்கியம் ஏற்படுவதைத் தான் ஒப்ப முடியாது என்றும், (பிரான்ஸ் போன்ற) மற்ற நாடுகளும் அணு ஆயுதம் தயாரித்து அவற்றைச் சோதித்துப் பார்ப்பதை மேற்படி உடன்பாடு தடை செய்வதால் அதற்குத் தனது அங்கீகாரம் கிடையாதென்றும் பிரான்ஸ் வாதம் செய்தது. ஏதோ ஒரு ரூபத்தில் இந்த வாதம் இன்றளவும் நீடிக்கப்பட்டு வருகிறது.

இப்போது பூமிக்கடியே அமெரிக்காவும் ருஷியாவும் அணு ஆயுத சோதனைகள் செய்து வருகின்றன. பிரான்ஸோ பூமிக்கு மேற்சூழலிலும் அணு ஆயுதங்களை வெடித்துப் பார்க்க உரிமை கொண்டாடுகிறது. இதே போல் உடன்படிக்கையில் கையெழுத்திடாத இன்னொரு அணு ஆயுத நாடு சீனம். வெகு சமீப காலத்தில் அணு ஆயுத உற்பத்தியில் இறங்கிய சீனம் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் உடன்பட மறுக்கிறது. ஆரம்பத்திலிருந்து அணு ஆயுத வல்லரசுகளாக உள்ள அமெரிக்காவும் ருஷியாவும் பிரிட்டனும்

## காமகோடியின் கருணைமொழி



மதம் ஸயன்ஸுக்கு ஒத்து வந்தால்தான் அதை ஒப்புக் கொள்ள முடியும் என்கிறார்கள். ஆனால் ஸயன்ஸே மாறி வருகிறது. அறுபது வருஷங்களுக்கு முன் இருந்த ஸயன்ஸ் வேறு; முப்பது வருஷங்களுக்குமுன் இருந்த ஸயன்ஸ் வேறு; இப்போது இருக்கிற ஸயன்ஸ் வேறு. எனவே, என்றைக்கு இருக்கிற ஸயன்ஸை வைத்து நம் மதத்தைப் பரீட்சை பார்ப்பது? இப்படி யோசித்துப் பார்த்தால் நாம் அஞ்ஞான தசையில்தான் இருக்கிறோம் என்பது தெரியும்.

நமக்குத் தெரியாதது, புரியாதது யாவும் பொய் என்று சொல்வது நியாயமில்லை. நமக்குப் புரியாமல் இருந்தாலும் இப்போது இருக்கும்படியான சாஸ்திரங்களை ஜாக்கிரதையாக ரட்சிக்க வேண்டும். இன்றைக்குப் புரியாவிட்டாலும் பின்னொரு காலத்தில் இவற்றின் உபயோகம் தெரியக்கூடும் என்பதால் இவற்றைக் காப்பாற்றிக் கொடுக்க வேண்டும்.

எதையும் கண்டனம் பண்ண நமக்கு அதிகாரம் இருப்பதாக நினைக்காமல், எதிலும் உள்ள உண்மையைப் புரிந்து கொள்ள முயலும் அதிகாரம்தான் நமக்கு உண்டு என்று நினைக்க வேண்டும். ஆஞ்சநேயர் நமக்கு இப்பேர்ப்பட்ட மனப்பான்மையை அநுக்கிரகம் செய்ய வேண்டும். அவரைப் பிரார்த்தனை செய்பவர்களுக்கு ஒரு குறைவும் இல்லை.

கடந்த இருபத்து மூன்றாண்டுகளாக மனித குலத்துக்கு எதிராகத் தாங்கள் ஒரு மகத்தான குற்றம் செய்து விட்டதாக உணருகின்றன. எனவே, இந்தப் பேய் ஆயுதம் உலக நாடுகளிடையே மேலும் பரவாமல் தடுக்க வேண்டுமென விரும்புகின்றன. இதற்காக ஓர் ஒப்பந்தம் ஏற்படுவதற்கு அவை ஐ. நா சபையில் உள்ள பெரும்பாலான நாடுகளின் சம்மதத்தைப் பெற்றுவிட்டன. சீனமும் பிரான்ஸும் இதில் சேரவில்லை. சீனம் உலகச் சட்டத்துக்கு உட்படாமல் வெளியே நிற்கிற சுயேச்சை நாடு. வல்லரசுகளின் அணு ஆயுத ஏகபோக்கியத்தை பிரான்ஸ் ஆட்சேபிப்பதால், மற்ற நாடுகளில் அணு ஆயுதம் பரவுவதைத் தடுக்கக் கூடாது என்கிறது. மற்ற சில நாடுகளும் பிரான்ஸைப் பின்பற்றுகின்றன. துரதிருஷ்டவசமாக இந்தியாவும் அவற்றில் ஒன்று.

யுத்தம் என்பதே இல்லாமற் செய்ய முடியாவிடினும், அணு ஆயுதப் பேயை நிச்சயம் ஒழித்தாக வேண்டும் என்று இந்தியா உட்பட சகல நாடுகளும் ஒப்புக் கொள்கின்றன. ஆயினும், அணு ஆயுதப் பரவலைத் தடுக்கும் ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவதற்கு இந்தியா முதலிய நாடுகள் ஆட்சேபிக்கின்றன. மற்ற நாடுகள் புதிதாக அணு ஆயுதம் தயாரிக்கக் கூடாது என்று விதிப்பதற்கு முன்னதாக, தற்போது அணு ஆயுதம் படைத்துள்ள நாடுகள் தங்களது ஆயுதக் கையிருப்பை அழித்துவிட வேண்டும் என்று இந்நாடுகள் கூறுகின்றன.

அணு ஆயுதங்களை அழித்தாக வேண்டும் என்பதை நாம் ஒப்புக் கொள்கிறோம். ஆனால் இப்போது நாம் விவகாரத்தின் நடு மையத்தில் இருக்கிறோம். சிக்கலான பிரச்னைகளை எதிர்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். அணு ஆயுதத்தைக் குவித்துக் கொண்டுள்ள நாடுகளிடையே பரஸ்பர நம்பிக்கை இன்னமும் ஏற்படாததால், யார் முதலில் அணு ஆயுதத்தைக் குறைத்துக் கொள்ளத் தொடங்குவது என்ற கேள்வி எழுகிறது. தனது சக்தியை விட்டுக் கொடுக்கத் தொடங்கும் ஒரு நாடு, மற்ற நாடும் அதேபோல் செய்யும் என்று நம்பவில்லை. உலக சமாதானத்துக்கும் அணுஆயுத பரிகரணத்துக்கும் இடையே பெரும் பாறையாக நிற்பது இந்த நம்பிக்கையின்மையே. இன்றைய நிலையில் அசாத்தியமெனத் தோன்றும் இத்தகைய நம்பிக்கை தோன்றி அணு ஆயுத பரிகரணத்துக்கு வழி செய்யும் வரையில், மற்ற நாடுகளில் அணு ஆயுதங்கள் பரவுவதைத் தடுக்கக் கூடாது எனில், உலகின் ஆபத்தையும் பெருக்குவதாகவே ஆகும். எனவே, எந்த இடத்தில் நல்ல காரியம் தொடங்க எளிதாயிருக்கிறதோ அங்கே தொடங்கிவிட வேண்டும். படிப்படியாகப் பரஸ்பர நம்பிக்கைக்கு வழி பிறக்கச் செய்ய வேண்டும். ஆயுத பரிகரணம், ஆயுதப் பரவல் தடுப்பு, பரஸ்பர நம்பிக்கை முதலிய பல காரியங்களையும் ஏககாலத்தில் செய்ய வேண்டும் என்று காத்துக் கொண்டு, அப்படிப்பட்ட ஒரு காலம் பிறக்கிற வரையில் ஏதும் செய்யாமல் உட்கார்ந்திருப்பது தகாது. முதல் அவசரம் எது, அடுத்தபடியானது எது என்பனவற்றை வரிசைப்படுத்திக் கொண்டு, நிதானத்துடன் ஒவ்வொரு படியாக எடுத்து வைக்க வேண்டும். அவ்வாறு ஒவ்வொரு படியாக முன்னேறும்போது அடுத்த படிக்குரிய நம்பிக்கையும் எழும்பும். கடைசியில் மனித குலத்தின் எதிர்கால நல்வாழ்வுக்கே நம்பிக்கை ஊட்டியதாகும்.

மனித குலத்தின் மீது மகத்தான மிருக பலத்தைப் பிரயோகிக்கும் சக்தி தம் இருவரிடம் மட்டுமே இருக்க வேண்டும் என்ற கருத்தில் அமெரிக்காவும் ருஷியாவும் செய்த சதித்திட்டம்தான் அணு ஆயுதப் பரவல் தடுப்பு ஒப்பந்தம் என்று யாரும் எண்ண முடியாது.

இன்றையச் சூழ்நிலையில் மனித குலத்தின் ஆபத்தைத் தடுக்கக் குறைந்தபட்சமாக என்ன செய்ய முடியுமோ அதை இவ்விரு வல்லரசுகளும் மனப்பூர்வமாகச் செய்திருக்கின்றன என்பது திண்ணம். அவை தம்மிடமுள்ள அணு ஆயுதத்தை இப்போது அழிக்க முற்படாததற்குக் காரணம், அணு ஆயுதம் படைத்திராத நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்துவதற்காக அல்ல. இரு வல்லரசுகளிடையே இவ்விஷயத்தில் பரஸ்பர நம்பிக்கை இல்லாததே காரணம்.

மனித குலத்தின் வாழ்வு என்கிற மகத்தான விஷயத்தைக் குறித்த இப்பிரச்னையில் வாதங்களை விட்டு, ஆண்டவனிடம் பிரார்த்திப்பதில் எனக்குள்ள நம்பிக்கைக்குத் திரும்புகிறேன். வாதங்கள் நிறையச் செய்துவிட்டேன். ஆயினும் சந்தேகத்தில் ஊன்றியவர்களிடம், பயத்தினால் பிடிக்கப்பட்டுள்ளவர்களிடம் வாதங்களால் உண்மையைப் பதிவிக்க முடியாது. ஐயங்களும் அச்சங்களும் தளருவதற்கு ஆண்டவன் அருள் செய்தால் தான் வாதம் பலன் தரும். எனவே, ஆண்டவன் அருளுக்குப் பிரார்த்திப்போம். எந்த ஈசுவரனின் விளக்கவொண்ணு சக்தியும் மதியும் இவ்வுலகை ஆள்கின்றனவோ, அந்த ஈசுவரனால்தான் வல்லரசு ஆட்சியாளர்களின் இதயத்தில் தைரியத்தையும், பரஸ்பர விசுவாசத்தையும் ஊட்ட முடியும்.

எல்லா இதயங்களிலும் இறைவன் உறைகிறான் என்பது பொதுப்படை உண்மை. நாம் எதிர்ப்பவர்களின் இதயத்திலும் அவன் இருக்கிறான் என்பதைக் குறிப்பாக மனத்தில் கொள்ள வேண்டும். வாதங்கள் தோற்றுப் போனபின் — வாதங்கள் பொதுவாகத் தோற்றுப் போவதுதான் வழக்கம் — எதிராளியின் இதயத்தில் உள்ள ஈசுவராம்சத்தை நம்பி, அதனைப் பிரார்த்தித்து, அதனிடம் பூரணமாகச் சரண் புகுந்து, உண்மையை விஞ்ஞாபனம் செய்ய வேண்டும்.

விஞ்ஞானிகளால் ஆராய்ந்து முடியாத அனந்தமான அதிசயங்களைக் கொண்ட இப்பிரபஞ்சத்தை இயக்கி வைக்கிற பேரறிவு ஒன்று இருந்தேயாக வேண்டும் என்றார் பார்க். இது மூடநம்பிக்கை அல்ல. பிரபஞ்சத்தை அதன் போக்கிலேயே போகவிட்டு, அதன் பின்னுள்ள சக்தியை நாட மனம் கொள்ளாம விருப்பது, விமோசனத்தைத் தேடச் சக்தியில்லாமல் தப்பித்து ஓடப் பார்ப்பதேயாகும். இது உண்மையான பகுத்தறிவு மார்க்கமல்ல. ஆண்டவன் அருளால் ஏற்படும் விமோசனத்தில் நம்பிக்கை இல்லாமல், நம் முயற்சியோடு நின்றுவிடுகிற போக்குத்தான் அவநம்பிக்கைச் சித்தாந்தம்.

'ஒரு பெரும் தீங்கு நடக்க ஆண்டவன் அனுமதிப்பானேன்? பிறகு அதைச் சரி செய்வதற்கு நாம் பிரார்த்திக்க வேண்டும் என்று அவன் காத்திருப்பானேன்?' என்று கேட்கலாம். ஆண்டவனின் வழிகளை அறிய முடியாது. எனவே, இக்கேள்விக்கு விடை சொல்வது எளிதல்ல. இருந்தாலும் ஒரு மாதிரி விடையாக ஒன்று சொல்வேன்: நாம் மகா பாவம் புரிகிறோம்; முன்னேற்றத்தை விரைவுபடுத்த வேண்டும் என்பதற்காகக் கணக்கிலடங்காத உயிர்களைச் சித்திரவதை செய்தோ கொன்றோ வருகிறோம்; இந்த ஒழுங்கீனங்களுக்காக ஆண்டவன் எந்தத் தண்டனை அளித்தாலும் அதிகமாகாது. ஆனால் இந்தப் பயனற்ற வாதங்களைச் சொல்லி நான் வாசகர்களை அலுப்படையச் செய்ய வேண்டியதில்லை. ஆண்டவனின் அறியவொண்ணுத் தன்மை எனும் திரையைத் தூக்கிப் பார்க்க முற்படாமல் எளியவர்களாக வணங்கிப் பிரார்த்திப்போம்; நம்புவோம். அறிய முடியாததை அறிய முயல வேண்டாம். நாம் அழிந்து போகாமலிருக்க அடக்கத்துடன் பிரார்த்தனை புரிவோம்.

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)**

ப்ரெஸ்டிஜ் — வாழ்க்கையை மேலும் சிறப்பாக அனுபவிப்பதற்குத் தேவையான நேரத்தை அளிக்கிறது.

## அப்பாடி! இப்பொழுது என்னால் விருந்துகள் அளிக்க முடியும்... எல்லாம் ப்ரெஸ்டிஜ் மகிமை!

இதற்கு முன் இரண்டு விருந்தாளிகளைக்கூட உபசரிக்க முடியாமலிருந்தது! அதற்கு நான் முழுவதும் அடுப்படியில் உட்கார்ந்துகொண்டிருக்க வேண்டுமே! இப்பொழுது ப்ரெஸ்டிஜ் ப்ரெஷர்குக்கர் வாங்கிவிட்டேன்! சமைப்பதும் விருந்தளிப்பதும் இவ்வளவு இன்பமாக இருக்கும் என்று நான் நினைக்கவேயில்லை! சீக்கிரம் இன்னுமொரு விருந்தளிக்கப்போகிறேன்! சமையல் நேரத்தைப் பாதியாகக் குறையுங்கள்! எரிபொருள் செலவைப் பெருவாரியாக மிச்சப படுத்துங்கள்! இப்படி மிச்சமாகும் நேரத்தையும், பணத்தையும், வாழ்க்கையை மேலும் சிறப்பாக அனுபவிக்கச் செலவழியுங்கள்! ப்ரெஸ்டிஜ் ப்ரெஷர் குக்கர் வாங்குங்கள்: தேர்ந்தெடுக்க 5 மாடல்கள் (4.5 லிட்டர் முதல் 9.5 லிட்டர் வரை கொள்திறனுடையவை) உள்ளன. இந்தியா முழுவதும் விற்பனைக்கும், பின்சர்வீஸ் அளிப்பது ப்ரெஸ்டிஜ் மட்டுமே!




**Prestige** ப்ரெஸ்டிஜ் எல்லாவித உணவுகளையும் சமைக்க உதவுகிறது.

**PREETT** ப்ரீத் பாத்திரங்கள் உங்கள் சமையலறைப் பொக்கிஷங்கள்.

TTP-7793.TAM



தயாரிப்பாளர்கள்:
டிடி (ப்ரைவேட்) லிமிடெட்
பெங்களூர்-16.

# ராஜாஜியின் கருத்துக்கள்

தேசிய ஐக்கியக் குழு ஒன்று நம் நாட்டில் ஆட்சிப் பொறுப்பை ஏற்க வேண்டும். நமது உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான சகல நடவடிக்கைகளையும் அது எடுக்க வேண்டும். ராணுவச் செலவைக் குறைப்பதற்காக இயன்றதவ்வளவையும் திட்டமிட்டுச் செய்ய வேண்டும். நமது அந்நியக் கடன் சுமையைக் குறைப்பதற்குச் சக்தி வாய்ந்த நடவடிக்கைகளைத் தேசிய ஐக்கியக் குழுவின் அரசாங்கம் மேற்கொள்ள வேண்டும். இவை யாவற்றுக்கும் மேலாகத் தரும நெறிகளை மீண்டும் நாட்டில் நிலைநாட்டுவதற்காக உரிய காரியமனைத்தையும் செய்ய வேண்டும். இந்த நான்கு மகத்தான பொறுப்புக்களை மனப் பூர்வமாக ஏற்றுக் கொண்டு, அதிகாரப் பசியை அறவே நீக்கிவிட்டு ஆட்சி புரிகிற தேசிய ஐக்கியக் குழுவே நமது தேவை. இந்த நான்கும் நடைபெறுவிடில் நமக்கு விமோசனமில்லை.

எதிர்க் கட்சிகள் தமது தனி உருவிலும் பெயரிலும் மிகுந்த பாசம் வைத்து, அது காரணமாக ஒரு தேசிய ஐக்கியக் குழுவாக இணையாமல், இன்று போலவே எதிர்க் கட்சி வரிசையில் அமர்ந்திருப்பதில், மகிழ்ச்சியும் திருப்தியும் கொண்டிருந்து விட்டால், அப்படிப்பட்ட எதிர்க் கட்சிகளின் வாழ்வு காங்கிரஸ் என்கிற நிரந்தர ஆளும் கட்சியை உண்ணி போலப் பிடுங்கித் தின்கிற வாழ்வேயாகும். இது கட்சித் தலைவர்களுக்கும், அங்கத்தினர்களுக்கும் தனிப்பட்ட முறையில் நல்லதாக இருக்கலாம். ஆனால் இதனால் தேசிய நோக்கம் ஏதும் நிறைவேறாமலே போகும். ஏனெனில் இன்றைய நிலையில் பெரும்பாலான எதிர்க் கட்சிகள் காங்கிரஸ் கொள்கைகளை எதிர்க்கவில்லை; அக்கொள்கைகளைத் தமக்கு முன்மாதிரியாகவே கொண்டுள்ளன.

காங்கிரஸ் கட்சியின் பெர்மிட்—லைசென்ஸ் ஆட்சியை அகற்றி, இந்தியாவை ஆளும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டிய தேசிய ஐக்கியக் குழுவை 'சத்திய ஸ்வராஜ்ய தளம்' எனலாம். இந்தத் தளத்தில் சேருகிற கட்சிகள் தமது தனி உருவத்தை அடியோடு இழந்துதான் தீரவேண்டும் என்பதில்லை. நிலைமை திருந்துகிற வரையில் மற்ற விஷயங்களை விட்டு, மேற்சொன்ன நான்கு அம்சத் திட்டத்துக்கு மட்டுமே ஐக்கியக் குழு தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். நான்கு அம்சத் திட்டத்தில் ஒன்றுபட்டு நெருக்கடி நிலையைத் தீர்த்த பிறகு கட்சிகள் தமது தனிப்பட்ட இலட்சியங்களை எடுத்துக் கொள்ளலாம்.

ஃஃ

(செக்கோஸ்லோவேகியாவில் கம்யூனிஸத்தின் இரும்புப் பிடி தளர்ந்து சில சுதந்திரங்கள் வழங்கப்பட வேண்டும் என்பதற்காக ருஷியாவை எதிர்த்து முகம் கொடுத்து வரும்) செக் கம்யூனிஸ்ட் தலைவர் டுப்சே அவர்களைப் பாராட்டுவதுடன் உலகின் சுதந்திர நாடுகள் சும்மா இருந்து விடக்கூடாது. சுதந்திரத்துக்காக ஹங்கேரி போராடி, இப்போராட்டத்தை ருஷியா நசுக்கியபோது சுதந்திர உலகம் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தது. இப்போதேனும் அப்படியின்றி ருஷியாவின் படை பலம் செக்கோஸ்லோவேகியாவை நெரித்துக் கொன்று விடாமல் சுதந்திர நாடுகள் பார்த்துக் கொள்ளும் என்று நம்புவோம். செக்கோஸ்லோவேகியாவின் புரட்சி ருஷியாவுக்கு ஒரு மறைமுக அநுக்கிரகமாய் இருக்க முடியும். எப்படியெனில், இப்புரட்சி காரணமாக கம்யூனிஸம் என்பது

## கொடிமரம் எழும்பட்டும்!

மனித உடலைத் தேவாலயமாகச் சொல்வதுபோல், தேவாலயத்தையும் உன்னதமானதொரு திவ்விய சரீரமாகச் சொல்வதுண்டு. மனித உடலின் முதுகுத் தண்டு போன்றது தேவாலயத்தின் துவஜஸ்தம்பம். முதுகுத்தண்டின் வழியாக ஆதார கமலங்களில் ஜீவசக்தியை ஏற்றிச் சிரத்தின் உச்சிக்குக் கொண்டு போவதே முக்தி அல்லது விடுப்பேறு. இந்த முக்தி நிலையைக் குறிக்கவே துவஜஸ்தம்பத்தின் உச்சியில் திருவிழாக்களின் தொடக்கத்தில் கொடி ஏற்றுவிக்கப்படுகிறது. மனித உடலின் பௌதிக சக்திக்கும், புத்தி சக்திக்கும், ஆன்மீக சக்திக்கும் முதுகுத்தண்டு எவ்வளவு அவசியமோ, அதுபோல் ஆலயத்தின் புனிதத்துக்குக் கொடி மரமாகிய துவஜஸ்தம்பம் அத்தியாவசியமாகும்.

சென்னை மாநகரத்துக்கு வெகு அருகே, பூந்தமல்லி நெடுஞ்சாலையை ஒட்டி அமைந்துள்ள கோயம்பேடு என்கிற சிற்றூரிலுள்ள புராதனப் பிரசித்தி பெற்ற ஸ்ரீ குசலவபுரீசுவரர் ஆலயத்திலும் ஸ்ரீ வைகுண்டவாசப் பெருமாள் ஆலயத்திலும் உள்ள துவஜஸ்தம்பங்கள் சிதிலமடைந்து விட்டன. வைகுண்டவாசப் பெருமாள் ஆலய துவஜஸ்தம்பத் திருப்பணி இம்மாதம் 18ந் தேதி தொடங்கப்படுகிறது. ஆஸ்திக அன்பர்கள் யாவரும் புதிய துவஜஸ்தம்பம் நிறுவப்பெற்று அதன் உச்சியில் எம்பெருமானின் புகழ்க்கொடி பறக்கத் தாராளமாக உதவ வேண்டுகிறோம்.

பொருள் அனுப்பவேண்டிய விலாசம் :

**திரு கே. ஆர். நந்தகோபால்,** திருப்பணிக் காரியதரிசி
குசலவபுரீசுவரர் — வைகுண்டவாசப் பெருமாள் தேவஸ்தானம்
கோயம்பேடு, சென்னை - 49.

சில வறட்டுக் கொள்கைவாதிகளின் பிடி கொடுக்காத சர்வாதிகாரக் கொடுங்கோன்மையாக இருக்கும் நிலை மாறக்கூடும். செக்கோஸ்லோவேகியப் புரட்சியாளர் விரும்பும் கருத்துச் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம், பொது விவாதச் சுதந்திரம் இவை அளிக்கப்படுமாயின் கம்யூனிஸம் என்பதே கட்சியற்ற ஜனநாயகத்தில் செய்த ஒரு பரிசோதனையாகும்.

ஃஃஃ

ருஷியப் பிடியிலிருந்து விடுபட விரும்பும் செக்கோஸ்லோவேகியாவின் மீது உலகத்தின் கவனம் திரும்பியுள்ளது. இதுவரை நயத்துக்கும் பயத்துக்கும் அடிபணியாமலே இருக்கிறார் டூப்சே. செக்கோஸ்லோவேகியாவில் எழுந்துள்ள புரட்சி உணர்வை விட இதில் அதிக முக்கியமான அம்சம், ருஷியாவிலும் இப்புரட்சிக்கு அநுதாப உணர்வு ஏற்பட்டிருப்பதேயாகும்.

செக்கோஸ்லோவேகிய சீர்திருத்தவாதிகளின் துணிகரமான முயற்சியை ருஷிய மக்கள் ஆதரிக்கிறார்களே ஒழிய அடக்க விரும்பவில்லை என்று பிரபல ருஷிய பௌதிக விஞ்ஞானியான பேராசிரியர் அன்ட்ரை ஸகரவ் கூறுகிறார். பகிரங்கமாகப் பிரசுரிக்கப்படாமல், ரகசியமாகச் செலாவணியாகும் தமது அறிக்கையில் அவர், செக் மக்கள் அறிவுச் சுதந்திரத்தின் அவசியத்தைப் புரிந்து கொண்டு விட்டார்கள் என்கிறார். அறிவுச் சுதந்திரம் இல்லாததால் தான் ருஷியாவில் புதிய, ஆழ்ந்த க த்துக்களே தோன்ற முடியாத வறட்சி நிலைமை ஏற்பட்டு விட்டது என்றும் அவர் கூறுகிறார். இத்தகவலை 'நியூயார்க் டைம்ஸ் வீக்லி ரிவ்யூ' (ஜூலை 14) தெரிவிக்கிறது.

ஃஃஃ

இன்றைய பணக்காரர்களிடம் சுதந்திரக் கட்சிக்கு எவ்விதமான விசேஷ ஈடுபாடும் கிடையாது. அதே போல் இன்றைய தொழிலாளர்களிடத்தும் தனிப்பட்ட அக்கறை கிடையாது. சுதந்திரக் கட்சி முன்னேற்றம் என்ற ஒன்றிலேயே அக்கறை கொண்டது. புதிய முதலீட்டாளர்கள் தோன்றக் கதவு திறந்திருக்க வேண்டும்; புதிய தொழிலாளர்கள் வேலைகள் பெறப் பாதை திறந்திருக்க வேண்டும் என்பதிலேயே சுதந்திரக் கட்சிக்கு ஈடுபாடு. எந்தத் திசையிலும் கதவை அடைத்துக் கொள்ளுகிற போக்கை அது விரும்பவில்லை. இச்சந்தர்ப்பத்தில் லட்விக் வான் மைஸிஸ் கூறுவதை நினைவு கொள்வோம்:

> ஏற்கனவே இயங்கிக் கொண்டிருக்கும் நிறுவனங்களின் உரிமையாளர்களான பணக்காரர்களுக்கு (சர்க்கார் தலையீடற்ற) சுதந்திரத் தொழில் போட்டியில் அக்கறை இல்லை. தங்களது சொத்தை சர்க்கார் பறிமுதல் செய்தால் அவர்கள் எதிர்ப்பார்களாயினும், அவர்களது வர்க்கத்தின் சுயநலம் காரணமாக, (சுதந்திரப் போட்டியின் கீழ்) புதிய முதலீட்டாளர்கள் தோன்றித் தங்களுக்குச் சவால் விடுவதைத் தடுக்கும் நடவடிக்கைகளையே அவர்கள் ஆதரிப்பார்கள். எனவே சுதந்திரத் தொழில் முயற்சிக்கும், சுதந்திரத் தொழில் போட்டிக்கும் போராடுபவர்கள் இன்றைய பணக்காரர்களைக் காப்பதற்காகப் போராடவில்லை. இன்று அநாமதேயமாக உள்ள — நாளைக்கே முதலீட்டாளர்களாகக்கூடிய — மக்களுக்குச் சுதந்திரமாக இயங்க வசதி வேண்டும் என்பதே சுதந்திரத் தொழிற் போட்டியை விரும்புவோரின் லட்சியம். அடுத்த தலைமுறையின் வாழ்வை மேலும் வளம்பெறச் செய்யக் கூடியவர்களைத் தடுத்துவிடாமல் வழி திறந்திருக்க வேண்டும் என்று கூறும் முன்னேற்றவாதிகளே சுதந்திரப் போட்டி ஆதரவாளர்.

---



## மட்டை மகத்துவம்!

இந்த வாரம் பொருளடக்கப் பகுதியில் இடம் பெறும் விதத்தில் அந்தக் கிரிக்கெட் பாட்டில் அப்படி என்ன விசேஷம்? அதைப் பிடித்துக் கொண்டிருப்பவர் கௌட்ரீ என்பதால் அது மகத்துவம் பெறுகிறது.

இங்கிலாந்தின் இன்றைய கிரிக்கெட் டெஸ்ட் காப்டன் கௌட்ரீ என்ன இலேசுப்பட்டவரா? தமது நாட்டுக்காக நூறு கிரிக்கெட் டெஸ்ட் பந்தயங்களில் கலந்து கொண்டு ஆடியிருக்கிறார் என்றால் இங்கிலாந்து அவரது திறமையில் எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறது என்பது புலனாகவில்லையா? உலகில் வேறு எந்த தேசத்துக் கிரிக்கெட் ஆட்டக்காரரும் புரியாத அரிய சாதனை இது.

கிரிக்கெட் பாட்டில் பொருத்தப்பட்டுள்ள வெள்ளித் தகட்டில் அவர் எந்த எந்த தேசத்துக்கு எதிராக எந்த எந்த ஆண்டுகளில் எத்தனை கிரிக்கெட் பந்தயங்களில் ஆடியிருக்கிறார் என்ற விவரங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

2

# சிறுவர் விருந்து



தயாரிப்பு: வாண்டுமாமா

## பதில் தெரியுமா ?

ஐந்து கேள்விகள் :

★ உலகில் உள்ள கடல்களில் மிகப் பெரிய மூன்றை வரிசைப்படுத்திக் கூறு.

★ பூமத்திய ரேகையில் பூமியின் சுற்றளவு எத்தனை மைல்கள் ?

★ பூனையின் கால்களில் உள்ள விரல்கள் எத்தனை ?

★ சூரியனுக்கு மிக அருகேயுள்ள கிரகம் எது ?

★ எந்த உலோகம் கடல் நீரிலிருந்து எடுக்கப் படுகிறது.

## உன் கண் உன்னை ஏமாற்றினால்....!




இங்குள்ள படத்தில் 'A', 'B' என்று குறித்துள்ள கோடுகளைப் பாருங்கள். எந்தக் கோடு நீளமானது? உங்கள் முடிவைச் சொல்ல வேண்டாம். 'ஸ்கேல்' கொண்டு அளந்து பார்க்கும்போது உங்கள் விழிகள் வியப்பினால் பிதுங்கும்.




மேலேயுள்ள திராட்சைப் பழக் குலைகளில் பெரிதாக உள்ள நான்கைத் தனதாக்கிக் கொள்ளத் தவிக்கிறார் நரியார். அவருக்கு வழி காட்டுகிறீர்களா ? கீழேயுள்ள ஏழு புள்ளிகளில் ஏதாவதொன்றிலிருந்து ஆரம்பியுங்கள்.

## வெண்ணிலவு!

பௌர்ணமியன்று நீலவானத்திலே முழுநிலவு எத்தனை அழகாகப் பிரகாசிக்கிறது? அத்தனை அழகான ஒளி சந்திரனிடமிருந்து வருகிறது என்று தானே எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்? அதுதான் இல்லை. சந்திரனுக்கு ஒளியே கிடையாது. சந்திர மண்டலத்தில் இயக்கமே கிடையாது. உஷ்ணத்தையோ வெளிச்சத்தையோ அதனால் உற்பத்தி செய்ய முடியாது. அது செத்துப் போன கிரகம். சூரியனோ ஒளியையும் உஷ்ணத்தையும் உற்பத்தி செய்யும் வாயுக்களால் ஆனது. எப்போதும் எரிந்து கொண்டிருக்கிறது. இப்படித் தகதகக்கும் சூரியனின் ஒளி சந்திரனில் பட்டுப் பிரதிபலிப்பதே நீங்கள் காணும் குளுமையான சந்திரனொளி. ஒரு முகம் பார்க்கும் கண்ணாடி தன் மீது படும் ஒளியை எப்படிப் பிரதிபலிக்குமோ அப்படித்தான் சந்திரனும் ஓர் ஒளி ஆடியாக இயங்குகிறது. சூரிய ஒளி சந்திரனின் மீது வெகு தூரத்திலிருந்து படுவதால் அது பிரதிபலிக்கும் ஒளி சூரிய ஒளியைப் போலில்லாது பிரகாசம் குறைந்தும் குளுமையாகவும் இருக்கிறது.




சந்திரனின் ஒளி சூரியனுடைய ஒளியைப் போல இருக்க வேண்டுமானால் இன்று நாம் காணும் பூரண நிலவைப் போல 6,00,000 பூரண நிலவுகள் ஒரே சமயத்தில் பிரதிபலிக்க வேண்டும். அப்போது சூரிய ஒளியின் பிரகாசமும் உஷ்ணமும் சந்திர ஒளியிலும் இருக்கும். நாம் காணும் ஒரு பௌர்ணமிச் சந்திரனின் ஒளியை எதற்கு ஒப்பிட வேண்டும் தெரியுமா? நூறு காண்டில் பவர் மின்சார விளக்கை இருபத்தி நான்கு கெஜ தூரத்துக்கப்பாலிருந்து பார்த்தால் எப்படியோ அப்படித்தான்.



அரிச்சுவடி வகுப்புக்குச் சென்ற கழுதைக் குட்டி முதல் நாளே இடிந்துபோய் வீடு திரும்பிற்று.

"நான் நாளைக்குப் பள்ளிக்கூடம் போகமாட்டேம்மா."

"ஏண்டா கண்ணு அப்படிச் சொல்றே?"

"பின்னே என்னம்மா. எனக்கோ எழுதத் தெரியல்லே. பேசவும் கூடாதுங்கறு.... அங்கே போய் என்ன பிரயோசனம்?"

## முயன்று பாரேன் !

| ↓ | ↓ | ↓ | ↓ | |
|---|---|---|---|---|
| ■ | | | | 21 |
| | ■ | | | 22 |
| | | ■ | | 16 |
| | | | ■ | 19 |
| 18 | 21 | 21 | 18 | ■ |

பக்கத்தில் உங்கள் திறமைக்கு ஒரு கணக்கு. கட்டங்களின் ஓர் ஓரத்தில் மட்டும் ஏதோ சில எண்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன, இல்லையா? நீங்கள் செய்ய வேண்டியது என்ன தெரியுமா?

காலியான கட்டங்களில் ஒன்று முதல் பன்னிரண்டு வரையிலான எண்களைத் தகுந்தபடி அமைக்க வேண்டும். அப்போது அம்புக் குறியிட்ட வரிசைக் கட்டங்களைக் கூட்டினால் அதன் முடிவில் உள்ள எண்ணிக்கை கூட்டுத் தொகையாக வர வேண்டும். முடியுமா? முயற்சியுடையார் மகிழ்ச்சி யடைவார் !

**முயன்று பாரேன்! விடை இதுதான் :**

| ■ | 7 | 4 | 10 |
|---|---|---|---|
| 8 | ■ | 11 | 3 |
| 9 | 2 | ■ | 5 |
| 1 | 12 | 6 | ■ |

**ஐந்து கேள்விக்கு விடை இதோ !**

(1) பசிபிக், அட்லாண்டிக், இந்து மகா சமுத்திரம். (2) 24,902. (3) பதினெட்டு. முன்னங் கால்களில் காலுக்கு நான்கும் பின்னங்கால்களில் ஒரு காலுக்கு ஐந்தும் உள்ளன. (4) மெர்க்குரி. (5) மக்னீசியம்.




யானை, சிங்கம், புலி, கரடி
யாவும் உள்ள கூட்டத்தில்
அஞ்சி டாமல் சென்றுநானும்
அவற்றின் முதுகில் ஏறுவேன்

பானைக் குயவன் சக்கரம்போல்
பரப ரக்கச் சுற்றியே
பாய்ந்தே ஓடச் செய்துநானும்
பந்த யம்போல் விரட்டுவேன்!

என்னைப் போல நீங்களுந்தான்
இன்றே சிங்கம் கரடிமேல்
இம்மி கூடப் பயமில்லாமல்
ஏறி ஓட்ட விரும்பினால்

நன்றாய் அந்த இடத்தினுக்கே
நான்அ ழைத்துச் செல்கிறேன்
நன்கு காண்பீர் அவ்விடத்தில்
நல்ல குடைபோல் ராட்டினம்!



# மூன்றாம் அத்தியாயம் ♦ விண்ணகரக் கோயில் ♦

சில சமயம் சிறிய நிகழ்ச்சிகளிலிருந்து பெரிய சம்பவங்கள் விளைகின்றன. வந்தியத்தேவன் வாழ்க்கையில் அத்தகைய ஒரு சிறிய நிகழ்ச்சி இப்போது நேர்ந்தது.

சாலையோரத்தில் நின்று பழுவேட்டரையரின் பரிவாரங்கள் போவதை வந்தியத்தேவன் பார்த்துக் கொண்டிருந்தான் அல்லவா? அவன் நின்ற இடத்துக்குச் சற்றுத் தூரத்திலேயே அவனுடைய குதிரை நின்று கொண்டிருந்தது.

பழுவேட்டரையரின் ஆட்களிலே, கடைசியாகச் சென்ற சிலரின் பார்வை அந்தக் குதிரைமீது சென்றது.



''அடே! இந்தக் குருதையைப் பாரடா!'' என்றான் ஒருவன்.

''குருதை என்று சொல்லாதேடா! குதிரை என்று சொல்!'' என்றான் இன்னொருவன்.

''உங்கள் இலக்கோண ஆராய்ச்சி இருக்கட்டும். முதலில் அது குருதையா அல்லது கழுதையா என்று தெரிந்து கொள்ளுங்கள்!'' என்றான் இன்னொரு வேடிக்கைப் பிரியன்.

''அதையும் பார்த்து விடலாமடா?'' என்று சொல்லிக் கொண்டு அந்த ஆட்களில் ஒருவன் குதிரையை அணுகி வந்தான். அதன் மேல் தாவி ஏற முயன்றான். ஏறப் பார்க்கிறவன் தன் எஜமானன் அல்ல என்பதை அந்த அறிவுக் கூர்மையுள்ள குதிரை தெரிந்துகொண்டது. அந்த வேற்று மனிதனை ஏற்றிக் கொள்ள மாட்டேன் என்று முரண்டு பிடித்தது.

''இது பொல்லாத குதிரையடா! இதன் பேரில் நான் ஏறக் கூடாதாம்! பரம்பரையான அரச குலத்தவன்தான் இதன்மேல் ஏறலாமாம். அப்படி என்றால் தஞ்சாவூர் முத்தரையன் திரும்பி வந்துதான் இதன் மேல் ஏறவேண்டும்!'' என்று அவன் சமத்காரமாகப் பேசியதைக் கேட்டு மற்ற வீரர்கள் நகைத்தார்கள்.

ஏனென்றால் தஞ்சாவூர் முத்தரையர் குலம் நசித்துப் போய் நூறு ஆண்டுகள் ஆகிவிட்டன. இப்போது சோழர்களின் புலிக் கொடி தஞ்சாவூரில் பறந்து கொண்டிருந்தது.

''குதிரையின் எண்ணம் அவ்விதம் இருக்கலாம். என்னைக் கேட்டால் செத்துப் போன தஞ்சாவூர் முத்தரையனைக் காட்டிலும் உயிரோடு இருக்கும் தாண்டவராயனே மேல் என்பேன்'' என்றான் மற்றொரு வீரன்.

''தாண்டவராயா! உன்னை ஏற்றிக் கொள்ள மறுக்கும் குதிரை நிஜக் குதிரைதானா என்று பார்த்துவிடு. ஒரு வேளை பெருமாளின் திருநாளுக்கு வந்த பொய்க்கால் குதிரையாக இருந்தாலும் இருக்கலாம்!'' என்றான் மற்றொரு பரிகாசப் பிரியன்.

''அதையும் சோதித்துப் பார்த்து விடுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு குதிரை மீது ஏறப்போன தாண்டவராயன் அதன் வாலை முறுக்கினான். ரோசமுள்ள அந்தக் குதிரை உடனே பின்னங்கால்களை நாலு தடவை விசிறி உதைத்து விட்டு ஓட்டம் பிடித்தது.

''குருதை ஓடுகிறதடா! நிஜக் குருதைதானடா!'' என்று அவ் வீரர்கள் கூச்சலிட்டு, ''உய்! உய்!'' என்று கோஷித்து ஓடுகிற குதிரையை மேலும் விரட்டினார்கள்!

குதிரை திருநாள் கூட்டத்துக்கிடையில் புகுந்து ஓடிற்று. ஜனங்கள் அதன் காலடியில்மிதிபடாமல் இருப்பதற்காகப் பரபரப்புடன் அங்கும் இங்கும் நகர்ந்து கொண்டார்கள். அப்படியும் அவர்களில் சிலர் உதைபட்டு விழுந்தார்கள். குதிரை தெறிகெட்டு வெறி கொண்டு ஓடியது.

இவ்வளவும் வந்தியத்தேவன் கண்ணெதிரே அதிசீக்கிரத்தில் நடந்துவிட்டது. அவனுடைய முகத் தோற்றத்திலிருந்து குதிரை அவனுடைய குதிரை என்பதை ஆழ்வார்க்கடியான் கண்டு கொண்டான்.

''பார்த்தாயா தம்பி, அந்தப் பழுவூர்த் தடியர்கள் செய்த வேலையை! என்னிடம் நீ காட்ட வந்த வீரத்தை அவர்களிடம் காட்டுவதுதானே ?'' என்று குத்திக் காட்டினான்.

வந்தியத்தேவனுக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. எனினும் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையைக் கடைப்பிடித்தான். பழுவூர் வீரர்கள் பெரும் கூட்டமாயிருந்தனர். அவ்வளவு பேருடன் ஒரே சமயத்தில் சண்டைக்குப் போவதில் பொருள் இல்லை. அவர்கள் இவனுடன் சண்டை போடுவதற்காகக் காத்திருக்கவும் இல்லை. குதிரை ஓடியதைப் பார்த்துச் சிரித்துவிட்டு, அவர்கள் விரைந்து மேலே நடந்தார்கள்.

குதிரை போன திசையை நோக்கி வந்தியத்தேவன் சென்றான். அது சிறிது தூரம் ஓடிவிட்டுத் தானாகவே நின்று விடும் என்று அவனுக்குத் தெரியும். ஆகையால் அதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. பழுவேட்டரையரின் அகம்பாவம் பிடித்த ஆட்களுக்கு என்றைக்காவது ஒரு நாள் நன்றாகப் புத்தி கற்பிக்க வேண்டும் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் அழுத்தமாகப் பதிந்தது.

புளியந்தோப்புக்கு அப்பால் ஜனசஞ்சாரம் இல்லாத இடத்தில் குதிரை சோகமே வடிவாக நின்று கொண்டிருந்தது. வந்தியத்தேவன் அதன் அருகில் சென்றதும் குதிரை கனைத்தது. 'ஏன் என்னை விட்டுப் பிரிந்து சென்று இந்தச் சங்கடத்துக்கு உள்ளாக்கினாய்?' என்று அந்த வாயில்லாப் பிராணி குறை கூறுவது போல் அதன் கனைப்புத் தொனித்தது. வந்தியத்தேவன் அதன் முதுகைத் தட்டிச் சாந்தப்படுத்தினான். பிறகு அதைத் திருப்பி அழைத்துக் கொண்டு

சாலைப்பக்கம் நோக்கி வந்தான். திருவிழாக் கூட்டத்தில் இருந்தவர்கள் பலரும் அவனைப் பார்த்து, "இந்த முரட்டுக் குதிரையை ஏன் கூட்டத்தில் கொண்டு வந்தாய் தம்பி! எத்தனை பேரை அது உதைத்துத் தள்ளிவிட்டது?" என்றார்கள்.

"இந்தப் பிள்ளை என்ன செய்வான்? குதிரைதான் என்ன செய்யும்? அந்தப் பழுவேட்டரையரின் முரட்டு ஆட்கள் அல்லவா இப்படிச் செய்து விட்டார்கள்?" என்று இரண்டொருவர் சமாதானமும் சொன்னார்கள்.

ஆழ்வார்க்கடியான் இன்னமும் சாலையில் காத்துக் கொண்டு நின்றான். "இதேதடா சனியன்? இவன் நம்மை விட மாட்டான் போலிருக்கிறதே!" என்று எண்ணி வந்தியத்தேவன் முகத்தைச் சுளுக்கினான்.

"தம்பி! நீ எந்தப் பக்கம் போகப் போகிறாய்?" என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

"நானா? கொஞ்சம் மேற்குப் பக்கம் சென்று, பிறகு தெற்குப் பக்கம் திரும்பிச் சிறிது கிழக்குப் பக்கம் வளைத்துக் கொண்டு போய், அப்புறம் தென் மேற்குப் பக்கம் போவேன்!" என்றான் வந்தியத்தேவன்.

"அதை யெல்லாம் நான் கேட்கவில்லை. இன்று இராத்திரி எங்கே தங்குவாய் என்று கேட்டேன்."

"நீ எதற்காக அதைக் கேட்கிறாய்?"

"ஒருவேளை **கடம்பூர் சம்புவரையர்** அரண்மனையில் நீ தங்குவதாயிருந்தால், எனக்கு அங்கே ஒரு வேலை இருக்கிறது."

"உனக்கு மந்திர தந்திரம் தெரியுமா, என்ன? நான் கடம்பூர் அரண்மனைக்குப் போகிறேன் என்பதை எப்படி அறிந்தாய்?"

"இதில் என்ன அதிசயம்? இன்றைக்குப் பல ஊர்களிலிருந்தும் பல விருந்தாளிகள் அங்கே வருகிறார்கள். பழுவேட்டரையரும் அவர் பரிவாரமும் அங்கேதான் போகிறார்கள்."

"மெய்யாகவா?" என்று வந்தியத்தேவன் தன் வியப்பை வெளியிட்டான்.

"மெய்யாகத்தான். அது உனக்குத் தெரியாதா, என்ன? யானை, குதிரை, பல்லக்கு, பரிவட்டம் எல்லாம் கடம்பூர் அரண்மனையைச் சேர்ந்தவைதான். பழுவேட்டரையரை எதிர் கொண்டு அழைத்துப் போகின்றன. பழுவேட்டரையர் எங்கு போனாலும் இந்த மரியாதை யெல்லாம் அவருக்கு நடைபெற்றே ஆக வேண்டும்."

**வ**ந்தியத்தேவன் மௌன யோசனையில் ஆழ்ந்தான். பழுவேட்டரையர் தங்குமிடத்தில் தானும் தங்குவதென்பது எளிதில் கிடைக்கக் கூடிய வாய்ப்பு அல்ல. அந்த மாபெரும் வீரருடன் பழக்கம் செய்து கொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைத்தாலும் கிடைக்கலாம். ஆனால் அவருடைய முரட்டுப் பரிவாரங்களுடன் ஏற்பட்ட அனுபவம் இன்னும் அவனுக்குக் கசந்து கொண்டிருந்தது.

"தம்பி! எனக்கு ஓர் உதவி செய்வாயா?" என்று ஆழ்வார்க்கடியான் இரக்கமான குரலில் கேட்டான்.

"உனக்கு நான் செய்யக் கூடிய உதவி என்ன இருக்க முடியும்? இந்தப் பக்கத்துக்கே நான் புதியவன்."

"உன்னால் முடியக் கூடிய காரியத்தையே சொல்வேன். இன்றிரவு என்னைக் கடம்பூர் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போ!"

"எதற்காக? அங்கே யாராவது வீர சைவர் வருகிறாரா? 'சிவன் பெரிய தெய்வமா? திருமால் பெரிய தெய்வமா?' என்று விவாதித்து முடிவு கட்டப் போகிறீர்களா?"

"இல்லை, இல்லை. சண்டை பிடிப்பதே என் வேலை என்று நினைக்க வேண்டாம். இன்றிரவு கடம்பூர் மாளிகையில் பெரிய விருந்து நடைபெறும். விருந்துக்குப் பிறகு களியாட்டம், சாமியாட்டம், குரவைக் கூத்து — எல்லாம் நடைபெறும். குரவைக் கூத்து பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசை!"

"அப்படி யிருந்தாலும் நான் உன்னை எப்படி அழைத்துப் போக முடியும்?"

"என்னை உன் பணியாள் என்று சொன்னால் போகிறது."

வந்தியத்தேவனுக்கு முன்னால் ஏற்பட்ட சந்தேகம் வலுப்பட்டது.

"அந்த மாதிரி ஏமாற்று மோசடிக்கெல்லாம் நீ வேறு யாரையாவது பார்க்க வேண்டும். உன்னைப் போன்ற பணியாளன் எனக்குத் தேவையில்லை. சொன்னால் நம்பவும் மாட்டார்கள். மேலும் நீ சொன்னதை யெல்லாம் யோசித்துப் பார்த்தால் என்னையே இன்று கோட்டைக்குள் விடுவார்களோ என்ற சந்தேகம் உண்டாகிறது."

"அப்படியானால் நீ கடம்பூருக்கு அழைப்புப் பெற்றுப் போகவில்லை என்று சொல்லு."

"ஒரு வகையில் அழைப்பு இருக்கிறது. சம்புவரையர் மகன் கந்தன் மாறவேள் என்னுடைய உற்ற நண்பன். இந்தப் பக்கம் வந்தால் அவர்களுடைய அரண்மனைக்கு அவசியம் வரவேணுமென்று என்னைப் பல முறை அழைத்திருக்கிறான்."

"இவ்வளவுதானா? அப்படியானால் உன்பாடே இன்றைக்குக் கொஞ்சம் திண்டாட்டமாகத்தான் இருக்கும்!"

இருவரும் சிறிது நேரம் மௌனமாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

"ஏன் என்னை இன்னும் தொடர்ந்து வருகிறாய்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"அந்தக் கேள்வியையே நானும் திருப்பிக் கேட்கலாம். நீ ஏன் என்னைத் தொடர்கிறாய்? உன்னுடைய வழியே போவதுதானே?"

"வழி தெரியாத குற்றத்தினால்தான், தம்பி! நீ எங்கே போகிறாய்? ஒருவேளை கடம்பூருக்குத்தானா?"

"இல்லை. நீதான் என்னை அங்கே அழைத்துப் போக முடியாது என்று சொல்லி விட்டாயே? நான் விண்ணகரக் கோயிலுக்குப் போகிறேன்."

"வீர நாராயணப் பெருமாள் சந்நிதிக்குத்தானே?"

"ஆம்."



"நானும் அந்த ஆலயத்துக்கு வந்து பெருமாளைச் சேவிக்க விரும்புகிறேன்."

"ஒருவேளை விஷ்ணு ஆலயத்துக்கு நீ வரமாட்டாயோ என்று பார்த்தேன். பார்க்க வேண்டிய கோயில்; தரிசிக்க வேண்டிய சந்நிதி. இங்கே ஈசுவர முனிகள் என்ற பட்டர், பெருமாளுக்குக் கைங்கரியம் செய்து வருகிறார். அவர் பெரிய மகான்."

"நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒரே கூட்டமாக இருக்கிறதே! கோயிலில் ஏதேனும் விசேஷ உற்சவம் உண்டா?"

"ஆம். இன்று ஆண்டாள் திருநட்சத்திரம். ஆடிப் பதினெட்டாம் பெருக்கோடு ஆண்டாளின் திருநட்சத்திரமும் சேர்ந்து கொண்டது. அதனால்தான் இவ்வளவு கோலாகலம். தம்பி! நீ ஆண்டாள் பாசுரம் ஏதாவது கேட்டிருக்கிறாயா?"

"கேட்டதில்லை."

"கேட்காதே! அதனைக் காதினாலேயே கேட்காதே!"

"ஏன் அவ்வளவு வைஷம்யம்?"

"வைஷம்யமுமில்லை; விரோதமுமில்லை! உன்னுடைய நன்மைக்குச் சொன்னேன்! ஆண்டாளின் இனிய பாசுரத்தைக் கேட்டு விட்டாயானால் அப்புறம் வாளையும் வேலையும் விட்டெறிந்துவிட்டு என்னைப் போல் நீயும் கண்ணன் மேல் காதல் கொண்டு விண்ணகர யாத்திரை கிளம்பி விடுவாய்!"

"உனக்கு ஆண்டாள் பாசுரங்கள் தெரியுமா? பாடுவாயா?"

"சில தெரியும். வேதம் தமிழ் செய்த நம்மாழ்வார் பாசுரங்களில் சில தெரியும். பெருமாள் சன்னதியில் பாடப் போகிறேன். வேணுமானால் கேட்டுக் கொள்! இதோ கோயிலும் வந்து விட்டது!"

இதற்குள் உண்மையிலேயே வீர நாராயணப் பெருமாள் கோயிலை அவர்கள் நெருங்கி வந்து விட்டார்கள்.

* * *

விஜயாலய சோழனின் பேரனான முதற் பராந்தக சோழன், "மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி" என்ற பட்டம் பெற்றவன். சோழப் பேரரசுக்கு அஸ்திவாரம் அமைத்தவன் அவனே. தில்லைச் சிற்றம்பலத்துக்கு, அவன் பொன் கூரை வேய்ந்து சரித்திரப் புகழ் பெற்றவன். சோழ சிகாமணி, சூர சிகாமணி முதலிய பல விருதுப் பெயர்களோடு வீர நாராயணன் என்னும் சிறப்புப் பெயரையும் அவன் கொண்டிருந்தான்.

பராந்தகனுடைய காலத்தில் வடக்கே இரட்டை மண்டலத்து ராஷ்டிரகூட மன்னர்கள் வலிமை பெற்று விளங்கினார்கள். மானியகேடத்திலிருந்து அவர்கள் படையெடுத்து வரக்கூடுமென்று பராந்தகன் எதிர்பார்த்தான். எனவே தனது முதற் புதல்வனாகிய இளவரசன் இராஜாதித்தனை ஒரு பெரிய சைனியத்துடன் திருமுனைப்பாடி நாட்டில் இருக்கச் செய்தான். அந்தச் சைனியத்தைச் சேர்ந்த இலட்சக்கணக்கான வீரர்கள் வேலையின்றிச் சும்மா இருக்க நேர்ந்த காலத்தில் இராஜாதித்தன் ஒரு யோசனை செய்தான். குடிமக்களுக்கு உபயோகமான ஒரு பெரும் பணியை அவர்களைக் கொண்டு செய்விக்க எண்ணினான். வட காவேரி என்று பக்தர்களாலும் கொள்ளிடம் என்று மற்றவர்களாலும் அழைக்கப்பட்ட பெரு நதியின் வழியாக அணையில்லாத வெள்ள நீர் ஓடி வீணே கடலில் கலந்து கொண்டிருந்தது. அதில்

ஒரு பகுதியைப் பயன்படுத்த எண்ணித் தன்வசமிருந்த வீரர்களைக் கொண்டு கடல் போன்ற விசாலமான ஏரி ஒன்றை அமைத்தான். அதைத் தன் அருமைத் தந்தையின் பெயரால் வீர நாராயண ஏரி என்றுஅழைத்தான். அதன் கரையில் வீரநாராயணபுரத்தை ஏற்படுத்தி அதில் ஒரு விண்ணகரையும் எடுத்தான். விஷ்ணுக்கிருகம் என்பது அந்நாளில் விண்ணகரம் என்று தமிழாக்கப்பட்டு வழங்கிற்று. ஸ்ரீமந் நாராயணமூர்த்தி நீரில் பள்ளி கொண்டு நீர் மயமாக இருப்பவர் அல்லவா? எனவே, ஏரிகளைக் காத்தருள்வதற்காக ஏரிக்கரையை யொட்டி ஸ்ரீ நாராயண மூர்த்திக்குக் கோயில் எடுப்பது அக்காலத்து வழக்கம். அதன்படி வீரநாராயணபுர விண்ணகரத்தில் வீரநாராயணப் பெருமாளைக் கோயில் கொண்டு எழுந்தருளச் செய்தான்.

அத்தகைய பெருமாளின் கோயிலுக்குத்தான் இப்போது வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் சென்றார்கள். சந்நிதிக்கு வந்து நின்றதும் ஆழ்வார்க்கடியான் பாட ஆரம்பித்தான். ஆண்டாளின் பாசுரங்கள் சிலவற்றைப் பாடிய பிறகு நம்மாழ்வாரின் தமிழ் வேதத்திலிருந்து சில பாசுரங்களைப் பாடினான்:

'பொலிக பொலிக பொலிக
போயிற்று வல்லுயிர்ச்சாபம்
நலியும் நரகமும் நைந்த
நமனுக்கிங்கு யாதொன்றுமில்லை
கலியும் கெடும் கண்டுகொள்மின்
கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்து இசைபாடி
ஆடி உழிதரக் கண்டோம்

கண்டோம் கண்டோம் கண்டோம்
கண்ணுக்கினியன கண்டோம்
தொண்டீர் எல்லீரும் வாரீர்!
தொழுது தொழுது நின்றார்த்தும்!
வண்டார் தண்ணந் துழாயான்
மாதவன் பூதங்கள் மண்மேல்
பண்டான் பாடி நின்றாடிப்
பரந்து திரிகின்றனவே!''

இவ்விதம் பாடி வந்தபோது ஆழ்வார்க்கடியானுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகித் தாரை தாரையாய் அவன் கன்னத்தின் வழியாக வழிந்தோடியது. வந்தியத்தேவன் அப்பாடல்களைக் கவனமாகவே கேட்டு வந்தான். அவனுக்குக் கண்ணீர் வராவிட்டாலும் உள்ளம் கசிந்துருகியது. ஆழ்வார்க்கடியானைப் பற்றி அவன் முன்னர் கொண்டிருந்த கருத்தும் மாறியது. 'இவன் பரம பக்தன்' என்று எண்ணிக் கொண்டான்.

வந்தியத்தேவனைப் போலவே கவனமாக அப்பாசுரங்களை இன்னும் சிலரும் கேட்டார்கள். கோவில் முதனிமார்கள் கேட்டார்கள். அர்ச்சகர் ஈசுவர பட்டரும் கண்களில் நீர் மல்கி நின்று கேட்டார். அவருக்கு அருகில் நின்றுகொண்டு அவருடைய இளம் புதல்வன் — பால் மணம் மாறாப் பாலகன் ஒருவன் கேட்டிருந்தான்.

ஆழ்வார்க்கடியான் பத்துப் பாசுரங்களைப் பாடிவிட்டு,

''கலிவயல் தென்னன் குருகூர்க்
காரி மாறன் சடகோபன்
ஒலி புகழ் ஆயிரத்து இப்பத்தும்
உள்ளத்தை மாசறுக்குமே''

என்று பாசுரத்தை முடித்தான்.

கேட்டிருந்த பட்டரின் குமாரனாகிய பாலகன் தன் தந்தையிடம் ஏதோ கூறினான். அவர் மல்கிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ''ஐயா! குரு



கூர்ச் சடகோபர் என்னும் நம்மாழ்வார் மொத்தம் ஆயிரம் பாடல்கள் பாடியிருப்பதாகத் தெரிகிறதே? அவ்வளவும் உமக்குத் தெரியுமா?'' என்று கேட்டார்.

''அடியேன் அவ்வளவு பாக்கியம் செய்யவில்லை. சில பத்துக்கள்தான் எனக்குத் தெரியும்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''தெரிந்த வரையில் இந்தப் பிள்ளைக்குச் சொல்லிக் கொடுக்க வேணும்'' என்றார் ஈசுவர முனிகள்.

* * *

பின்னால், இந்த ஊர் பல பெருமைகளை அடையப் போகிறது. பால்வடியும் முகத்தில் தேஜஸ் பொலிய நின்று நம்மாழ்வார் பாசுரங்களைக் கேட்ட பாலகன் வளர்ந்து, நாதமுனிகள் என்ற திருநாமத்துடன் வைஷ்ணவ

ஆச்சாரிய பரம்பரையில் முதல் ஆச்சாரியார் ஆகப் போகிறார். குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரிக்குச் சென்று 'வேதம் தமிழ் செய்த நம்மாழ்வாரின்' ஆயிரம் பாசுரங்களையும் தேடிச் சேகரித்து வரப்போகிறார். அப்பாசுரங்களை அவருடைய சீடர்கள் இசையுடன் பாடி நாடெங்கும் பரப்பப் போகிறார்கள்.

நாதமுனிகளின் பேரராக அவதரிக்கப் போகும் **ஆளவந்தார்** பல அற்புதங்களைச் செய்தருளப் போகிறார்.

இந்த இருவரும் அவதரித்த க்ஷேத்திரத்தைத் தரிசிக்க, உடையவராகிய ஸ்ரீ ராமாநுஜரே ஒரு நாள் வரப் போகிறார். வரும்போது வீரநாராயண ஏரியையும் அதன் எழுபத்து நான்கு கணவாய்களையும் பார்த்து அதிசயிக்கப் போகிறார். ஏரித் தண்ணீர் எழுபத்து நாலு கணவாய்களின் வழியாகப் பாய்ந்து மக்களை வாழ வைப்பது போலவே, நாராயணனுடைய கருணை வெள்ளத்தை ஜீவகோடிகளுக்குப் பாயச் செய்வதற்காக எழுபத்து நாலு ஆச்சாரிய பீடங்களை ஏற்படுத்த வேண்டும் என்று அம்மகானின் உள்ளத்தில் உதயமாகப் போகிறது. அதன்படியே எழுபத்து நான்கு 'சிம்மாசனாதிபதிகள்' என்ற பட்டத்துடன் வைஷ்ணவ ஆச்சாரிய புருஷர்கள் ஏற்படப் போகிறார்கள்.

இந்த மகத்தான நிகழ்ச்சிகளையெல்லாம் வைஷ்ணவ குரு பரம்பரைச் சரித்திரம் விவரமாகச் சொல்லட்டும் என்று விட்டுவிட்டு, மறுபடியும் நாம் வந்தியத்தேவனைக் கவனிப்போம்.

பெருமாளைச் சேவித்துவிட்டு ஆலயத்துக்கு வெளியில் வந்ததும் வந்தியத்தேவன் ஆழ்வார்க்கடியானைப் பார்த்து,

''நம்பிகளே! தாங்கள் இத்தகைய பரம பக்தர் என்றும், பண்டிதசிகாமணி என்றும் எனக்குத் தெரியாமல் போயிற்று. ஏதாவது அபசாரமாக நான் பேசியிருந்தால் மன்னிக்க வேண்டும்'' என்றான்.

''மன்னித்து விடுகிறேன், தம்பி! ஆனால் இப்போது எனக்கு ஓர் உதவி செய்வாயா சொல்லு!''

''தாங்கள் கேட்கும் உதவி என்னால் முடியாது என்றுதான் சொன்னேனே? நீங்களும் ஒப்புக் கொண்டீர்களே?''

''இது வேறு விஷயம். ஒரு சிறிய சீட்டுக் கொடுக்கிறேன். கடம்பூர் அரண்மனையில் நீ தங்கினால் தக்க சமயம் பார்த்து ஒருவரிடம் அதைக் கொடுக்க வேண்டும்.''

''யாரிடம்?''

''பழுவேட்டரையரின் யானைக்குப் பின்னால் மூடுபல்லக்கில் சென்றாளே, அந்தப் பெண்மணியிடம்!''

''நம்பிகளே! என்னை யார் என்று நினைத்தீர்கள்? இம்மாதிரி வேலைக்கெல்லாம் நான்தானா அகப்பட்டேன்? தங்களைத் தவிர வேறு யாராவது இத்தகைய வார்த்தையை என்னிடம் சொல்லியிருந்தால்...''

''தம்பி! படபடப்பு வேண்டாம்! உன்னால் முடியாது என்றால் மகாராஜனாய்ப் போய் வா! ஆனால் எனக்கு மட்டும் இந்த உதவி நீ செய்திருந்தால், ஏதாவது ஒரு சமயத்தில் உனக்கும் என் உதவி பயன்பட்டிருக்கும். பாதகமில்லை; போய் வா!''

வந்தியத்தேவன் பிறகு அங்கே ஒரு கணம்கூட நிற்கவில்லை. குதிரை மீது தாவி ஏறி விரைவாக விட்டுக் கொண்டு கடம்பூரை நோக்கிச் சென்றான்.

## நாலாம் அத்தியாயம்

# கடம்பூர் மாளிகை

இத்தனை நேரம் இளைப்பாறியிருந்த வல்லவரையனுடைய குதிரை இப்போது நல்ல சுறுசுறுப்பைப் பெற்றிருந்தது; ஒரு நாழிகை நேரத்தில் கடம்பூர்ச் சம்புவரையர் மாளிகை வாசலை அடைந்து விட்டது. அந்தக் காலத்துச் சோழ நாட்டுப் பெருங்குடித் தலைவர்களில் **செங்கண்ணர் சம்புவரையர்** ஒருவர். அவருடைய மாளிகையின் வாசல் ஒரு பெரிய நகரத்தின் கோட்டை வாசலைப்போல் இருந்தது. வாசலுக்கு இருபுறத்திலும் எழுந்த நெடுஞ்சுவர்கள் கோட்டைச் சுவர்களைப் போலவே வளைந்து சென்றன.

கோட்டை வாசலில் யானைகளும், குதிரைகளும், ரிஷபங்களும, அந்த மிருகங்களை யெல்லாம் பிடித்துக் கட்டுவோரும், தீனி வைப்போரும், தண்ணீர் காட்டுவோரும், ஆங்காங்கு தீவர்த்தி தூக்கிப் பிடித்து வெளிச்சம் போடுவோரும், தீவர்த்திகளுக்கு எண்ணெய் விடுவோருமாக, ஒரே கோலாகலமாயிருந்தது. இதையெல்லாம் பார்த்த வல்லவரையனின் உள்ளத்தில் சிறிது தயக்கமும் துணுக்கமும் ஏற்பட்டன. 'ஏதோ இங்கே பெரிய விசேஷம் ஒன்று நடைபெறுகிறது. இந்தச் சமயத்தில் நாம் வந்து சேர்ந்

தோமே' என்று எண்ணினான். நடக்கும் விசேஷம் என்னவென்பதைப் பார்த்துத் தெரிந்துகொள்ளும் ஆவலும் ஒரு பக்கம் பொங்கிக் கொண்டிருந்தது. கோட்டை வாசற்கதவு திறந்துதான் இருந்தது. ஆனால் திறந்திருந்த வாசலில் வேல் பிடித்த வீரர்கள் சிலர் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்தால் யம கிங்கரர்களைப் போல் இருந்தது.

தயங்கி நின்றால் தன்னை அவர்கள் நிறுத்தி விடுவார்கள் என்றும் தைரியமாகக் குதிரையை விட்டுக் கொண்டு உள்ளே போவதுதான் உசிதம் என்றும் அந்த வீர வாலிபன் எண்ணினான். அந்த எண்ணத்தை உடனே காரியத்தில் நிறைவேற்றினான். ஆனால் என்ன ஏமாற்றம்? குதிரை கோட்டை வாசலை அணுகியதும் வேல் பிடித்த வீரர்கள் இருவர் தங்கள் வேல்களைக் குறுக்கே நிறுத்தி வழிமறித்தார்கள். இன்னும் நாலு பேர் வந்து குதிரையின் தலைக் கயிற்றைப் பிடித்துக் கொண்டார்கள். அவர்களில் ஒருவன் வந்தியத்தேவனை உற்றுப் பார்த்தான். இன்னொருவன் தீவர்த்தி கொண்டு வந்து உயரத் தூக்கி முகத்துக்கு நேரே பிடித்தான்.

வல்லவரையன் முகத்தில் கோபம் கொதிக்க, ''இதுதான் உங்கள் ஊர் வழக்கமா? வந்த விருந்தாளிகளை வாசலிலேயே தடுத்து நிறுத்துவது?'' என்றான்.

''நீ யார் தம்பி இவ்வளவு துடுக்காகப் பேசுகிறாய்? எந்த ஊர்?'' என்றான் வாசற்காவலன்.

''என் ஊரும் பேருமா கேட்கிறாய்? வாணகப்பாடி நாட்டுத் திருவல்லம் என் ஊர். என்னுடைய குலத்து முன்னோர்களின் பெயர்களை ஒரு காலத்தில் உங்கள் நாட்டு வீரர்கள் தங்கள் மார்பில் எழுதிக் கொண்டு பெருமையடைந்தார்கள்! என் பெயர் வல்லவரையன் வந்தியத்தேவன்! தெரிந்ததா?'' என்றான்.

''இவ்வளவையும் சொல்வதற்கு ஒரு கட்டியக்காரனையும் கூட அழைத்து வருவதுதானே?'' என்றான் காவலர்களில் ஒருவன். இதைக் கேட்ட மற்றவர்கள் சிரித்தார்கள்.

''நீ யாராயிருந்தாலும் இனி உள்ளே போக முடியாது! இன்றைக்கு வர வேண்டிய விருந்தாளிகள் எல்லாம் வந்தாகிவிட்டது. இனிமேல் யாரையும் விடவேண்டாம் என்று எஜமானரின் கட்டளை!'' என்றான் காவலர் தலைவன்.

ஏதோ வாக்குவாதம் நடக்கிறதைப் பார்த்துக் கோட்டைக்குள்ளே சற்றுத் தூரத்தில் நின்ற சில வீரர்கள் அருகில் வந்தார்கள். அவர்களில் ஒருவன், ''அடே! நாம் அங்கே இருவிழாக் கூட்டத்தில் விரட்டி அடித்தோமே, அந்தக் குருதை போல இருக்கிறதடா!'' என்றான்.

''இன்னொருவன் கழுதை என்று சொல்லடா'' என்றான்.

''கழுதை மேல் உட்கார்ந்திருக்கிறவன் என்ன விரைப்பாக உட்கார்ந்திருக்கிறான் பாரடா!'' என்றான் மற்றொருவன்.

வல்லவரையன் காதில் இந்தச் சொற்கள் விழுந்தன.

அவன் மனத்துக்குள் 'என்னத்துக்கு இந்த வீண் வம்பு?' பேசாமல் திரும்பிப் போய்விடலாமா? அல்லது இளவரசர் ஆதித்த கரிகாலரின் முத்திரை பதித்த இலச்சினையை இவர்களிடம் காட்டிவிட்டு உள்ளே போகலாமா? என்ற யோசனை தோன்றியது. வடதிசைப் படையின் மாதண்டநாயகரின் இலச்சினையைப் பார்த்து விட்டுத் தன்னைத் தடுக்கக்கூடியவர்கள் வடபெண்ணையிலிருந்து குமரிமுனை வரையில் யாரும் கிடையாதல்லவா? இப்படி அவன் தன் மனத்துக்குள் விவாதித்துக் கொண்டிருந்த போதுதான் பழுவேட்டரையர் ஆட்களின் கேலிப் பேச்சு அவன் காதில் விழுந்தது. உடனே என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்து கொண்டான்.

''குதிரையை விடுங்கள்; திரும்பிப் போகிறேன்!'' என்றான்.

தடுத்த வீரர்கள் குதிரையின் முகக் கயிற்றை விட்டார்கள்.

குதிரையின் அடிவயிற்றில் வந்தியத்தேவன் தன் இரு கால்களினாலும் ஓர் அழுத்து அழுத்தினான். அதே நேரத்தில் உடைவாளை உறையிலிருந்து உருவி எடுத்தான். மின்னல் ஒளியுடன் கண்ணைப் பறித்த அந்த வாள் சுழன்ற வேகத்தினால் அவனுடைய கையில் திருமாலின் சக்ராயுதத்தை வைத்துக் கொண்டு சுழற்றுவதுபோல் தோன்றியது. குதிரை முன்னோக்கிக் கோட்டைக்குள்ளே பாய்ந்து சென்றது. வழியிலிருந்த வீரர்கள் திடீர் திடீரென்று கீழே விழுந்தார்கள். வேல்கள் சடசடவென்று அடித்துக் கொண்டு விழுந்தன. வம்பு பேசிய பழுவூர் வீரர்களின் பேரில் குதிரை பாய்ந்தது. இந்த மின்னல் தாக்குதலைச் சிறிதும் எதிர்பாராத வீரர்கள் நாற்புறமும் சிதறிச் சென்றார்கள்.

இதற்குள் வேறு பல காரியங்கள் நிகழ்ந்து விட்டன. கோட்டைக் கத

வுகள் 'தடால் தடால்' என்று சாத்தப் பட்டன. ''பிடி! பிடி!'' என்ற கூக் குரல்கள் எழுந்தன. வேல்களும், வாள் களும் உராய்ந்து 'கிளாங்' 'கிளாங்' என்று ஒலித்தன. திடீரென்று அபாயம் அறிவிக்கும் முரசு 'டடம்!' 'டடம்!' என்று முழங்கிற்று.

வந்தியத்தேவன் குதிரையைச் சுற்றி லும் வீரர்கள் வந்து சூழ்ந்து கொண் டார்கள். இருபது, முப்பது, ஐம்பது பேருக்கு மேலேயே இருக்கும். குதிரை யின் மேலிருந்து வந்தியத்தேவன் பாய்ந்து தரையில் குதித்தான். கையி லிருந்த வாளைச் சுழற்றிக் கொண்டே, '' கந்தமாறா! கந்தமாறா! உன் ஆட்கள் என்னைக் கொல்லுகிறார்கள்!'' என்று கத்தினான்.

இதைக் கேட்டதும் அவனைச் சூழ்ந் திருந்த வீரர்கள் திடுக்கிட்டுச் சிறிது தயங்கி விலகி நின்றார்கள்.

அச்சமயம் மாளிகையின் மேல் மாட முகப்பிலிருந்து, ''அங்கே என்ன கூச்சல்? நிறுத்துங்கள்!'' என்ற ஓர் இடிமுழக்கக் குரல் கேட்டது. அந்தக் குரல் கேட்ட இடத்தில் ஏழெட்டுப் பேர் நின்று கீழே நடப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

''எஜமான்! யாரோ ஓர் ஆள் காவலை மீறிப் புகுந்துவிட்டான். சின்ன எஜமான் பெயரைச் சொல்லிக் கூவுகிறான்!'' என்று கீழேயிருந்த ஒருவன் சொன்னான்.

''கந்தமாறா! நீ போய்க் கலவரம் என்னவென்று பார்!'' — இவ்விதம் மேல்மாடத்திலிருந்து அதே இடி முழக்கக் குரல் சொல்லிற்று. அந்தக் குரலுக்கு உடையவர்தான் செங்கண் ணர் சம்புவரையர் போலும் என்று வந்தியத்தேவன் எண்ணினான்.

அவனும் அவனைச் சுற்றி நின்ற வீரர்களும் சிறிது நேரம் அப்படியே நின்றுகொண்டிருந்தார்கள்.

''இங்கே என்ன ஆர்ப்பாட்டம்?'' என்ற ஓர் இளங்குரல் கேட்டது. அந்தக் குரல் கேட்ட இடத்தில் நின்றவர்கள் விலகிக் கொண்டு வழி ஏற்படுத்தி னார்கள். வாலிபன் ஒருவன் அந்த வழி யாக விரைந்து வந்தான். கையில் பிடித்த கத்தியை இலேசாகச் சுழற்றிக் கொண்டு



ஆர சம்ஹாரம் செய்த சுப்பிரமணிய ரைப்போல் நின்ற வந்தியத்தேவனை ஒரு கணம் வியப்புடன் நோக்கினான்.

"வல்லவா! உண்மையாகவே நீதானா?" என்று உணர்ச்சி ததும்பக் கூவிக்கொண்டு ஓடிச்சென்று வல்லவரையனை அந்த இளைஞன் கட்டித் தழுவிக் கொண்டான்.

"கந்தமாறா! நீ படித்துப் படித்துப் பல தடவை சொன்னாயே என்று உன் வீட்டுக்கு வந்தேன். வந்த இடத்தில் எனக்கு இத்தகைய வீர வரவேற்புக் கிடைத்தது!" என்று வந்தியத்தேவன் தன்னைச் சுற்றி நின்ற வீரர்களைச் சுட்டிக் காட்டினான்.

அவர்களைப் பார்த்து, "சீ! முட்டாள்களே! போங்களடா! உங்கள் அறிவு உலக்கைக் கொழுந்துதான்!" என்றான் கந்தன்மாறவேள்.

* * *

கந்தன்மாறவேள் வந்தியத்தேவனின் கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக் கொண்டு போனான். அவனுடைய கால்கள் தரையில் நில்லாமல் குதித்துக் கொண்டேயிருந்தன. அவனுடைய உள்ளமும் துள்ளிக் குதித்தது. யௌவனப் பிராயத்தில் உண்மையாக உள்ளம் ஒன்றுபட்ட ஒரு நண்பன் கிடைத்தால் அதைக் காட்டிலும் ஒருவனைப் பரவசப்படுத்தக்கூடியது வேறு என்ன உண்டு? ஆம்! காதல் என்பதுஒன்று இருக்கத்தான்இருக்கிறது. ஆனால் காதலில் இன்பமும் குதூகலமும் எத்தனை உண்டோ அதைவிட அதிகமான துன்பமும் வேதனையும் உண்டு. யௌவனத்துச் சிநேகிதக் குதூகலத்திலோ துன்பத்தின் நிழல்கூட விழுவதில்லை. ஒரே ஆனந்த மயமான இதய பரவசம்தான்.

போகிற போக்கில் வல்லவரையன், "கந்தமாறா! இன்றைக்கு என்ன இங்கே ஏகதடபுடலாயிருக்கிறது? இவ்வளவு கட்டுக்காவல் எல்லாம் எதற்காக?" என்றான்.

"இன்றைக்கு இங்கே என்ன விசேஷம் என்பதைப் பற்றி அப்புறம்



விவரமாகச் சொல்கிறேன். நீயும் நானும் பெண்ணையாற்றங் கரைப் பாசறையில் தங்கியிருந்த போது, 'பழுவேட்டரையரைப் பார்க்க வேண்டும்; மழவரையரைப் பார்க்க வேண்டும்; அவரைப் பார்க்க வேண்டும்; இவரைப் பார்க்க வேண்டும்' என்று சொல்வாயே? அந்த அவர், இவர், உவர் — எல்லாரையும் இன்றைக்கு இங்கேயே நீ பார்த்து விடலாம்!'' என்றான் கந்தன்மாறவேள்.

பிறகு, விருந்தாளிகள் அமர்ந்திருந்த மாளிகை மேல் மாடத்துக்கு வல்லவரையனைக் கந்தன்மாறன் அழைத்துச் சென்றான். முதலில் தன் தந்தையாகிய சம்புவரையரிடம் கொண்டு போய் நிறுத்தி, ''அப்பா! என் தோழன் வாணர் குலத்து வந்தியத் தேவனைப் பற்றி அடிக்கடி தங்களிடம் சொல்லிக் கொண்டிருப்பேனே? அவன் இவன் தான்!'' என்றான். வந்தியத்தேவன் பெரியவரைக் கும்பிட்டு வணங்கினான். அதைக் குறித்துச் சம்புவரையர் அவ்வளவாக மகிழ்ச்சி அடைந்ததாகத் தோன்றவில்லை.

''அப்படியா? கீழே அரண்மனை வாசலில் அவ்வளவு கலவரம் செய்தவன் இவன்தானா?'' என்று கேட்டார்.

''கலவரத்துக்குக் காரணம் என் தோழன் அல்ல; வாசல் காப்பதற்கு நாம் அமர்த்தியிருக்கும் மூடர்கள்!'' என்றான் கந்தன் மாறவேள்.

''இருந்தாலும் இன்றைய தினம் பார்த்து, அதுவும் இருட்டி அரை ஜாமத்துக்குப் பிறகு, இவன் இவ்வளவு ஆர்ப்பாட்டத்துடன் வந்திருக்க வேண்டியதில்லை!'' என்றார் சம்புவரையர்.

கந்தன் மாறவேளின் முகம் சுருங்கிற்று. மேலும் தந்தையுடன் வாதமிட அவன் விரும்பவில்லை. வந்தியத்தேவனை அப்பால் அழைத்துச் சென்றான். வந்திருந்த விருந்தாளிகளுக்கு மத்தியில் நடுநாயகமாக ஓர் உயர்ந்த பீடத்தில் அமர்ந்திருந்த பழுவேட்டரையரிடம் அழைத்துப் போய், ''மாமா! இவன் என் ஆருயிர் நண்பன் வந்தியத்தேவன். வாணப் பேரரசர் குலத்தவன். இவனும் நானும் வடபெண்ணைக்கரைப் பாசறையில் எல்லைக் காவல் புரிந்து கொண்டிருந்தோம். அப்பொழுதெல்லாம், 'வீராதி வீரர் பெரிய பழுவேட்டரையரைப் பார்க்க வேண்டும்' என்று ஓயாது சொல்லிக் கொண்டிருப்பான். 'பழுவேட்டரையர் திருமேனியில் அறுபத்து நாலு போர்க் காயங்கள் இருப்பது உண்மைதானா?' என்று கேட்டுக் கொண்டிருப்பான். 'ஒரு நாள் நீயே எண்ணிப் பார்த்துக் கொள்' என்று நான் சொல்வேன்'' என்றான்.

பழுவேட்டரையர் சுருங்கிய முகத்துடன், ''அப்படியா, தம்பி! நீயே எண்ணிப் பார்த்தால் ஒழிய நம்பமாட்டாயோ? அவ்வளவு அவநம்பிக்கையா உனக்கு? 'வாணர் குலத்தைக் காட்டிலும் வேறு குலத்தில் வீரம் இருக்க முடியுமா?' என்ற சந்தேகமோ?'' என்றார்.

தோழர்கள் இருவருமே திடுக்கிட்டுப் போனார்கள். தோத்திரமாகச் சொன்னதை இப்படி அவர் குதர்க்கமாக எடுத்துக் கொள்வார் என்று எதிர்பார்க்கவில்லை.

வந்தியத்தேவனுடைய மனத்தில் எரிச்சல் குமுறியது. ஆயினும் வெளியில் காட்டிக் கொள்ளாமல், ''ஐயா! பழுவேட்டரையர் குலத்தின் வீரப் புகழ் குமரி முனையிலிருந்து இமயம் வரையில் பரவியிருக்கிறது. அதைப் பற்றிச் சந்தேகிப்பதற்கு நான் யார்?'' என்று பணிவுடன் சொன்னான்.

''நல்ல மறுமொழி; கெட்டிக்காரப் பிள்ளை!'' என்றார் பழுவேட்டரையர்.

இந்தமட்டில் பிழைத்தோம் என்று வாலிபர்கள் இருவரும் அங்கிருந்து வெளியேறினார்கள். அப்போது சம்புவரையர் தமது மகனை அழைத்துக் காதோடு, ''உன் தோழனுக்குச் சீக்கிரம் உணவு அளித்து எங்கேயாவது ஒரு தனி இடத்தில் படுக்கச் சொல்லு! நீண்ட பிரயாணம் செய்து களைத்துப் போயிருக்கிறான்'' என்றார்.

மாறவேள் கோபத்துடன் தலையை அசைத்து விட்டுப் போனான்.

பிறகு கந்தன்மாறன் வந்தியத்தேவனை அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்றான். அங்கே பெண்கள் பலர் இருந்தார்கள். மாறவேளின் அன்னைக்கு வந்தியத்தேவன் நமஸ்காரம் செய்தான். அவளுக்குப் பின்னால் கூச்சத்துடன் மறைந்திருக்கும் பெண்தான் கந்தன் மாறனின் சகோதரியாயிருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான்.

தங்கச்சியைப் பற்றி மாறவேள் பல தடவை சொன்னதில் ஏதேதோ கற்பனை செய்து கொண்டிருந்தான் வந்தியத்தேவன். இப்போது ஒருவாறு ஏமாற்றமே அடைந்தான்.

அந்தப் பெண்களின் கூட்டத்திலே பழுவேட்டரையருடன் பல்லக்கில் வந்த மாது யாராக இருக்கலாம் என்பதை அறிய வந்தியத்தேவனுடைய கண்கள் தேடி அலைந்தன. **(தொடரும்)**

Studies in Concentration—1

# THE ARTISAN

*To create objects of lasting beauty, the artisan works patiently — chipping, filing, engraving and polishing — and ultimately puts life into the finished masterpiece..... a product of single-minded concentration.*

Parry's, too, is a long entrancing story of concentrated effort. Started as a trading concern over 179 years ago, Parry's has, over the years, gradually widened its interests. Its record of expansion has given it new dimensions as a progressive industrial force.

E.I.D.-Parry is an industrial complex, covering Fertilisers, Pesticides, Hybrid Seeds, Sugar Confectionery, Chemicals, Engineering goods, Ceramics and Petro-chemicals. E.I.D.-Parry, with its specialised knowledge, technical know-how and long experience, is geared to play a leading role in national growth. E.I.D.-Parry's marketing organisation, with its after-sales service, is far-flung and dynamic.

**Parry's—pioneers in planned progress**



**E.I.D.-PARRY LIMITED**

*(Incorporated in England. Liability of members is limited)*

Dare House, Madras 1

[காதலித்துத் திருமணம் செய்துகொண்டவர்களின் வாழ்க்கை அநுபவங்கள் சுவையானவை. காதல் திருமணம் என்றால் எவ்வளவோ சோதனைகள், தடைகள், எதிர்ப்புக்கள். இவற்றை வென்று, காதல் என்பது திருமணத்துக்குப் பிறகும் நீடித்து நிலைக்கும் என்ற உண்மையைத் தமது சொந்த அநுபவங்களிலிருந்து எடுத்துரைக்கின்றனர், திரு பட்டு — ஸ்ரீமதி குமுதா தம்பதியர்.]




# காதல் திருமணம்

**கேள்வி: நீங்கள் எப்போது முதன் முதலாகச் சந்தித்தீர்கள்? காதல் உணர்வு உங்களிடையே பிறந்தது பற்றி விளக்கம் தருகிறீர்களா?**

பட்டு: 1957ல் லேமன் கிளப் ஒன்றில் என் நாடகத்துக்கு ஒத்திகை நடந்தபோது அங்கு குமுதா வந்திருந்தாள். அதன் பிறகு பல தடவைகள் ஏற்பட்ட சந்திப்புக்களின் விளைவாக நாங்கள் ஒருவரை யொருவர், நன்கு புரிந்து கொண்டோம். குமுதாவை முதன் முறையாகப் பார்த்தவுடன், 'இந்தப் பெண் திருமணம் ஆகாதவளாக இருந்தால், இவளையே மணந்து கொள்ள வேண்டும்' என்ற எண்ணம் இயல்பாக உள்ளுணர்வாக என்னுள் எழுந்தது. அவளுடைய ஜாதி, மதம் இதெல்லாம்கூட அப்போது எனக்குத் தெரியாது.

குமுதா: இவரை நான் சந்தித்து மூன்று மாதங்களுக்குப் பிறகு எங்கள் திருமணம் நிகழ்ந்தேறியது. அப்போதைய என் நிலை என்ன தெரியுமா? என் திருமணத்துக்கான ஏற்பாடுகளில் முனைந்திருந்தனர் என் பெற்றோர். நான் ஒரே பெண். வசதியுள்ள குடும்பத்தின் செல்லப் பெண்ணாக வளர்ந்து வந்த என்னை நல்ல 'பெரிய' இடமாகப் பார்த்துக் கொடுக்க வேண்டும் என்று என் பெற்றோர் கருதியதில் வியப்பில்லையே? திரு பட்டுவைச் சந்தித்து அவரிடம் என் மனத்தைப் பறி கொடுத்த பிறகு என் விருப்பத்தை என் பெற்றோரிடம் சொல்லி விட்டேன். ஆனால், ஒரு விஷயம். திரு பட்டுவுக்கு நான் காதல் கடிதங்கள் எழுதியதில்லை; அவரும் எனக்கு எதுவும் எழுதியதில்லை. நெருங்கிப் பழகவில்லை — எங்கள் திருமணம் முடியும் வரை.

**கேள்வி: பெற்றோரின் சம்மதம் உடனே கிடைத்துவிட்டதா? எதிர்ப்பு, ஆட்சேபம் எதுவுமில்லையா?**

பட்டு: என்னைப் பொறுத்த மட்டில் எதிர்ப்பே இல்லை. காரணம், எதிர்க்க யாரும் இல்லாததுதான்! நான் பிறக்கு முன்பே என் தகப்பனார் இறந்து விட்டார். எனக்கு இரண்டு வயதானபோது அம்மாவையும் இழந்து விட்டேன். அண்ணா ஒருவர்தான் இருந்தார். நான் சினிமாத் தொழிலில் ஈடுபட்டிருந்ததால், நான் ஒரு நல்ல குடும்பத்துப் பெண்ணை மணந்துகொள்ள முன்வந்ததில் அவருக்குச் சந்தோஷமே.

குமுதா: என் அம்மா, அப்பா எல்லோருமே என் முடிவைக் கேட்டுத் திடுக்கிட்டனர். முதலில் அவர்கள் பலமாக ஆட்சேபித்தனர். காரணம், இவரது சினிமாத் துறை ஈடுபாடுதான். 'நிரந்தரமான ஓர் உத்தியோகம் இல்லாத ஒரு பையனுக்கு என் ஒரே பெண்ணைக் கொடுக்க முடியாது' என்றே பிடிவாதம் செய்தனர். என்னை இவர் சௌக்கியமாக வைத்துக் காப்பாற்றுவாரா, அதற்கு இவரிடம் என்ன வசதி உள்ளது என்றெல்லாம் யோசித்தனர். ஆனால், என் தாத்தா, பெரியப்பா இருவருக்கும் இவரை மிகவும் பிடித்திருந்தது. நானும் உறுதியாக இருக்கவே, இறுதியில் என்பெற்றோர்களும் ஒருவாறு இணங்கினார்கள். ஜாதிப் பிரச்னை எதுவும் எழவில்லை. இருவரும்

# குடும்பப் பிரச்னை





வைஷ்ணவர்கள். ஜாதகமாவது பொருந்தி யிருந்தால் சரி என்று என் அப்பா ஒருவாறு முடிவுக்கு வந்தார். ஆனால் அவருக்கு ஜாதகம் என்று எதுவுமே இல்லை! பிறந்த தேதி, நேரத்தைக் கொண்டு கணக்கிட்டுப் பொருத்தம் பார்த்து வேண்டா வெறுப்பாகத்தான் இணங்கினார்கள்.

**கேள்வி: உங்கள் பெற்றோர்கள் ஒருகால் கடைசி வரை உங்கள் திருமணத்துக்கு உடன்படாமலே இருந்திருந்தால் நீங்கள் என்ன செய்திருப்பீர்கள்?**

குமுதா: என்ன செய்திருப்பேன் என்று என்னால் திட்ட வட்டமாக இப்போது சொல்ல முடியாது. ஆனால், என்ன செய்திருக்க மாட்டேன் என்று வேண்டுமானால் சொல்ல முடியும். வீட்டை விட்டு ஓடி, திருட்டுத் தாலி கட்டிக் கொள்ள ஒரு நாளும் இணங்கி யிருக்க மாட்டேன்! என் தோழிகள் சிலர் 'ரிஜிஸ்தர் விவாகம்' செய்துகொள்ளும் யோசனையைக் கூறினர். அதில் எனக்கு விருப்பமில்லை. காரணம் எனக்கு அப்போது பதினேழு வயதுதான். தவிரவும், நான் விரும்புகிறவரை மணந்து கொண்டால்தான் என் வாழ்க்கையில் நிறைவு காண முடியும் என்று நம்பினேன். அதே பிரகாரம் பெற்றோர்களிடம் வாதாடினேன். என் நம்பிக்கை வீண் போகவில்லை.

**கேள்வி: மிஸ்டர் பட்டு! உங்களுடைய இப்போதைய தொழில் என்ன?**

பட்டு: டி. டி. கே. கம்பெனியில் விற்பனை உதவியாளராகப் பணியாற்றி வருகிறேன். அவ்வப்போது நாடகங்களிலும் நடிக்கிறேன். நானே எழுதித் தயாரிக்கும் நாடகங்களிலும் நடிப்பேன். நண்பர்களின் நாடகக் குழுக்கள் அழைப்பு விடுத்தால் அவர்களுடனும் சேர்ந்து நடிப்பேன். நாடகக் கலைதான் என் ஜீவன்.

குமுதா: ஓர் அமெச்சூர் நடிகர் நிரந்தரமான ஓர் உத்தியோகத்தில் அமர்ந்து கொள்ளாவிட்டால் சிரமந்தான். என்னைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகுதான் கம்பெனியில் வேலை தேடிக் கொண்டார். பிரும்மசாரியாக இருந்திருந்தால், நாடகங்கள், சினிமா இவைகளில் ஈடுபட்டே வாழ்க்கையை ஓட்டி விருப்பார்!

**கேள்வி: திருமணத்துக்குப் பிறகு வாழ்க்கை முன்னைப் போலவே இன்பமயமாக இருக்கிறதா? அல்லது கணவன் மனைவியிடையே சண்டை பூசல்கள் உண்டா?**

பட்டு: சில்லறைப் பூசல்கள் எழத்தான் செய்யும். இப்படிச் செய்திருக்கலாம், அப்படிச் செய்திருக்க வேண்டும் என்று குமுதா வாதாடுவாள். நானும் வாதாடுவேன். இதெல்லாம் சகஜம்.

**கேள்வி: காதல் திருமணம் காரணமாக உறவினர்களால் ஏதாவது தொல்லைகள் ஏற்பட்டனவா?**

குமுதா: 'இப்படிச் செய்து விட்டாயே?' என்று என் அம்மாவோ, அப்பாவோ குத்திக் காட்டிப் பேசவில்லை. அப்பாவுக்கு மட்டும் மனத்தில் அதிருப்தி இருந்திருக்கலாம். நாளடைவில் அது மறைந்து விட்டது. போகப் போக, என்னையும் விட என் கணவரைப் பெரிதும் விரும்பினார் என் அப்பா. சினிமா, நாடகத் துறையில் ஈடுபட்டிருக்கிறார்; எவ்வளவோ பெண்களுடன் பழக வாய்ப்பு உண்டு அவருக்கு; இருந்தாலும் அவருடைய நடத்தையில்

அப்பழுக்கு இல்லை என்பதை என் அப்பா புரிந்து கொண்டார். அவரிடம் என் தந்தைக்கு உள்ள மதிப்பு மேலும் மேலும் பெருகிற்று என்றே சொல்வேன்.

**கேள்வி: உங்களிடையே ஏதேனும் விவாதம் பூசல் ஏற்படும்போது ஆறுதலுக்குக் குமுதா தம் பெற்றோர்களை நாடுவதுண்டா?**

குமுதா: நானாகத் தேடிக் கொண்டது தானே இந்த வாழ்க்கை? பெற்றோர்கள் தேடிய கணவனாக இருந்தால் அம்மா, அப்பாவிடம் குறைகளைத் தெரிவித்து ஆறுதல் பெறலாம். நானே விரும்பி மணந்து கொண்டவரைப் பற்றிப் பிறரிடம் குறை கூறுவது எனக்கே கௌரவக் குறைவு அல்லவா? எந்த விவாதம், பூசல், குறைகள் என்றாலும் அது எங்களுக்குள்ளேயே தேங்கி விடும். என் அம்மாவிடம் கூட நான் எந்தக் குறையையும் வெளியிட்டதில்லை. பணம் இல்லாமல் சிரமப்பட்டிருக்கிறோம். ஆனால் யாருடைய உதவியையும் நாடியதில்லை.

**கேள்வி: நீங்களே தயாரித்து அளிக்கும் நாடகங்களில் உங்கள் மனைவி பங்கு பற்ற நீங்கள் வாய்ப்பு அளித்ததுண்டா?**

பட்டு: இல்லை. இந்த விஷயத்தில் நான் ஒரு 'கன்ஸர்வேடிவ்'. பழைமையைப் போற்றுகிறவன். இதுவரை நான் கதை - வசனம் எழுதித் தயாரித்த நாடகங்கள் பதினேந்து. 'டயல் மிஸ்டர் சஞ்சீவி' என்ற நாடகம் ஐம்பது தடவைக்கு மேல் நடிக்கப்பெற்றது. முதல் முதல் 'பொன் விழா' கொண்டாடிய தமிழ் நாடகம் இதுவே என்று ஓரளவு பெருமையோடு சொல்லிக் கொள்வேன். ஆனால் என் மனைவி மேடை ஏறி நடிப்பதில் எனக்கு விருப்பமில்லை. மனிதனுக்கு இயற்கையாக உள்ள 'சந்தேகம்' என்னிடமும் தலைகாட்ட தானே ஒரு சூழ்நிலையை ஏன் உருவாக்க வேண்டும்?

குமுதா: எனக்கும் நடிக்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. ஆனால் மேடை ஏறி நடிப்பதில் உள்ள சங்கடங்கள் புரிந்ததும் அந்த ஆசையை அடியோடு கைவிட்டேன். வீட்டில் நாடக ஒத்திகைகள் நடக்கும்போது இவருக்கு எல்லா உதவிகளும் செய்வேன். கதை — வசனம் எழுதும்போது திருத்தங்கள், மாற்றங்கள், பல யோசனைகள் சொல்லுவேன். அவரும் ஏற்றுக் கொள்வார்.

**கேள்வி: காதல் திருமணம் செய்துகொள்ளும் தம்பதிகளுக்கு நீங்கள் கூற விரும்பும் அறிவுரைகள் ஏதேனும் உண்டா? வாழ்க்கையை வெற்றிகரமாக அமைத்துக்கொள்ள உங்கள் அநுபவம் மிகவும் பயன்படுமே?**

பட்டு: காதலிக்கத் தொடங்கு முன் காதல் என்றால் என்ன என்று புரிந்து கொள்ள வேண்டும். ஆணும் பெண்ணும் பரஸ்பரம் தங்கள் நிறை குறைகளை ஒளிவு மறைவு இன்றிக் கூறிவிட வேண்டும். இதுதான் மிகவும் முக்கியம். பிற்காலத்தில் ஒருவரையொருவர் இடித்துரைக்க இடம் ஏற்படக் கூடாது. திருமணம் நிகழும்வரை கண்ணியமாக நடந்து கொள்ள வேண்டும். இதை விளக்கிச் சொல்லத் தேவையில்லை. தகராறு ஏதாவது எழுந்தால், என்ன இருந்தாலும் அவர் நம் கணவர் என்று மனைவிதான் விட்டுக் கொடுக்க வேண்டும். எங்களுக்கிடையே எழும் விவாதங்களில் என் கட்சிதான் மேலோங்கி யிருக்கும்.

குமுதா: இருவரும்தான் விட்டுக் கொடுக்க வேண்டும். மனைவியே எப்போதும் விட்டுக் கொடுக்க வேண்டும் என்று கணவர் எதிர்பார்ப்பது நியாயமில்லை. இங்கே இவருடைய விருப்பப்படியேதான் எல்லாம் நடக்கிறது! இருந்தாலும் விட்டுக் கொடுக்கும் சுபாவம் கணவருக்கும் இருக்கத்தான் வேண்டும் என்பது என் சொந்தக் கருத்து. இதை நான் மேலும் வற்புறுத்தினால், உங்கள் எதிரிலேயே நாங்கள் விவாதித்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்!

பேட்டி: பரணன்

## இக்ணி மனைவி!



சென்னை துளசிங்கப் பெருமாள் கோவில் தெருவில், பாரதியார் இறப்பதற்கு ஒரு வருடத்திற்கு முன்பு குடியிருந்தார். அது ஐந்தாறு குடித்தனக்காரர்களும் தாராளமான இட வசதியுடன் குடியிருக்கக் கூடிய பெரிய வீடு. அதில் பாலக்காட்டுக்காரர்களும் ஒரு பகுதியில் குடியிருந்தார்கள். பாலக்காட்டுப் பக்கத்தார் பொதுவாக ஒருவரையொருவர் கூப்பிடும்போது சற்று நீளமாக அழைப்பார்கள். அவர்கள் வீட்டில் அண்ணன் தம்பி இருந்தார்கள். அண்ணன் தம்பியை அழைக்கும் போது மணி..... இ... இ... இ... இய்.... என்பார். அந்த இகாரம் வெகு நேரம் நமது காதில் மணியடித்ததுபோல் ஒலித்துக் கொண்டிருக்கும். பாரதியார் கவனித்துக் கொண்டிருந்தார். ஒரு நாள்,...... ''இக்ணி.... இ...இய்'' என்று கூப்பிட்டார். ஒருவரும் என்னவென்று கேட்கவில்லை. மறுபடியும், ''இக்ணி...இ...இய்'' என்றார். '' என்னது இக்ணி? என்ன விஷயம்?'' என்று கேட்டார் பாரதியாரின் மனைவி. ''உன்னைத்தான் அப்படிக் கூப்பிடுகிறேன்'' என்றார் பாரதியார்.

''உங்கள் வார்த்தையின் பொருள் விளங்கவில்லையே !''

''இக்ணி என்றால் சின்னது, ரொம்பச் சிறியது என்று அர்த்தம். நேற்று நீ அடுத்த வீட்டு அம்மாளிடம், 'நமக்கோ வயதாகிவிட்டது' என்று சலிப்புடன் கூறியது என் காதில் விழுந்தது. நீ பெரியவள் என்று நினைக்கக் கூடாது. இக்ணியிலும் இக்ணியாக இருக்க வேண்டும். பார்ப்பதற்கல்ல...மனத்தில். மனத்தைக் குழந்தை மனம் போலாக்கிக் கொள்ள வேண்டும் என்பதை உனக்கு உணர்த்தவே இக்ணி என்று கூப்பிட்டேன். கூப்பிடும்போதே பாலக்காடு பாணியில் 'இக்ணி...இ... இய்...' என்று கூப்பிட்டேன்'' என்றார் பாரதியார்.

— இரா. சிவகாமிநாதன்

ரூ. 23,500

பரிசு பெற
பொன்னான வாய்ப்பு!

203 ரொக்கப்
பரிசுகள்!

நுழைவுக்
கட்டணம்
இல்லை




இன்றே :பாஸ்:போமின் போட்டியின்
நுழைவுப் பத்திரத்தைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள்!

சுலபமாகப் பூர்த்தி செய்யலாம்! தமாஷாக ஈடுபடலாம்!

முதற் பரிசு : ரூ. 7,500 — 3-வது பரிசு: ரூ. 2,000
2-வது பரிசு: ரூ. 4,000 — தவிர, 200 பரிவுப் பரிசுகள்—ஒவ்வொன்றும் ரூ. 50.

பாஸ்:போமின் உங்களுக்கு ஆரோக்கியம் அளிக்கிறது இப்பொழுது செல்வத்தையும் அளிக்கிறது. இன்றே :பாஸ்:போமின் போட்டிக்கான நுழைவுப் பத்திரத்தைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். நீங்கள் ஒரு பெரிய ரொக்கப் பரிசு பெற சிறந்த வாய்ப்பு இருக்கிறது!

**இவ்வளவு செய்தால் போதுமானது:** கீழ்க்கண்ட வாக்கியங்களை அவற்றின் முக்கியத்துவத்துக்கு ஏற்றவாறு வரிசைப் படுத்தி, நம்பர் கொடுங்கள். ஒவ்வொரு வாக்கியத்துக்கும் முன்னுள்ள சிறிய கட்டத்தில் நம்பரை எழுதுங்கள். பின்னர் "குடும்பத்திலுள்ள அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ உதவுகிறது :பாஸ்:போமின். ஏனெனில்..........." என்னும் வாக்கியத்தைப் பூர்த்தி செய்யுங்கள். ஏற்கனவே கொடுக்கப்பட்டுள்ள வார்த்தைகள் நீங்கலாக, 15 வார்த்தைகளுக்கு மேற்படாமல் உங்கள் காரணங்களை எழுதுங்கள்.



# மகாபாரதம்

ராஜாஜி

திரௌபதியானவள் தனக்கு நேர்ந்த அவமானத்தையும் இக்கற்ற நிலையையும் நினைத்துத் துயரமும் கோபமும் தாங்க முடியாமல், தாங்கள் இன்னார் என்று உலகத்துக்குத் தெரிந்து விட்டால் நேரிடும் விபத்தையும் பொருட்படுத்தாமல், இரவில் பீமன் படுத்திருந்த இடத்துக்குப் போய் அவனை எழுப்பினாள்.

''இதை என்னால் பொறுக்க முடியவில்லை. நீசனான இந்தக் கீசகனை உடனே வதம் செய்வாய். உங்களுடைய பிரதிக்ஞையைக் காப்பாற்றுவதற்காக நான் விராடனுக்குச் சந்தனம் அரைத்துத் தரும் தாசியாக இருந்து வருகிறேன். மதிப்புக்குரியவரல்லாதவர்களுக்குப் பணிவிடை செய்து வருகிறேன். என் கைகளைப் பார்!'' என்று சொல்லிச் சந்தனம் அரைத்துத் தழும்பேறிய கைகளைப் பீமனுக்குக் காண்பித்தாள். விருகோதரன் அவள் கைகளை முகத்தில் ஒத்திக்கொண்டான்.

அவளுடைய கண்ணீரைத் துடைத்து விட்டு, ''கல்யாணி! நான் இனி யுதிஷ்டிரனுடைய பிரதிக்ஞையையும் அனுசரிக்க மாட்டேன். தனஞ்சயனுடைய யோசனையையும் கவனிக்க மாட்டேன். நீ என்ன சொல்கிறாயோ, அதைச் செய்வேன். கீசகனை அவனுடைய சகல பந்துக்களோடு இப்போதே கொல்வேன்!'' என்று எழுந்தான்.

பிறகு திரௌபதி, அவசரப்படவேண்டாம் என்று பீமனை எச்சரிக்கை செய்து தடுத்தாள். இருவரும் ஒரு யோசனை செய்து முடித்தார்கள். கீசகனை ஏமாற்ற இரவில் தனியாக நடனசாலையில் யாருமில்லாத இடத்துக்கு வரச் சொல்லி அவனை அங்கேயே வதம் செய்துவிடுவதென்று தீர்மானித்தார்கள்.

மறுநாள் விடிந்ததும் கீசகன் திரௌபதியைப் பார்த்து, ''ஸைரந்திரி! அரசனுக்கெதிரில் உன்னை நான் கீழே தள்ளிக் காலால் உதைத்தேன். உனக்கு ஒரு ரக்ஷகனும் முன்வரவில்லை. பெயருக்கு மாத்திரம் இந்த விராடன், மத்ஸ்ய தேசத்து அரசன். உண்மையில் சேனாபதியாகிய நான்தான் அரசன் என்று அறிவாய். என்னைச் சுகமாக வந்து அடை. நீ மகாராணியைப் போல் எல்லா போகங்களையும் அனுபவிப்பாய். உனக்கு நான் தாசனாக இருப்பேன்'' என்று மறுபடியும் காமாதுரனாகி வற்புறுத்தினான்.

திரௌபதி அவனுக்கு இணங்கிவிட்டதாகக் காட்டிக் கொண்டு, ''கீசக! நான் சொல்லுகிற வார்த்தையை உண்மையாக நம்பு. என்னுடன் நீ சேர்வதை உன்னுடைய தோழர்களாவது சகோதரர்களாவது அறியக் கூடாது. நான் பழிக்குப் பயந்தவள். யாருக்கும் தெரியாமல் ரகசியத்தைக் காப்பாற்றுவதாகச் சபதம் செய்தாயானால் உனக்கு நான் வசப்படுவேன்'' என்றாள்.

கீசகன் மகிழ்ச்சிப் பரவசமாகிவிட்டான். அவள் இருக்கும் வீட்டுக்குத் தனியாகத் தான் வருவதாக ஒப்புக் கொண்டான்.

''நடனசாலையில் பகலில் பெண்கள் நர்த்தனம் பழகுகிறார்கள். இரவில் அவரவர்கள் இருக்கும் இடத்துக்குப் போய்விடுகிறார்கள். அங்கே யாரும் இருக்க மாட்டார்கள். இன்றிரவு அந்த இடத்துக்கு நீ வந்து சேர். நான் கதவுகளைத் திறந்து வைத்து அங்கேயே படுத்திருப்பேன். அவ்விடத்தில் நான் உனக்கு உடன்பட்டவளாவேன்'' என்றாள் திரௌபதி.

கீசகன் ஆனந்தத்தில் மூழ்கினான். அன்றிரவு ஸ்நானம் செய்து நிறைய அலங்காரங்கள் செய்து கொண்டு கதவைத் தாழ்ப்பாள் போடாமல் திறந்து வைக்கப்பட்டிருந்த நர்த்தனசாலைக்குள் யாருக்கும் தெரியாமல் மெதுவாகப் பிரவேசித்தான்.

ஒரு கட்டிலில் யாரோ படுத்திருந்ததாகக் காணப்பட்டது. அது ஸைரந்திரியாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணினான். கட்டிலண்டை இருட்டில் சென்றான். கட்டிலின் மேல் மெல்லிய ஒரு வெண் பட்டு வஸ்திரம் தரித்துக்கொண்டு படுத்திருந்த பீமசேனனை

ஸைரந்திரி என்று எண்ணிக் கொண்டு கையினால் மெதுவாகத் தொட்டான். உடனே பீமன் எழுந்து, சிங்கம் மானைப் பிடிப்பது போல் கீசகனைப் பிடித்துக் கீழே தள்ளினான்.

இருட்டில் இருவருக்கும் மல் யுத்தம் நடந்தது. இவன் ஸைரந்திரியின் கந்தர்வர்களில் ஒருவன் என்றே கீசகன் எண்ணினான். கீசகனும் பீமனைப் போலவே மிகவும் பலசாலி; அந்தக் காலத்தில் பீமன், பலராமன், கீசகன் மூவரும் மல் யுத்தத்தில் சமப் புகழ் பெற்றவர்கள். வாலி சுக்ரீவர்களுடைய யுத்தத்தைப்போல் பீமனுக்கும் கீசகனுக்கும் போர் நடைபெற்றது.

முடிவில் பீமன் கீசகனைக் கொன்று அவன் உடலைக் கசக்கி ஒரே உருண்டைப் பிண்டமாக்கி விட்டு, திரௌபதியிடம் விடைபெற்றுக் கொண்டு விரைவாக மடைப்பள்ளிக்குச் சென்று ஸ்நானம் செய்து சந்தனம் பூசிக் கொண்டு திருப்தியுடன் படுத்துக் கொண்டான்.

திரௌபதி நர்த்தன சபைக் காவலாளிகளை எழுப்பி, ''கீசகன் என்னை இச்சிக்க வந்தான். என்னுடைய நாதர்களான கந்தர்வர்கள் கீசகனை வதம் செய்து விட்டார்கள். அதர்ம வழியில் ஆசை கொண்ட உங்கள் சேனாபதி கந்தர்வர்களால் கொல்லப்பட்டு இறந்து கிடப்பதைப் பாருங்கள்'' என்று கூறி உருவம் தெரியாத சவமாகக் கிடக்கும் கீசகனைக் காண்பித்தாள்.

## 45. விராடனைக் காத்தது

கீசக வதத்தின் பயனாக விராடனுடைய நகரத்தில் திரௌபதியைக் கண்டு எல்லோருக்கும் பெரும் பயம். இவளோ அழகாக இருக்கிறாள். யாருமே இவளுடைய தோற்றத்தால் கவரப்படுகிறார்கள். இவளுக்குக் காவலோ கந்தர்வர்கள். கண்ணெடுத்துப் பார்த்தாலும் குற்றமாகலாம். இது நகரத்தாருக்கும் அரண்மனையில் உள்ளவர்களுக்கும் பெரிய ஆபத்து. கந்தர்வர்கள் கோபம் கொண்டு ஏதேனும் செய்து விடுவார்கள். இவளை நகரத்தை விட்டு வெளியேற்றி விடுவதே நலம் என்று



எண்ணி எல்லோரும் சுதேஷ்ணையைக் கேட்டுக் கொண்டார்கள்.

''அம்மா! நீ ரொம்பப் புண்ணிய சாலி. தயவுசெய்து எங்கள் ஊரை விட்டுப் போய்விடு. என்னிடம் இது வரை நீ வேலை செய்தது போதும்'' என்றாள் சுதேஷ்ணை திரௌபதியிடம்.

அஞ்ஞாதவாசத் தவணை இன்னும் ஒரு மாதமே இருந்தது. சுதேஷ்ணை சொன்னதைக் கேட்டு வருத்தம் மேலிட்டுத் திரௌபதி, ''என் மேல் கோபம் கொள்ள வேண்டாம். நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. இன்னும் முப்பது நாள் பொறுத்திருங்கள். ஒரு மாதம் தீர்ந்ததும் என் பதிகளான கந்தர்வர்கள் காரிய சித்தி அடைந்து விடுவார்கள். அப்போது நான் அவர்களுடன் சேர்ந்து விடுவேன். கந்தர்வர்கள் விராட ராஜனுக்கும் உனக்கும் என்றென்றைக்கும் நன்றியுள்ளவர்களாக இருப்பார்கள். என்னைப் போகச் சொல்லாதே'' என்றாள்.

திரௌபதிக்குக் கோபம் வருமே என்று சுதேஷ்ணையும் பயந்து அவள் சொல்லுக்கு இசைந்தாள்.

**ப**ன்னிரண்டு வருஷங்கள் முடிந்து அஞ்ஞாதவாச காலம் ஆரம்பமானது முதல் துரியோதனனுடைய சாரணர்கள் அவன் கட்டளைப்படி அநேக தேசங்களிலும், கிராமங்களிலும், நகரங்களிலும் இடைவிடாமல் பாண்டவர்களைத் தேடினார்கள். இவ்வாறு பல மாதங்கள் சென்றன. பாண்டவர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்று சாரணர்கள் துரியோதனனிடம் தெரிவித்தார்கள்.

''மனுஷ்யேந்திரரே! ஜனசஞ்சாரமில்லாத இடங்களிலெல்லாம் பார்த்து விட்டோம். புதர்கள் நிறைந்த காடுகளிலும் பார்த்துவிட்டோம். ஆசிரமங்களிலும், மலைச் சிகரங்களிலும் தேடினோம். ஜனங்கள் நிறைந்திருக்கின்ற நகரங்களிலும் நன்றாக விசாரித்துத் தேடினோம். யாதொரு துப்பும் கிடைக்கவில்லை. அவர்கள் நசித்தே போய் விட்டார்கள் என்பது உறுதி'' என்றார்கள்.

மிக்க பலவானான கீசகனை யாரோ கந்தர்வர்கள் ஒரு ஸ்திரீ விஷயமாகக் கொன்றுவிட்டார்கள் என்கிற விருத்தாந்தம் ஹஸ்தினபுரத்துக்கும் வந்தது. கீசகனைக் கொல்லும் சக்தி வாய்ந்தவர்கள் உலகத்தில் இருப்பவர் மூவரே. அவர்களில் பீமன் ஒருவன். கீசகனைக் கொன்றவன் பீமனாகவே இருக்கலாம். கொலைக்குக் காரணம் திரௌபதியாகவும் இருக்கலாம் என்று துரியோதனன் ஊகித்தான். இவ்வாறு அவன் சந்தேகித்ததைச் சபையிலும் சொன்னான்.

''விராட நகரத்தில் பாண்டவர்கள் மறைந்திருப்பதாக நான் எண்ணுகிறேன். விராட ராஜன் என்னிடம் சிநேகிதம் வைத்துக் கொள்ள மறுத்து வருகிறான். அவனுடைய தேசத்தை நாம் படையெடுத்துப் போய்த் தாக்குவதே நல்லது. பசுக் கூட்டத்தைக் கைப்பற்றுவோம். அங்கே பாண்டவர்கள் இருந்தால் நிச்சயம் போருக்கு வருவார்கள். பிரதிக்ஞை செய்யப்பட்ட காலத்துக்குள் அவர்களை நாம் கண்டு விட்டால் மறுபடியும் பன்னிரண்டு வருட காலம் அவர்கள் வனம் போக வேண்டியதாகும். பாண்டவர்கள் அவ்விடமில்லாவிட்டாலும் நமக்கு நஷ்டம் ஏதும் இல்லை'' என்றான்.

இவ்வாறு துரியோதனன் சபையில் சொன்னதும் திரிகர்த்த தேசாதிபதியான சுசர்மராஜன் எழுந்து தன் யோசனையைச் சொன்னான்: ''மத்ஸ்ய தேசத்து ராஜா எனக்கு விரோதியானவன். கீசகன் என்னை மிகவும் பாடு படுத்தி யிருக்கிறான். அவன் இறந்து விட்டபடியால் விராடனுடைய பலம் இப்போது குறைந்திருக்கிறது. இந்தச் சமயத்தில் விராடனை எதிர்த்துப் படையெடுத்துப் போக எனக்கு அனுமதி கொடுக்க வேண்டும்'' என்றான்.

கர்ணன் இந்த யோசனையை ஆதரித்தான். பிறகு எல்லோரும் சேர்ந்து சுசர்மன் தன்னுடைய சேனையைக் கொண்டு மத்ஸ்ய தேசத்தின் தென் பக்கத்திலிருந்து பிரவேசித்துத் தாக்க வேண்டியது. அப்போது விராடனுடைய சேனையெல்லாம் சுசர்மனை எதிர்க்கச் செல்லும். அதன் பிறகு துரியோதனன் கௌரவப் படையுடன் எதிர்பாராதபடி விராட நகரத்தை வடக்கே தாக்குவதென்று தீர்மானித்தார்கள்.

சுசர்மன் விராடனுடைய தேசத்தில் தெற்கே இருந்த பசுக் கூட்டங்களைக் கவர்ந்து தோட்டங்களையும் வயல்களையும் பாழாக்கினான். இடையர்கள் ஓடிப்போய் விராடனிடம் முறையிட்டார்கள். விராடன் தன் மைத்துனன் கீசகன் இந்த ஆபத்துக் காலத்தில் இல்லையே என்று பரிதபித்தான். அச்சமயம் கங்கன், அதாவது யுதிஷ்டிரன், ''அரசனே! நீர் கவலைப்படவேண்டாம். நான் சந்நியாசியாக இருந்தாலும் ஆயுதப் பயிற்சி பெற்றவன். நான் கவசம் பூண்டு ரதம் ஏறி உம்முடைய சத்துருக்களைத் துரத்தி விடுவேன். சமையற்காரனான மல்லனும் உமது குதிரைக்காரன் தாமக்கிரந்தியும் மாடுகளைப்

பார்த்து வரும் தந்திரீபாலனும் ரதங்களில் ஏறி நமக்குத் துணையாக வர உத்தரவிடும். அவர்களும் வீரர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களுக்கெல்லாம் ரதங்களும் ஆயுதங்களும் தருவதற்கு உத்தரவு செய்வீராக'' என்றான்.

விராடன் மிகவும் மகிழ்ச்சியடைந்து அவ்வாறே உத்தரவிட்டுத் தேர்கள் தயாராயின. அருச்சுனனைத் தவிர மற்ற பாண்டவர்கள் நால்வரும் விராடனுடைய சேனையுடன் சுசர்மனை எதிர்க்கச் சென்றார்கள்.

சுசர்மனுடைய சேனைக்கும் விராடனுடைய சேனைக்கும் கடும் போர் நடந்தது. இரு தரப்பிலும் பலர் மாண்டார்கள். சுசர்மன் தன் துணையாளர்களுடன் விராடனை எதிர்த்து அவனுடைய தேரைச் சூழ்ந்து கொண்டான். விராடன் தேரை விட்டு இறங்கி யுத்தம் செய்ய வேண்டியதாயிற்று. சுசர்மன் விராடனை உயிரோடு பிடித்துத் தன் தேரில் ஏற்றி வைத்துக் கொண்டு வெற்றியுடன் சென்றான். விராடன் இவ்வாறு பிடிபட்டவுடனேயே மத்ஸ்ய ராஜ்ய சைன்யம் தைரியம் இழந்து சிதறி ஓட ஆரம்பித்தது.

அப்போது யுதிஷ்டிரன் பீமசேனனுக்கு உத்தரவிட்டான். ''இனி நீ உபேட்சையாக இருக்கக் கூடாது. விராடனை விடுவித்துச் சிதறி ஓடும் மத்ஸ்ய சேனைக்குத் தைரியம் உண்டாக்கிச் சுசர்மனை எதிர்க்க வேண்டும்'' என்றான்.

யுதிஷ்டிரன் இவ்வாறு சொன்னதும் பீமன் ஒரு மரத்தைப் பிடுங்கப் போனான். யுதிஷ்டிரன் அதைத் தடுத்து, ''நீ உன் வழக்கப்படி மரத்தை எடுத்துச் சிங்கநாதம் செய்தாயானால் உன்னைக் கண்டுகொள்வார்கள். சாதாரண முறையில் தேரின் மேலிருந்தே வில்லை எடுத்து யுத்தம் செய்'' என்றான்.

அவ்வாறே பீமன் தேர் ஏறி, எதிரிகளைத் தாக்கி விராடனை விடுவித்துச் சுசர்மனையும் சிறைப்படுத்தினான். பயந்து ஓடிய மத்ஸ்ய தேசத்துச் சேனை மறுபடியும் ஒழுங்காக நின்று போர் புரிந்து சுசர்மனுடைய படையை வென்றது.

சுசர்மன் தோல்வியடைந்தான் என்ற செய்தி நகரத்துக்கு எட்டியவுடன் ஊராரெல்லாம் நகரத்தை அலங்கரித்து வெற்றியுடன் திரும்பி வரும் அரசனை எதிர் கொள்ளச் சென்றார்கள்.

இவ்வாறு விராட நகரம் அரசனை எதிர் நோக்கிக் கொண்டிருந்தபோது திடீரென்று நகரத்துக்கு வடக்கிலிருக்கும் இடைச் சேரிகளில் உள்ள பசுக்கூட்டங்கள் துரியோதனனுடைய பெருஞ் சேனையால் பிடிக்கப்பட்டன. கௌரவ சேனை அட்டகாசம் செய்து கொண்டு லட்சக் கணக்கான பசுக்களை வளைத்து ஓட்டிச் சென்றது. மாட்டுக்காரர்களுடைய தலைவன் நகரத்துக்கு ஓடி வந்து விராடனுடைய குமாரன் உத்தரனைக் கண்டு முறையிட்டான்.

''ராஜ குமாரனே! கௌரவர்கள் நம்முடைய பசுக்களை ஓட்டிக் கொண்டு போகிறார்கள். விராட ராஜன் தெற்கே திரிகர்த்தர்களை எதிர்க்கச் சென்று விட்டான். எங்களுக்கு யாரும் காப்பு இல்லாமல் தவிக்கிறோம். அரசனுக்குப் புத்திரனாகிய நீதான் வந்து பசுக்களை மீட்டுக் கொண்டு வரவேண்டும். குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவாயாக!''

இவ்வாறு இடைச்சேரித் தலைவன் மகாஜனங்களுக்கும் அந்தப்புர ஸ்திரீகளுக்கும் எதிரில் உத்தரனிடம் முறையிட்டபோது ராஜகுமாரனும் உற்சாகமடைந்தான். ''தேரை ஓட்டக் கூடிய ஒரு சாரதி இருந்தானானால் நான் ஒருவனாகச் சென்று பசுக்களைத் திருப்பிக் கொண்டு வந்து சேருவேன். நான் போய்ச் செய்யும் யுத்தத்தைக் கண்டு இவன் அருச்சுனனோ என்று எல்லோரும் திகைப்பார்கள்!'' என்றான்.

இவ்வாறு உத்தரன் சொன்னபோது திரௌபதியானவள் அந்தப்புரத்தில் இருந்தாள். அவள் உத்தரை இருந்த இடத்துக்கு ஓடிச் சென்று, ''ராஜகுமாரியே! தேசத்துக்கு ஆபத்து நேரிட்டிருக்கிறது. கௌரவப் படை வடக்கே நகரத்தைத் தாக்கி வருவதாகவும், மத்ஸ்ய தேசத்துப் பசுக்கள் பிடிபட்டதாகவும் கோபாலர்கள் இளவரசனிடம் ஓடிவந்து முறையிடுகின்றனர். உத்தரனுக்குச் சாரதி வேண்டும். அதனால் வேலை தடைப்பட்டிருக்கிறது. பிருகன்னளை அருச்சுனனுக்குச் சாரத்தியம் செய்திருக்கிறாள். நான் பாண்டவர்களுடைய அந்தப்புரத்தில் வேலையிலிருந்தபோது இதைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். பிருகன்னளை அருச்சுனனிடம் வில் வித்தையும் பயின்றிருக்கிறாள் என்பது எனக்குத் தெரியும். அவளை நீ உடனே உத்தரனுக்குச் சாரதியாகப் போகக் கட்டளையிட வேண்டும்'' என்றாள்.

உத்தரை தன் சகோதரனிடம் சென்றாள். ''தேரோட்டுவதில் பிருகன்னளை பெரிய சாமர்த்தியசாலி என்று தெரிய வருகிறது. அவளை அழைத்துக் கொண்டு நீ போய் ஊரைக் காப்பாற்று. இந்தப் பிருகன்னளை பாண்டவ வீரனான அருச்சுனனுக்குத் தேரோட்டியாக இருந்திருக்கிறாளாம். நம்முடைய ஸைரந்திரி சொல்லுகிறாள்'' என்றாள். **(தொடரும்)**



# புல்லின் நிறம் மாறுமா? சூரியன்

அமெரிக்க இந்தியர்களின் நலனைக் கவனிக்கவென்று ஓர் உயர் அதிகாரியை நியமிக்க எண்ணிய ஆபிரகாம் லிங்கன், ஹூர்ஹில் என்பவரை யோசனை கேட்டார்.

''பரிசுத்தமான மனம் கொண்டவனும், ஒழுக்கம் மிகுந்தவனும், எளியவனும், கடமையில் தன்னையே அர்ப்பணித்துக் கொள்பவனும், நல்ல கிறிஸ்துவனுமான ஒருவனைச் சிபாரிசு செய்ய முடியுமா உங்களால்?''

''அப்படிப்பட்டவர் உங்களுக்குக் கிடைக்க மாட்டார்'' என்றார் ஹூர்ஹில்.

''ஏன் கிடைக்க மாட்டார்?''

''ஏனென்றால் அவரை ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னால் சிலுவையில் அறைந்துவிட்டார்கள்!'' என்றார் ஹூர்ஹில்.

லிங்கன் எதிர்பார்த்தது போன்ற ஒரு மனிதன் சிவப்பிந்தியர்களின் நலனைக் கவனிக்க இன்றளவுக்கும் அகப்பட்டிருக்க மாட்டான் என்பது உறுதிதான். அப்படி அகப்பட்டிருந்தால் அவன் மனிதனல்ல, தெய்வமாகத்தானே இருப்பான்?

சிவப்பிந்தியர்களும் சரி, ஆதிநாளில் அமெரிக்காவில் குடியேறியவர்களும் சரி, மனிதர்களாகவேதான் விளங்கினார்கள். மனிதர்களுக்குண்டான ஆசாபாசங்கள் அவர்களுக்கு இருந்தன. அதனால்தான் அன்று அவர்களிடையே அத்தனை போர்கள் நடைபெற்றன. இவற்றை யுத்தம் என்று வர்ணிப்பதை விடப் படுகொலைகள் என்றே சொல்லலாம்.

உதாரணமாக 1860ல் பிரமிட் லேக் என்ற இடத்தில் புதிதாகக் குடியேறிய வெள்ளையர் குடும்பங்கள் மீது சிவப்பிந்தியர் பாய்ந்து நானூறு பேர்களைக் கொன்று குவித்தார்கள். வெள்ளையர் மட்டும் என்ன சும்மாவா இருந்தார்கள்? 1864ல் ஸாண்ட் கிரீக் என்னுமிடத்தில் ஆயிரம் போர்வீரர்கள் ஒரு சிவப்பிந்தியக் கிராமத்தில் புகுந்து ஆண் பெண் குழந்தை மிருகம் அனைத்தையும் வெட்டித் தள்ளினார்கள். ஓர் உயிர் மிஞ்சவில்லை.

இப்படியாகப் படுகொலைகள் நிகழ்ந்தன; அவ்வப்போது யுத்தங்களும் நடந்தன.

அமெரிக்கச் சிவப்பிந்தியர்களின் தொன்மையை ஆராய்ந்தவர்கள் சுமார் இருபத்தி ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஆதிவாசிகள் அமெரிக்காவில் வாழ்ந்து வந்ததாகக் கூறுகிறார்கள். சரித்திர காலத்துக்கும் முற்பட்ட சூழ்நிலை. அன்று பூகோள ரீதியில் ஏற்பட்ட மாறுதல்களையும், அவை அந்த ஆதிவாசிகளை எப்படிப் பாதித்திருக்கும் என்பதையும் சொல்கிறார்கள். பனிப்பாறைகள் உருகியதையும், ஏரிகள் வற்றியதையும், காடுகள் அழிந்ததையும், பாலைவனம் உருவானதையும் வர்ணிக்கிறார்கள்.

இந்த இயற்கை இன்னல்களையெல்லாம் தாங்கிப் பகுதி பகுதியாகப் பிரிந்துப் பல திசைகளுக்கும் சென்று வாழத் தொடங்கினர் அந்த ஆதிவாசிகள். காலத்தை நிர்ணயிக்க முடியாத அளவுக்குத் தொன்மையான இவர்களது சித்திரங்கள் இன்றைக்கும் சில குகைகளில் காணப்படுகின்றன.

மேனாட்டவர் புதிய உலகை – அமெரிக்காவைக் கண்டுபிடித்து ஐரோப்பிய நாகரிகம் அங்கு பரவ ஆரம்பிக்கு முன்பே இந்த ஆதிவாசிகள் தங்களுக்குத் தெரிந்த அளவில் நாகரிக வளர்ச்சி அடையத் தொடங்கி

னார்கள். வேட்டையில் வெற்றி பெறவும் துரதிர்ஷ்டத்தை விரட்டவும் முகத்தில் வர்ணம் தீட்டி அலங்கரித்துக் கொண்டார்கள். புருஷன் மனைவி — கல்யாணம் என்ற வழக்கத்தை அனுசரித்தார்கள். முடியை வெட்டி, மொட்டை அடித்துக் கொண்டு தங்கள் துக்கத்தைத் தெரியப்படுத்தினார்கள். எளிய வாத்தியங்களைக் கொண்டு இசை எழுப்பி, தாளத்துக்கு ஏற்ப நாட்டியமாடினார்கள், விருந்துண்டார்கள், அரட்டை அடித்து மகிழ்ந்தார்கள்.

இந்த எளிய மக்கள் மீது திடீரென ஒரு நாள் ஐரோப்பிய நாட்டவர் பாய்ந்தனர். ஸ்பெயின், பிரிட்டன், பிரான்ஸ் முதலிய பல தேசத்து மக்களும், போர்வீரர்களும் அமெரிக்காவைக் கபளீகரம் செய்யத் தொடங்கியபோது சிவப்பிந்தியர் போராடினர். போராடிப் போராடித் தோற்ற







# மேற்கே உதிக்குமா?

கி. ராஜேந்திரன்



இடது பக்கம்: மழை பெய்ய வேண்டும் என்று பிரார்த்தித்து நடனமாடும் சிவப்பிந்தியர்.

இந்தப் பக்கத்தில்: அம்மாவின் முதுகிலேயே குழந்தைக்குத் தூளி. சிவப்பிந்தியரின் கிராமம். இன்னொரு நடனத் தோற்றம். சிவப்பிந்தியர்களின் கைத்திறனால் உருவான கலைப் பொருள்களை விற்கும் கடை.

னர். கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்தபோது, 846,000 சிவப்பிந்தியர்கள் இருந்ததாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. குத்து மதிப்பாகத்தான். இதற்கும் அதிகமாகவே இருந்திருக்கலாம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சிவப்பிந்தியர்களின் ஜனத்தொகை 243,000. பேராசை என்னும் பேய் நிகழ்த்திய படுகொலை என்று சொல்லாமல் வேறு எப்படி இதை வர்ணிப்பது? பேராசைப் பேயின் பசியை மேலும் கிளறிவிட்டது ஆங்காங்கே கிடைத்த தங்கம். கடல் கடந்து வந்தவர்கள் பொன்னின் மதிப்பை உணர்ந்தவர்களல்லவா?

சிவப்பிந்தியர்களுக்குள்ளேயே ஒற்றுமை நிலவவில்லை. அவர்களில் ஒரு சாரார் மற்றொரு சாராரைக் காட்டிக் கொடுத்தனர்; ஏமாற்றி அடிமைகளாக்கி ஸ்பானிஷ் நாட்டவருக்கு விற்றனர்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு இருதரப்பினருக்கும் விவேகம் உதித்தது. அழிப்பதிலோ அழிக்கப்படுவதிலோ பொருள் இல்லை என உணர்ந்தனர். சமாதானத்துக்கு அடிகோலினர். வெள்ளையர் சிவப்பிந்தியர்களுக்கென அமெரிக்காவின் சில பகுதிகளை விட்டுக் கொடுத்தனர். ரொம்பத் தாராள மனத்துடன் இந்தப் பகுதிகளில் சிவப்பிந்தியர் வெள்ளையரின் தலையீட்டுக்கோ தொந்தரவுக்கோ ஆளாகாமல் வாழலாம் என்று ஒப்பந்தம் செய்து கொண்டனர். ஆனாலும் அமெரிக்க அரசாங்கத்துக்கு உட்பட்ட பகுதிகளாகவே இவை திகழும். அமெரிக்க அரசாங்கம் தர்மகர்த்தாவாக இருந்து இப்பகுதிகளைப் பாதுகாக்கும். இப்பகுதிகளில் உணவுக்கும் கல்விக்கும் நீருக்கும் தட்டுப்பாடு ஏற்படாமல் கவனித்துக் கொள்வது அமெரிக்க அரசாங்கத்தின் கடமையாயிற்று. புல்லின் நிறம் பச்சையாகவே இருக்கும் வரையில் சூரியன் கிழக்கில் உதித்துக் கொண்டிருக்கும் வரையில் இந்த ஏற்பாட்டின்படி நடப்பதாக அமெரிக்க அரசாங்கம் ஒப்புக் கொண்டது. இன்றளவும் சூரியன் மேற்கே உதிக்கவில்லை. புல்லின் நிறமும் மாறவில்லை. ஆகவே இன்றைக்கும் இந்த ஏற்பாடே நீடிக்கிறது! அமைதி நிலவிய பிறகு சிவப்பிந்தியர்களின் ஜனத்தொகையும் படிப்படியாக உயர்ந்து இன்று 552,228 ஆக இருக்கிறது.

சிவப்பிந்தியர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட பகுதிகளுள் ஒன்றினுக்கு நான் சென்றிருந்தேன். மரச் சட்டங்களால் சுவர் அமைத்து, இடைவெளிகளைச் சேற்றைக்கொண்டு நிரப்பி, தகரக் கூரை போட்ட வீடுகள் இங்கொன்றும் அங்கொன்றுமாக நின்றன. ஒரு கொட்டகையினடியில் மண் தரையில் பழைய மேஜை ஒன்றைச் சுற்றிச் சில முக்காலிகள். அவற்றில் சிவப்பிந்தியர்கள் அமர்ந்து நமது சுக்கா சப்பாத்தி போன்ற ஒன்றைக் குழம்பில் தோய்த்து வாயிலிட்டு அசை போட்டார்கள். வறுமை அவர்கள் முகத்தில் எழுதி ஒட்டியிருந்தது. புழுதி கிளம்பும் மோசமான சாலைகள், அழுக்கடைந்த உடை, சிக்குப் பிடித்த கேசம் — 'அமெரிக்காவிலா இருக்கிறேன் நான்?' காலச்சக்கரம் இந்த இடத்தில் மட்டும் நிதானமாகச் சுழல்கிறதோ?

காரணங்களை ஆராயப் புகுந்தபோது எல்லாச் சிவப்பிந்தியர்களுமே இப்படி இல்லை எனத் தெரிய வந்தது. சிவப்பிந்தியர்களுக்கென ஒதுக்கிவிடப்பட்ட பகுதிகள் சுமார் முந்நூறு உள்ளன. இவற்றில் அளவில் மிகச் சிறியனவும் உண்டு. அரிசோனா ராஜ்யத்தில் இருப்பது போல் 25,000 சதுர மைல் விஸ்தீரணமுள்ளதும் உண்டு. இப்பகுதிகளுள் சிலவற்றில் எண்ணெய் இருப்பது தெரிந்ததும் வெள்ளையருக்கு நிலத்தைக் குத்தகைக்கு விட்டனர். எண்ணெய்க் கிணறுகள் தோண்டப்பட்டன. அது ஏராளமான செல்வத்தை அந்தச் சமூகத்துக்குக் கொண்டு வந்து தந்தது. வேறு பல பகுதிகளில் விவசாயத்துக்கு வளமான நிலம் இல்லை. பூமித் தாய் அளிக்கும் வேறு கனிப் பொருள்களும் இல்லை. இப்பகுதிகளில் சிவப்பிந்திய சமூகத்தினர் வறுமையில் உழல்கின்றனர்.

இவர்களுக்கென்று ஒதுக்கி விடப்பட்ட நிலத்துக்கோ, நிலத்தில் விளைவனவற்றுக்கோ இவர்கள் வரி செலுத்த வேண்டியதில்லை. இவர்கள் அமெரிக்கப் பிரஜைகளே; வோட்டுரிமை உண்டு. ஆயினும் ஆதிநாள் ஒப்பந்தம் காரணமாய் மேலே குறிப்பிட்டது போன்ற வரிச் சலுகைகள் சில இருக்கின்றன. சலுகைகள் இருந்தும் வறுமை இவர்களை ஆட்கொள்வதற்கு இன்னொரு காரணம் உழைப்பது இவர்களது பரம்பரையிலேயே கிடையாது. சிவப்பிந்தியர்களில் ஆண்கள் சண்டை போடுவார்கள், உண்பார்கள், புகை பிடிப்பார்கள், மனைவிமார்களுடன் சல்லாபிப்பார்கள்; அவ்வளவுதான்! நிலத்தில் உழைப்பதும், பயிராக்குவதும் பெண்களுடைய வேலையாகக் கருதப்பட்டு வந்தது.

ஒப்பந்தப்படி ஒதுக்கிவிடப்பட்ட பகுதிகளில் உள்ள நிலம் சிவப்பிந்திய சமூகத்துக்குச் சொந்தம். சில இடங்களில் தனி நபருக்குச் சொந்தமான நிலங்களும் உண்டு. தனி நபரோ, சமூகமோ நிலத்தை வெள்ளையனுக்கு அடமானம் வைத்துக் கடன் வாங்கலாம், வெள்ளையனுக்குக் குத்தகைக்கு விடலாம், ஆனால் விற்க முடியாது. அப்படியே விற்பதானாலும் அப்பகுதியில் வாழும் சிவப்பிந்திய சமூகத்துக்கே பொது உடைமையாக்கும் விதத்தில்தான் விற்க முடியும்! நிலம் வெள்ளையனுக்குச் சொந்தமாவதை அந்தச் சமூகம் விரும்பவில்லை; சட்டமும் இடம் தரவில்லை.

இதுபோன்ற சிக்கல்களால் வெள்ளையர் இந்த இடங்களில் தொழில் வளம் பெருக்க அதிகமாக முன்வருவதில்லை. சிவப்பிந்தியர்கள் தாங்களாகவே தொழில் வளத்தைப் பெருக்கிக் கொள்ளப் பண வசதி இல்லை; தொழில் நுணுக்கத் திறமையுமில்லை. இரண்டுமிருந்தால் ஆர்வமில்லை!

செவ்விந்தியர்களின் கைத்திறனால் உருவான கலைப் பொருள்களை விற்ற கடையினுள் நுழைந்தேன் நான். ஒரு சிவப்பிந்தியப் பெண்மணி ஒரு ஜமுக்காளத்தை நெய்யச் சாதாரணமாக மூன்று மாதங்கள் எடுத்துக்கொள்கிறாள் என்று அறிந்தேன். ஆட்டு ரோமத்திலிருந்து நூலிழை தயாரித்து ஜமக்காளமாக நெய்து வண்ணப் பூச்சும் கொடுக்கிறாள். விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்த சில ஜமக்காளங்களில், 'மூவாயிரம் டாலர்' என்று குறிப்பிடப்பட்

டிருந்தது. ''அடேயப்பா! இவ்வளவு விலையா!'' என்று மலைத்தேன். இருப்பினும் விற்பனைக்கு வரும் கலைப் பொருள்களின் எண்ணிக்கை சொற்பமே. ஆதலால் சிவப்பிந்தியர்களுக்கு அது ஒன்றும் பெருமளவுக்கு வருவாயைத் தேடித் தந்துவிடுவதில்லை என்றும் அறிந்தேன். ''போதாக் குறைக்கு மோசடிகள் வேறு'' என்றார் உடன் வந்த நண்பர். கூடவே சுவையான கதை ஒன்றும் கூறினார்.

சுற்றுலாப் பிரயாணி ஒருவன் ஒரு சிவப்பிந்தியனிடம் கலை வேலைப்பாடுடன் கூடிய ஒரு கூடையைப் பேரம் பேசி வாங்கினான். சிவப்பிந்தியரின் கலைத் திறனுக்கு எடுத்துக்காட்டாக அதை ஊருக்குக் கொண்டு சென்று நண்பர்களிடம் காட்ட எண்ணினான். பணத்தைக் கொடுத்துவிட்டு நடந்தவன் சற்று நேரத்துக்கெல்லாம் கோபமாகத் திரும்பி வந்தான். ''என்னை மோசம் செய்துவிட்டாயே! அடுத்த தெருவில் இதே போன்ற கூடை பாதி விலைக்குக் கிடைக்கிறதே! இதற்குத்தான் சிவப்பிந்தியர்களையே நம்பக்கூடாது என்கிறது!'' இப்படி இரைந்தான் சுற்றுலாப் பிரயாணி.

சிவப்பிந்தியன் அமைதியாகப் பதில் சொன்னான்: ''உங்களைப் போன்ற வெள்ளையரை நம்பக்கூடாது என்று சொல்லுங்கள்! ஏனென்றால் இங்கு விற்பனைக்கு உள்ள இந்தப் பொருள்கள் எல்லாவற்றையும் ஒரு வெள்ளையன்தான் என்னிடம் விற்றுவிட்டுப் போனான். அப்படிக் கொடுத்துச் சென்றவன் இந்த ஊரில் இது போன்ற பொருள்களை வேறு யாருக்கும் தருவதில்லை என்றும் உறுதி கூறிச் சென்றான்! வாக்கு மீறியிருக்கிறான், பாருங்கள்!''

சிவப்பிந்தியர்களுக்கென ஒதுக்கி விடப்பட்ட பகுதிகளில் அவர்களுடைய தனித் தலைவர்களும் உண்டு; சுய ஆட்சியும் உண்டு.

இவர்களுடைய முன்னேற்றத்துக்கும், வளர்ச்சிக்கும் தேவைப்படும் பணம் இன்னொரு விதத்திலும் இப்போது கிடைக்கிறது. ஆதி நாளில் நஷ்டஈடு தராமலும் விலைக்கு வாங்காமலும் அமெரிக்க அரசாங்கம் தங்களிடமிருந்து நிலத்தைப் பறித்துக் கொண்டதனால் ஏற்பட்ட இழப்புக்குப் பரிகாரம் தேடி அமெரிக்க அரசாங்கத்தின்மீது பல செவ்விந்திய சமூகங்கள் சமீப காலத்தில் வழக்குத் தொடுத்தன. விசாரணைக்கென்று அமைக்கப்பட்ட கமிஷன் பல மில்லியன் டாலர்களை அமெரிக்க அரசாங்கம் செவ்விந்தியக் கூட்டத்தினருக்குத் தரவேண்டும் எனத் தீர்ப்புக்கள் வழங்கியுள்ளது.

அமெரிக்க அரசினரால் சிவப்பிந்தியர்களுக்கென்று நடத்தப்படும் சில பள்ளிகளுக்கு நான் சென்றிருந்தேன். பாட போதனையுடன் தொழில் போதனையும் நடப்பதைக் கண்டேன். எனினும் இவர்களுக்கு இப்படிப்பட்ட தனிப் பள்ளிகள் எதற்கு என்ற எண்ணம் எழாமல் இல்லை. ''மற்ற அமெரிக்கச் சிறுவர்களுடன் சேர்ந்து பொதுப் பள்ளிகளில் இவர்கள் படிக்கக் கூடாதா?''

''தாராளமாகப் படிக்கலாம். தடையில்லை. ஆனால் சிவப்பிந்தியர்கள் அதை விரும்பவில்லை. தனிப் பள்ளிகளைப் பெறுவது அவர்கள் உரிமை. அதை அவர்கள் விட்டுக்கொடுப்பதில்லை. இது போன்ற பள்ளிகள் பலதரப்பட்ட சிவப்பிந்திய சமூகத்தைச் சேர்ந்தவர்களை ஓரிடத்தில் ஒன்று சேர்ப்பதால் அவர்களுக்குள்ளேயே ஒருமைப்பாடு வளர உதவுகின்றன. இதுவும் இன்று தேவைதானே!''

''தங்களுக்கென ஒதுக்கிவிடப்பட்ட தனிப் பகுதிகளில் வாழாமல் இவர்கள் ஏன் அமெரிக்கச் சமூகத்துடன் ஐக்கியமடைந்துவிடக் கூடாது? இவர்களது தொன்மையான தனி நாகரிகத்தைப் பாதுகாத்து அதே நேரத்தில் இவர்கள் அமெரிக்கர்களாக வாழவும் வழி செய்யக் கூடாதா?''

எனக்கு எதிர்ப் பக்கத்திலிருந்து இப்போது சிரிப்புக் கிளம்பியது. ''அமெரிக்கர்களாக இவர்கள் வாழவேண்டும் என்கிறீர்களா? அப்படிச் சொன்னால் இவர்கள் தாங்கள்தான் அமெரிக்கர்கள் என்றும் வெள்ளையரை அந்நியர் என்றும் கூறுவார்கள்!''

சிவப்பிந்திய சமூகம் தங்களுக்கென ஒதுக்கப்பட்ட பகுதிகளை விட்டு வெளியே வர அஞ்சுகிறது. வெள்ளையரை இந்தப் பகுதிக்குள் அதிகமாக வரவிடவும் தயங்குகிறது. கதவுகளை அகலத் திறந்துவிட்டால் இன்றைய அமெரிக்க ஜனத்தொகையில் ஒரு சதவீதத்துக்கும் குறைவாக இருக்கும் செவ்விந்தியர் தங்களது தனி சமூகம் என்றே ஒன்று இல்லாமல் போய்விடும் எனப் பயப்படுகிறார்கள்.

கல்லூரிப் படிப்புக்குப் போகும் செவ்விந்திய இளைஞர்கள் வெள்ளையருடன் சேர்ந்துதான் படிக்க வேண்டும். கல்லூரிக்குச் செல்லும் சிவப்பிந்திய இளைஞர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. வேலை வாய்ப்புக்கள் தேடி ஒதுக்கப்பட்ட பகுதிகளை விட்டுக் கிளம்பும் இளைஞர்களின் எண்ணிக்கையும் பெருகி வருகிறது. இதனாலெல்லாம் நாளடைவில் சிவப்பிந்திய சமூகத்தில் நிலவும் வறுமை ஒழிவதுடன் அவர்கள் தனித்து வாழாமல் ஒரே அமெரிக்க சமூகத்தினராய் விளங்குவார்கள் என்றும் எதிர்பார்க்கலாம்.

இதற்கிடையில் இன்றைய நிலையோ?—இதோ இன்னொரு கதை:

முன்னாள் ஜனாதிபதி தியோடர் ரூஸ்வெல்ட் ஒரு சிவப்பிந்தியத் தலைவரைப் பார்த்துச் சொன்னார்: ''நீங்கள் ஏன் வெள்ளையரைப் போல் ஒரு மனைவியுடன் திருப்தி அடையக் கூடாது? ஐந்து மனைவியர் அவசியந்தானா? நால்வரை விவாகரத்துச் செய்து விடுங்கள்; ஒரு மனைவியிடம் விசுவாசத்துடன் துரோகமிழைக்காமல் வாழுங்கள்!''

இதைக் கேட்டுவிட்டு அந்தச் செவ்விந்தியத் தலைவன் கூறினான்: ''அப்படியே ஆகட்டும். ஆனால் நான் எந்த மனைவியை வைத்துக் கொள்வது என்று நீங்களே முடிவு செய்து மற்ற நால்வருக்கும் நீங்களே விஷயத்தைத் தெரியப்படுத்தி விடுங்கள்!'' துணிவு வருமா தியோடர் ரூஸ்வெல்ட்டுக்கு? இத்தகைய நிலையிலிருந்து இன்று முன்னேற்றம் கணிசமான அளவுக்கு உண்டு. எனினும் செவ்விந்தியர்கள் வாழ்க்கைத் தரத்திலும் நவீன நாகரிகத்திலும் வெள்ளையருக்கு ஒப்பாக உயர இன்னும் நீண்ட காலம் ஆகும்.

# இனிக்கும் நினைவுகள்

## 19. பொங்கும் கடல்

தீயில் பொசுக்கிய முகபாவமும், தூற்றலில் பட்ட மல்லிகை மலரின் வெண்மை செம்மை நிறமாகியது போன்ற கண்களுமாய்ச் சீலியா உருகி நின்றாள். இந்த விசாலமான பிரபஞ்சத்தில் விரிந்து பறந்த இலைகளின் இடையே குருத்திலையாக ஆடுவது போன்ற ஓர் உணர்வு தோன்றியது. அங்கு நிறைவின் கர்வம் அடங்கி ஒடுங்கி விட்டது.

''குயிலி! எனக்குத் தலைவலி அதிகரித்துக்கொண்டே வருகிறது. இப்போது என்றால் ஒன்றும் சாப்பிடக் கூட முடியாது. வெறுமனே படுத்து ஒரு தூக்கம் போட்டால்தான் சரியாகும். நான் போகிறேன் குழலி. பெரியம்மாவிடம்



சொல்லு. வருத்தப்படாதே. காலையில் வந்து பார்க்கிறேன்...'' என்று கூறிய சீலியா அவளது பதிலை எதிர்நோக்காமலேயே கீழே இறங்கி வீட்டின் பக்கவாட்டிலிருந்த கார் ஷெட்டை அடுத்த கேட் வழியாக யாருமறியாமல் வெளியேறினாள். சீலியாவின் வெளிறிய முகத்தைக் கண்ட சமையற்காரி பாக்கியம், ''என்னம்மா உடம்புக்கு? என்னமோ போல் இருக்கீங்களே!'' என்று பதறினாள்.

அவளைக் கையமர்த்திவிட்டுச் சீலியா மாடி ஹாலுக்குச் சென்று ஒரு சோபாவில் பொத்தென விழுந்தாள். இதோ, தனக்குச் சேர வேண்டிய பாக்கியங்களையும், சுகங்களையும் அவள், தெரிந்தே விட்டுக் கொடுத்து விட்டுத் துடிக்கிறாள். எதிர் வீட்டின் குதூகலத்தில் அவள் இன்பம் பறி போய் விட்டது. அவள் கண்ணீர் சர்வ சுதந்திரமாகப் பெருக்கெடுத்தோட உட்கார்ந்



இதோ:

# மாஜிக்

## கண்ணுக்கு வெண்மை கருத்துக்குப் புதுமை

ஆம், **மாஜிக்** என்றாலே அலாதி தான். அதன் அபரிமித வெண்மையாக்கும் ஆற்றல் வெளிர்த் துணிகளைப் புதியன போல் வெளுக்கிறது. அதன் தூய்மை மணமோ துணிகளிலே நிலைக்கிறது. **மாஜிக்** தரும் நுரைவளம் இழைகளுக்கிடையில் உள்ள அழுக்குகளை நீரோடு கரைக்கிறது. வீட்டுச் சலவையை சுலபமானதாகவும் சிக்கனம் உள்ளதாகவும் செய்கிறது. பருத்தியோ, பட்டோ, நைலானோ, டெரீனோ, ஏன் கம்பளித் துணிகளையும் கூட **மாஜிக்** குடன் சலவை செய்யுங்கள். **மாஜிக்** ஒரு விந்தை மிக்க சலவைத் தூள்!




***மாஜிக் வெண்மை, மாஜிக் மெருகு, மாஜிக் புதுமை!***

டாடா
தயாரிப்பு

CMTM-10-120-TM

திருந்தாள். இப்படிப்பட்ட கதறலையும் ஓலத்தையும் சுமந்துகொண்டு இத்தனை நேரம் குழலியோடு எப்படித்தான் பேசிக் கொண்டிருந்தாளோ? எதிர் வீட்டின் ஒலிகள் தேய்ந்து மறைந்தன.

படி ஏறி ராகவனும் லிஸ்ஸியும் வருகிறார்கள் என்பதை உணர்ந்த சீலியா கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். ஆனால் அவர்கள் இருவரும் அவளருகில் வந்து இருபுறமுமாக அமர்ந்து கொண்டதும், ராகவன், ''ஏனம்மா சீலியா முன்பே வந்து விட்டாய்?'' என்று கேட்டதும் அடக்கிய துயரமெல்லாம் வழிய வழியப் பெருக்கெடுத்தோட ஆரம்பித்தது. அன்னையைப் பார்த்தாள், தந்தையைப் பார்த்தாள். ஒன்றுமே உணராத தந்தையின் கேள்வி, எல்லாவற்றையும் உணர்ந்து கொண்ட தாயின் பார்வை, அந்தப் பார்வை அவளை வீழ்த்திவிடும் போலிருந்தது. ''மம்மி...மம்மி..... ப்ளீஸ் டோன்ட் ஸீ மீ லைக் தட்'' என்று சுருண்டவாறே தாயின் மார்பில் முகம் பதித்து விம்மினாள் அவள்.

''என்ன சீலியா?... என்ன?.. என்ன இது?'' என்று ஒன்றும் விளங்காமலே ராகவன் பதறிச் சீலியாவையும், லிஸ்ஸியையும் மாறி மாறிப் பார்த்தார். ஆனால் அவரது கேள்விக்கு விடையளிக்கும் தென்பும், விடையளிக்க வேண்டிய அவசியமும் அங்கே யாருக்கும் ஏற்படவில்லை.

லிஸ்ஸி சீலியாவின் கண்ணீரைத் துடைத்தாள். ஆனால் அச்சத்தில் திணறும் மூச்சை அவளால் சமனப்படுத்த முடியவில்லை.

சில மணி நேரங்களுக்கு முன் தனது அந்தரங்கத்தைத் தாயிடம் திறந்து காட்டினாளே சீலியா, அதை இனி எப்படி வாய் திறந்து அன்னையிடம் நிறைவேற்றி வைக்குமாறு கேட்பாள்? அல்லது கோடி காட்டி விட்ட தன் அன்புக்குரியவனைப்பற்றி வெளியேதான் எப்படிச் சொல்வாள்? யாருக்கும் வெளியிட முடியாத ரகசியமாக, யாரிடமும் கூறி இறக்கி வைத்து விட முடியாத சுமையாக ஆகிவிட்டதே அவளது ஆசை!

''லிஸ்ஸி! என்னவென்று கூறேன்?'' என்றார் ராகவன். அவரது மிருதுவான குரலில் குழப்பம் தனித்தது.

லிஸ்ஸி எழுந்து இமே போய்க் குறிப்பிட்ட புத்தகத்திலிருந்த வசந்தனின் புகைப்படத்தை எடுத்து வந்து அவரிடம் தந்தாள்.

''இன்று மாலை இந்தப் புகைப்படத்திலிருப்பவரை உங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கப் போவதாகச் சீலியா என்னிடம் கூறினாள்.... ஆனால் ....ஆனால் இவன்தான் குழலிக்குக் கணவனாகப் போகிறவன் என்று தெரிந்து விட்டதே!''

ராகவனின் பாசம் துடித்தது. அந்தப் புதிய குழப்பம் மறுபடியும் வாழ்வின் அமைதியை விழுங்கி விடுமோ? அவர் சீலியாவின் தலையை வருடியவாறே யோசனையில் ஆழ்ந்தார்.

''இது விந்தையாக இல்லை? முன்பு துளசிக்குரிய வாழ்வை நான் கவர்ந்து கொண்ட பழி சூழ்ந்தது. இப்போது அதுவே கொஞ்சம் திசை மாறிச் சீலியாவுக்குரியதை...''

லிஸ்ஸியைப் பாதியிலே இடைவெட்டிய ராகவன், ''ஆனால்....லிஸ்ஸி! அண்ணா சும்மா ஏற்பாடுதானே செய்கிறார்? நான் போய்க் கூறினால் நிச்சயம் ஏற்றுக் கொள்வார்..... இதோ, இப்போதே போய்.....'' என்று கூறிய வண்ணம் எழுந்தார்.

''அப்பா... வேண்டாம்...அப்பா... குழலிக்கு...'' எனத் திணறினாள் சீலியா.

''குழலிக்கு என்னம்மா? அவள் அவனுடன் பழகியே இருக்க மாட்டாள். நீ அமைதியாக இரு...'' என்று கூறி விட்டு அவர் எழுந்து எதிர் வீட்டை நோக்கி நடந்தார்.

அதற்கு மேல் சீலியாவின் துயரமான சுயநலமும் குழலியைப் பற்றி எதுவும் கூற விடவில்லை. அப்படியும் நடக்குமா? இந்த ஏற்பாடுகள் தடம் மாறித் தனக்குச் சாதகமான போக்கில் வருமா? உள்ளுக்குள் உதறி விட முடியாத பற்றாய் ஒதுங்கிவிட்ட இந்தப் பற்று, வாழ்க்கைப் பந்தயத்தில் ஜயிக்குமா?

இரவின் மங்கிய ஒளியில், பாசத்தின் கதறுதலுக்குக் கிடைக்கப் போகிற நல்ல பயனை நம்பி ராகவன் மீனாட்சிசுந்தரத்தின் வீட்டுக்குள் நுழைந்தார். முன் ஹாலில் மீனாட்சிசுந்தரமும் சரஸ்வதியும் ஒரு சோபாவிலும், அதற்கு எதிர்த்தாற் போல் துளசியும், குழலியும் வேறு ஒரு சோபாவிலுமாக அமர்ந்திருந்தனர். அந்தச் சூழ்நிலையே அவர்கள் இனிக்கும் சம்பாஷணையில் ஈடுபட்டிருப்பதைக் காட்டியது. ராகவன் தயக்கத்தோடு அந்தச் சூழலில் அடிவைத்தார். அவரைக் கண்டதும் துளசி எழுந்து கொண்டாள்.

''வாருங்கள், சித்தப்பா!'' என்று குழலி வரவேற்றாள்.

''உட்கார், ராகவா!'' என்றார் மீனாட்சிசுந்தரம்.

''உட்கார், தம்பி!'' கொஞ்ச நாட்களாகவே துளசியைப் பற்றிய மனப்புண்கள் ஆறிவந்த சரஸ்வதி, அன்று ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியூடே தன்

மைத்துனனை வெகு நாட்களுக்கப்புறம் மன்னித்த மனப்பான்மையையும் காட்டிக் கொண்டாள்.

ராகவன் உட்கார்ந்தார். பேச்சை எப்படி ஆரம்பிப்பது என்பது அவருக்கு விளங்கவில்லை.

''என்னப்பா ராகவா, பையனை உனக்குப் பிடித்திருக்கிறதா?''

மீனாட்சிசுந்தரம் சுலபமாக ஆரம்பித்துக் கொடுத்தார்.

''அதைப்பற்றித்தான் அண்ணா உங்களுடன் பேச வந்தேன்...''



எஜமானி: சமையல் வேலைக்கு ஆள் வேணும்னு இவ்வளவு சம்பளம் கேட்கறையே? இன்னும் உனக்குக் கல்யாணம்கூட ஆகல்லையே!

வந்தவன்: ஆனுல் என்கூட இருக்கிற அப்பா அம்மாவுக்குக் கல்யாணம் ஆகியிருக்கிறதே!

குழலியின் காலடிகள். அவள் மாடிக்கு ஓடிய விதத்தின் அர்த்தம் அவள் பெற்றோர்களுக்கு நன்றாக விளங்கிவிட்டது. அப்படி உணர்த்துவதின் மூலம் தன் ஒப்புதலைப் பெற்றோர்கள் கலைத்து விட மாட்டார்கள் என்ற திட நம்பிக்கையும் இருந்தது.

மீனாட்சிசுந்தரம் இப்படி ஓர் அறுபடாத சிக்கல் வந்து சேரும் என்றெண்ணவே இல்லை. இதற்கு ஒரு முடிவு தேடும் பணியும் சுலபமானதில்லையே! யார் யாரை நோவது? யாருக்கு என்ன பதில் சொல்வது? கொஞ்சம் முன்பே இந்த விஷயங்களைத் தம்பி வெளியிட்டிருக்கலாகாதா என்ற ஆதங்கம் ஏற்பட்டது. கடைசியில் ஒட்டிய பாசத்துக்குத்தான் மனம் இடம் அளித்தது. சரஸ்வதி கூறுவதும் உண்மைதானே? இப்படி வந்து கேட்கலாமா?

''என்ன ராகவா இது? இதற்கு முன் ஒருமுறை வந்து என்னிடம் சொல்லியிருக்கக்கூடாது?''

''எனக்கு இப்போதுதான் — இந்த நிமிஷம்தான் — விஷயமே தெரியும், அண்ணா. உடனே உங்களிடம் ஓடி வந்திருக்கிறேன். உங்களை யாசிக்கிறேன் அண்ணா. சீலியாவுக்கு வாழ்வில்லை என்றால் இந்த உலகத்தில், எனக்கு எதுவுமே இல்லை...''

''இதென்ன, இப்படி மனம் விட்டு விடுகிறாய்? விதியை நாம் மாற்ற முடியப்போவதில்லை. இப்போது என்ன வந்துவிட்டது? கொஞ்ச நாள் பொறுத்துச் சீலியாவுக்கு நல்ல பையனைப் பார்த்து...'' மீனாட்சிசுந்தரம் மேலே தொடர மனமின்றி நிறுத்தினார்.

''இல்லை அண்ணா. உங்களுக்குச் சீலியாவைத் தெரியாது. அவள் நினைத்து விட்டால் அதை மாற்றுவதில்லை...''

சரஸ்வதி குறுக்கிட்டாள். ''தம்பி! இப்போது குழலி எப்படிப் போனாள், பார்த்தாயா? அவள் பிரியத்துக்கே இந்தத் திருமணம் நடக்கும். அவள் சந்தோஷம் மட்டும் எங்களுக்குப் பெரிதில்லையா? உனக்குச் சீலியா ஒன்றுதான் உலகமாகத் தோன்றுகிறது.... அதனால்தானே துளசியை அப்படித் துடி துடிக்க விட்டாய்...? இப்போது வேறு வந்து விட்டாய்!''

''அண்ணி!'' ராகவன் அவளிடமே நேரடியாகவே பேச ஆரம்பித்தார்:

''என்ன விஷயம்? சொல்லேன்!''

''ஒன்றுமில்லை. வசந்தன் சீலியாவோடுதான் படிக்கிறான். இருவரும் முன்பே அறிமுகமானவர்கள். இருவருமே டாக்டர்களாக உள்ளவர்கள். திருமணம் செய்து கொண்டால் நல்லதில்லையா, அண்ணா?''

''தம்பி! என்ன இது? இத்தனை வருடங்களாகத் துளசியின் வாழ்க்கையைக் கெடுத்தது போதாதென்று மறுபடியும் புதிதாக இதைக் கொண்டு வருகிறாயா? அப்படி முன்பே தெரியுமானால் அந்த ஏற்பாட்டை நீ முன்பே செய்திருக்க வேண்டாமா? இத்தனைக்குப் பின் இப்படி வந்து பேசுகிறாயே, இது நியாயமா?... குழலியின் வாழ்க்கையையும் நீ கெடுப்பதற்குக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாயா?'' சரஸ்வதி அம்மாள் பெருமூச்சோடும், ஆக்ரோஷத்தோடும் படபடத்தாள்.

மீனாட்சிசுந்தரம் ஸ்தம்பித்து விட்டார். ராகவன் சங்கடத்தோடு தவித்தார். இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கத் துணிவில்லாதிருந்தனர். இருவரது ரத்தம் ஒன்றானாலும் சதை வேறு. வசந்தன் குழலிக்கா, சீலியாவுக்கா என்ற பிரச்னைக்கே சிறிதும் இடமின்றி சரஸ்வதி அம்மாள் தீர்ப்புக் கூறி விட்டாள். அந்தத் தீர்ப்பை ஏற்றுக் கொண்டு தம்பி விலகிவிடக் கூடாதா என்ற தவிப்பான சலனம் அண்ணாவுக்கு. அந்தத் தீர்ப்பை மாற்றித் தமக்குச் சாதகமாக அண்ணா கூறமாட்டாரா என்ற சங்கடமான உயிராவல் தம்பிக்கு. இந்த நிலையில்தான் யாரும் சற்றும் எதிர்பாராதவாறு குழலி தடதடவென்று மாடிக்கு ஓடினாள்!

அந்தச் சமயத்தில் நிலவிக் கிடந்த பயங்கரமான மௌனத்தைக் கலைத்தன

''துளசி துளசி என்கிறீர்களே, அவளுக்கு வாழ்வு கொடுக்க நானா மறுத்தேன்? அவள் தானே தேடிக்கொண்ட முடிவுக்கு நான் எப்படிப் பொறுப்பாளியாக முடியும்? இத்தனை பேசுகிறீர்களே, அப்போதே உங்கள் தங்கையை அனுப்பி வைக்க முடிந்ததா? உடன் பிறந்த பாசம் உங்கள் கண்களையும் மூடி விட்டது. இப்போது என்னைத் தாக்கிப் பேசினால் சரியாகி விட்டதா? இப்போது அதை ஏன் இழுக்கிறீர்கள்...? ஒருவேளை அவள் துளசியின் மகளாக இருந்தால் விட்டுக் கொடுப்பேன் என்று சுட்டிக் காட்டுகிறீர்களா?....''

''பாருங்கள்...! உங்கள் தம்பி என்னென்ன பேசுகிறார், என்று பாருங்கள். இப்போது இந்தப் பாசம் இவரை இப்படி ஓடி வந்து கேட்கச் சொல்லுகிறதே, நமக்கெல்லாம் மட்டும் இருக்காதா?'' என்று குமுறினாள் சரஸ்வதி.

துளசி சலனமற்று உட்கார்ந்திருந்தாள். கணவரின் பாசமும், மீனாட்சி சுந்தரத்தின் பரிதாபமும், அக்காவின் தீர்க்கமான முடிவும் அவளைத் திகைக்க வைத்தன. பெற்ற மகளுக்காகக் கணவன் துடிதுடித்துப் போவதை அவள் உணர்ந்திருந்தாள். அன்றொரு நாள் லிஸ்ஸி, துளசி அந்த வீட்டுக்கு வரவில்லை என்றால் சீலியாவுக்கு வாழ்வில்லை என்று கூறிவிட்டபோது அவர் துடிதுடித்து வேண்டியதை அவள் மறந்துவிடவில்லை. 'என் சீலியாவுக்கு வாழ்வு கொடு' என்று இறைஞ்சினாரே! இன்று இப்படி ஒரு கோளாறு வந்து விட்டதே. தன் வைராக்கியத்தைப் பொடித்துத் தூரப் போட்டுவிட்டு, அவள் தன் கணவனோடு வாழப் புகுந்தாளே, அதற்கு அர்த்தமே இல்லாமல் போய்விடுமோ? சீலியாவுக்கு வாழ்வில்லாமல் போய்விடுமோ...? ஆனால் குழலி...?

'துளசி வாழாமல் கிடந்த நாளெல்லாம் சீலியாவுக்கு வாய்த்துவிடுமோ?' இந்தப் பயம் தோன்றவே, அதை வெல்ல ராகவன் அண்ணாவின் முகத்தைப் பார்த்தார். அவர் எங்கோ பார்த்திருந்தார்.

''மணி பதினொன்றாகிறதே, படுப்பதற்கு நேரமாகவில்லை?'' என்று விவாதத்துக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க விரும்பினாள் சரஸ்வதி அம்மாள்.

ராகவன் எழுந்து கொண்டார். ''அண்ணா! கடைசியாகக் கேட்கிறேன். ஏதும் மாற்றப்போவதில்லை யல்லவா?''

''நான்தான் சொல்கிறேனே, தம்பி! எதுவும் மாற்றுவதற்கில்லை. வீண் பேச்சு ஏன்?...?'' சரஸ்வதி அம்மாள் தான் பதிலளித்தாள்.



காதலி: இப்படிக் கட்டம் விளையாடத்தானா, 'பொழுது போகவில்லை, பீச்சுக்கு வா' என்று வரிந்து வரிந்து கடுதாசி எழுதி என்னை வரவழைத்தீர்கள்?

''அதை உணர்கிறேன், அண்ணி! அண்ணாவின் மௌனமே உங்கள் சொற்களை அவர் ஆமோதிக்கிறார் என்பதைச் சொல்லாமல் சொல்கிறது. இனிமேல் எதுவும் கேட்க மாட்டேன்... உங்கள் முடிவுப்படி செய்யுங்கள்...''

ராகவன் தள்ளாடும் நடையோடு முன் வாசலை நோக்கி நடந்தார். அதைத் தொடரும் உயிராகத் துளசியும் அவரைப் பின்தொடர்ந்தாள்.

கொஞ்ச நேரம் முன்பு விருந்தும் மகிழ்வுமாக அமர்க்களப்பட்ட இடம் வெறுமை சுமந்து பீதியூட்டியது.

அரும்புகள் கட்டிய எத்தனையோ மொக்குகள் பூக்காமல் வாடி விடுவதுண்டு. கனிய வேண்டிய கனிகள் எத்தனையோ கனியாமல் வெம்பி உதிர்ந்து விடுவதுண்டு. அதற்காக ஒவ்வொன்றும் அந்தந்தப் பருவம்வரை வராமல் நின்று விடுவதில்லை. நம்பிக்கையின் கடைசி எல்லை வரை மனித முயற்சியை யாரும் கைவிட்டு விடுவதில்லை. அது தொடர்வதுபோல் சட்டென்று முடிந்து விடுகிறது. அந்த முடியப் போகும் எல்லையை உணராததால் விளையும் நம்பிக்கைகள், ஆசாபாசங்கள், மன நிறைவுகள்தான் எத்தனை எத்தனை?

முதல் நாள் இரவு முழுதும் தூங்காமல் கிடந்த சீலியா காலையில் கொஞ்ச நேரம் திடுக்கிடும் கனவுகளுக்கிடையே உறங்கினாள். இரவு ராகவன் திரும்பி வந்தபோது எதுவுமே கூறவில்லை என்றாலும் சீலியாவுக்கு முடிவு என்ன என்பது விளங்கி விட்டது. இனி நம்பிக்கை உயிர்க்கக் கூட ஏதும் ஆதாரமில்லை போல் தோன்றியது.

(தொடரும்)

இந்தக் கதையில் வரும் காட்சியை இவ்விதழ் அட்டைப்பட வண்ண ஓவியமாகத் தருகிறார் ஓவியர் விஜயா.



# தவறான வேளை

வங்காளி மூலம்: ஸ்ரீ மனோஜ் வசு
தமிழாக்கம்: சு. கிருஷ்ணமூர்த்தி

"என்ன இவ்வளவு சீக்கிரம், சந்து அண்ணா?"

"நான் என்ன செய்யட்டும், வசந்தி? நீ வரச் சொன்னாய். ஆனால், அது முதல் கடிகார முள் நகர மறுக்கிறது. ஒரு மணி நேரம் போவதற்குப் பத்து மணி ஆகிறதே!"

"நான் உன்னை ஒன்பது மணிக்கல்லவா வரச் சொன்னேன்!"

"வாஸ்தவந்தான். ஆனால் இன்று ஒன்பது மணி வரவே வராது போலிருக்கிறதே! நான் இங்கே எப்போது வந்தேன், தெரியுமா? ஐந்து மணிக்கு! இவ்வளவு நேரம் பக்கத்துப் பார்க்கில்தான் உட்கார்ந்திருந்தேன். பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். கடைசியில் இனியும் உட்கார்ந்திருக்கப் பொறுக்கவில்லை. கால்கள் என்னை இங்கே இழுத்துக் கொண்டு வந்து விட்டன!"

"ஆனால் எனக்கு இப்போது கொஞ்சங் கூட நேரமில்லையே, சந்து அண்ணா! நீ இப்போது திரும்பிப் போக வேண்டியதுதான். நான் சினிமாவுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். மலயமித்ரா எனக்காக மெட்ரோ வாசலில் காத்துக் கொண்டிருப்பாள். அவள் எனக்கும் சேர்த்து டிக்கெட் வாங்கி வைத்திருக்கிறாள். மலயமித்ராவை ஞாபகமிருக்கிறதா உனக்கு? நம்முடன் கல்லூரியில் படித்தாளே!"

"இன்று நீ சினிமாவுக்குப் போகாவிட்டால் என்ன வசந்தி? நாம் எவ்வளவு வருடங்களுக்குப் பிறகு சந்திக்கிறோம்? எனக்கு உன்னுடன் எவ்வளவோ பேச வேண்டுமே!"

"அது முடியாது அண்ணா! நான் மித்ராவுக்கு வாக்குக் கொடுத்துவிட்டேன். நான் போகாவிட்டால் அவள் பாவம், ஏமாந்து போய்விடுவாள். அவள் என் மேல் உயிரையே வைத்திருக்கிறாள், தெரியுமா? நீ ஒன்பது மணிக்குக் கட்டாயம் வந்துவிடு. சாவகாசமாக உட்கார்ந்து கொண்டு பேசலாம். சினிமா முடிந்ததும் நேரே இங்கே வந்துவிடுகிறேன்."

சந்தோஷின் முகம் வாடிவிட்டது. "ரொம்ப இக்கட்டாயிருக்கிறதே, வசந்தி! எனக்கு ஒன்பது மணிக்கு வரச் சௌகரியப்படாதே! மகராஜ் கஞ்சின் இளவரசர் என்னை விருந்துக்கு அழைத்திருக்கிறார். அவ

ருக்கு நான் சங்கீதம் சொல்லித் தருகிறேன்; நான் அவருடைய டென்னிஸ் பார்ட்னர் வேறு. நான் அந்த விருந்துக்குப் போகத்தான் வேண்டும் !''

''அது சரி, நீ இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறாய், சந்து அண்ணா ?''

''நான் கல்லூரி நாட்களிலேயே நன்றாகக் கிரிக்கெட் விளையாடுவேன் என்பது தான் உனக்குத் தெரியுமே, வசந்தி ! அதற்காக என்னைச் சுங்க இலாகாவில் வேலைக்கு வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது நான் அங்கே ஆபீஸ் சூபரின்டெண்டெண்டு. சம்பளம் நானூற்றைம்பது ரூபாய் வருகிறது. கட்டோடு போதவில்லை. மகாராஜ் கஞ்ச் இளவரசர் என்னை அவருடைய எஸ்டேட்டுக்கு மானேஜராக வந்து விடச் சொல்கிறார். சுங்க இலாகா வேலையை விட்டு விட்டு அவரிடம் போய் விடலாமென்று பார்க்கிறேன். நீ என்ன சொல்லுகிறாய் ?''

உள்ளூறப் பொறாமையாயிருந்தது வசந்திக்கு. வசந்தி ஆங்கிலத்தில் முதல் வகுப்பில் பாஸ் செய்திருக்கிறாள், மூன்று தங்கப் பதக்கங்கள் வாங்கியிருக்கிறாள். இருந்தும்...

அவள் சிரித்துக் கொண்டே சொன்னாள்: ''எனக்குந்தான் இந்த வேலை பிடிக்கவில்லை. மலயமித்ராவும் நான் இந்த உபாத்தியாயினி வேலையை விட்டுவிட வேண்டும் என்று தலைகீழாக நிற்கிறான். ஆனால்.... கல்யாணம் செய்து கொள்வது ஒரு வகையில் அடிமைத்தனந்தானே ! இந்த வாழ்க்கையிலுள்ள சுதந்திரம் வருமா? மலயன் லட்சாதிபதி தான். அவனைக் கல்யாணம் செய்து கொண்டால் எவ்விதக் குறையுமில்லை. இருந்தாலும் சுதந்திரம்? அதனால்தான் நான் இந்த வேலையை விடத் தயங்குகிறேன்.''

வசந்தி தன் கைக் கடிகாரத்தைப் பார்த்து விட்டுப் பரபரப்புடன் எழுந்தாள். ''எனக்கு நேரமாகி விட்டது. அண்ணா ! புறப்படுவதற்குமுன், 'டிரஸ்' வேறு செய்து கொள்ள வேண்டும். மலயன் பெரிய இடத்துப் பிள்ளையல்லவா? அவனுடன் போவதென்றால் அதற்கேற்றாற்போல் உடையணிந்து கொள்ள வேண்டாமா? சரி, நீ புறப்படு, அண்ணா ! ஒன்பது மணிக்கு அவசியம் வா !''

சந்தோஷ் அரை மனத்துடன் எழுந்தான். ''ஒன்பது மணிக்கு வரச் சௌகரியப்படாது என்று சொன்னேனே! எப்படியும் முயன்று பார்க்கிறேன். இல்லாவிட்டால் அடுத்த ஞாயிற்றுக் கிழமைதான் பார்க்க முடியும்.''

வெளியே வந்து ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான் சந்தோஷ். ஏக்கமும் பொறாமையும் கலந்த பெருமூச்சு.....

என்னமாய் மினுக்குகிறாள் வசந்தி ! என்ன உடை, என்ன அலங்காரம் ! ஒப்பனையின் மூலம் தன் முப்பது வயதை இருபது வயதாகக் குறைத்துவிட்டாளே ! ஆனால் சினிமாவுக்குப் போக இந்த அலங்காரமும் போதாதாம்! இன்னும் 'டிரஸ்' செய்து கொள்ள வேண்டுமாம் ! இப்படியெல்லாம் செய்துதான் அவள் பெரிய இடத்துப் பையனை மலயமித்ராவை மயக்கி விட்டாள். மலயன் இவளுடைய இஷ்டத்துக்கு ஆடுகிறான். கொடுத்து வைத்தவள் வசந்தி ! பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்குத் தான் எவ்வளவு மதிப்பு !....

வசந்தியுடன் நெருங்கிப் பழக வேண்டும். அவளுக்குப் பல பணக்கார நண்பர்கள் இருக்கிறார்கள் போலிருக்கிறது. அவள் மூலம் அந்தப் பெரிய புள்ளிகளுடன் சிநேகம் செய்து கொள்ள வேண்டும். அவர்களுடைய உதவியைக் கொண்டு பிழைப்புக்கு ஏதாவது வழி செய்து கொள்ள வேண்டும்....

ஆனால் ஒன்பது மணிக்குப் போகச் சௌகரியப்படாதே! இப்போதுதான் ஒரு டியூஷன் கிடைத்திருக்கிறது. ஒன்பது மணி முதல் ஒரு மணி நேரம் ஒரு பெண்ணுக்குப் பாட்டுச் சொல்லித் தர வேண்டும். சம்பளம் மாதத்துக்கு முப்பது ரூபாய். பணம் குறைவுதான்; என்ன செய்வது ? ஒன்றுமில்லாததற்கு இதாவது கிடைத்ததே !

ஒரு காரியம் செய்தால் என்ன? எட்டரை மணிக்கே போய் டியூஷனை ஆரம்பித்துவிட்டால் ஒன்பதரைக்கு முடித்துவிட்டு வசந்தியைப் பார்க்கப் போகலாமே! ஆம், அது தான் சரி !

சந்தோஷ் டிராமில் ஏறினான். டிராம் மெட்ரோவைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்த போது அவன் நினைத்தான்: ''இப்போது வசந்தி உள்ளே மலயனுடன் சினிமா பார்த்துக் கொண்டிருப்பாள். ஹூம்..... அவரவர் அதிருஷ்டம் அவரவர்களுக்கு!''

அவன் தன் சிஷ்யையின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்த போது சிஷ்யையின் தந்தை கடிகாரத்தைப் பார்த்துவிட்டு வியப்புடன் கேட்டார். ''என்ன இன்று இவ்வளவு சீக்கிரம் வந்துவிட்டீர்களே?''

அவன் தயங்கித் தயங்கிப் பதில் சொன்னான். ''இல்லை, எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது. ஒன்பதரை மணிக்குள் டியூஷனை முடித்துக் கொண்டால் தேவலை. ஆகையால் எட்டரை மணிக்கே டியூஷன் ஆரம்பிக்கலாம் என்று.....''

''அதெப்படி முடியும்? இன்னொரு டியூஷன் வாத்தியார் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறாரே ! அந்த டியூஷன் முடியும் வரை நீங்கள் காத்திருக்கவேண்டியதுதான்.''

வேறு வழியின்றிக் காத்திருந்தான் சந்தோஷ்.... ஒன்பது மணிக்குச் சற்று முன்னால் வெளியே வந்தார் டியூஷன் உபாத்தியாயர். வேறு யாருமில்லை, வசந்தி தான் !

அவள் 'டிரஸ்' மாற்றிக் கொள்ள வேண்டும் என்று சொல்லியது உண்மைதான். இப்போது அவள் ஒரு சாயம் போன புடவையையும் அதற்கு 'மேட்ச்' ஆகும் ரவிக்கையையும் அணிந்திருந்தாள். இரண்டிலும் நிறையத் தையல்கள். கையில் கடிகாரத்தைக் காணோம்; அதற்குப் பதிலாக இரண்டு கண்ணாடி வளையல்கள்....

சிஷ்யையின் தகப்பனார் வசந்தியைச் சுட்டிக்காட்டிச் சந்தோஷிடம் சொன்னார்: ''நீங்கள் தினம் ஒரு மணி பாட்டுச் சொல்லித் தர மாதம் முப்பது ரூபாய் போதாது என்றீர்களே! இதோ பாருங்கள், இவர் தினம் ஒன்றரை மணி நேரம் பாடம் சொல்லித் தருகிறார். மாதச் சம்பளம் இருபத்தைந்து ரூபாய்தான் இவருக்கு! சந்தேகமானால் இவரையே கேட்டுப் பாருங்கள்!''

## பாம்பே டையிங் முதன் முறையாக வழங்குகிறது—

KAPITAN
GOLD STAR
BY BOMBAY DYEING

# கப்பித்தான்




**சட்டைகளிலேயே ஒரு கவர்ச்சிமிக்க கலைப் படைப்பு!**

பாம்பே டையிங் கப்பித்தான் ஷர்ட், வெளிநாடுகளில் விற்கப்படும் சிறந்த ஷர்ட்டுக்கு ஒப்பான உயர்ந்த ஷர்ட். பாம்பே டையிங் பல்லாண்டுகளாக ஆராய்ச்சி செய்து, தயாரிப்பு அனுபவம் பெற்று, இந்தியாவிலேயே கோர்த்தியான் சட்டைத் துணிகளைத் தயாரித்து வருகிறார்கள். இப்பொழுது அந்தத் துணிகளிலிருந்து தலைசிறந்த தையற் கலைஞர்கள் பாம்பே டையிங்கின் உயர்ந்த தரத்துக்கு சற்றேனும் குறையாமல் கப்பித்தான் ஷர்ட்டுகளை உங்களுக்கெனவே உருவாக்கி இருக்கிறார்கள்!

- கழுத்தின் வடிவத்துக்குப் பொருந்தும்படியான காலர்
- பிதுங்கி மேலே வராத வண்ணம் சட்டையின் நீண்ட கீழ்ப்பாகம்
- உடலுக்கு அழகாக அமையும்படியான நடுப்பாகம்
- கச்சிதமாகப் பொருந்தக்கூடிய தோள்பாகம், கைப்பாகம்
- உறுதியுடன் நெருக்கமாகப் போடப்பட்ட தையல்கள்
- ஸ்பெஷலாக, உறுதியுடன் 'க்ராஸ் ஸ்டிச்' போடப்பட்ட பித்தான்கள்



**கோல்ட் ஸ்டார்**
'டெரீன்'/காட்டன்

**ஸில்வர் ஸ்டார்**
சூபர்:பைன், சுத்திகரிக்கப்பட்ட பருத்தியாலானது

**ப்ரான்ஸ் ஸ்டார்**
100 சதவிகிதமும் பருத்தியாலானது

(ஒயிட், ஐவரி, க்ரே, ப்ளு, :பான் ஆகிய கவர்ச்சியான வண்ணங்களில் கிடைக்கின்றன. கோல்ட் ஸ்டார் மற்றும் ஸில்வர் ஸ்டார் ஷர்ட்டுகளில் கட்டங்களும் கோடுகளும் போடப்பட்ட பகட்டான ரகங்களும் கிடைக்கும்.)

கச்சிதமான **கப்பித்தான்** அணிந்தவர் எப்பொழுதும், எந்நிலையிலும் எடுப்பாக விளங்குவர்

**பாம்பே டையிங்**

BD-7524

பல தலைமுறைகளாக
விளங்கிவரும்
உன்னதமான தரத்திற்கேற்ப
தயாரிக்கப்பட்டது

# இந்தியா சூப்பர்



உன்னதமான நவீன கார் டயர்

இந்தியா டயர் அண்ட் ரப்பர் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

# யாருக்குச் சிலை!

"யாருக்குச் சிலை" என்று கேட்டாலும் கேட்டோம், வந்து குவிந்த பல்லாயிரக்கணக்கான கருத்துக்களைக் கண்டு சிலையானோம்!

சிறிது நேரம்தான்; பிறகு 'தம்' பிடித்து அந்தக் கருத்துக் குவியலுக்குள் மூங்கி மூழ்கி முத்து முத்தான கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்தோம்.

அன்பர்கள் எழுதிய கருத்துக்களையெல்லாம் ஏற்ப தென்றல் கல்கியில் கட்டுரைகளைப் பிரசுரிக்க இடம்காணாது; சென்னை நகரிலும் சிலைகளை வைக்க இடம் காணாது! யார் யாரையெல்லாம் சிலையாக்கிப் பார்த்திருக்கிறார்கள்!

திரைப்படத் துறையில் கலைவாணர் தொடங்கி ஜெமினியின் பீப்பீ பாப்பாக்கள் வரை எத்தனை எத்தனையோ பேர்களைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். சமூக சேவைக்குச் சகோதரி சுப்புலக்ஷ்மியைக் குறிப்பிட்டவர்கள் மவுண்ட்ரோட்டில் விபத்துக்குள்ளானவர்களுக்கு உதவிய லட்சுமியை மறக்கவில்லை! விஞ்ஞானிகள் ராமானுஜம், ஸி. வி. ராமன், பாபா என்று பலப் பலர். சங்கீதத் துறையில் தியாகராஜர் முதல் மதுரை மணி

நட்சத்திரக் குறியிட்டுள்ள கருத்து ரூபாய் இருபத்தைந்து பரிசு பெறுகிறது. மற்ற கருத்துக்களுக்கு ரூபாய் ஐந்து வீதம் பரிசு வழங்கப்படும்.

ஐயர் வரை, இலக்கியத்தில் அகத்தியர், தொல்காப்பியர் தொடங்கி கவிமணி டி. கே. சி. வரை, அயல்நாட்டவர்களில் மெக்காலேயில் ஆரம்பித்து ஹெலன் கெல்லர் வரை, அரசியலில் பிரகாசம்காரு முதற்கொண்டு சத்தியவாணிமுத்து வரை, முன்னாள் ராஷ்டிரபதிகள் ராஜன்பாபு, ராதாகிருஷ்ணன், மாதர்குல திலகங்களுள் வாசுகி முதல் கஸ்தூரிபாய் வரை என்று இப்படி எத்தனை எத்தனையோ பேர்களைக் குறிப்பிட்டு எழுதியுள்ளார்கள். முக்கோண வடிவ சிவப்புச் சின்னத்தைக்கூட விட்டு வைக்கவில்லை! கட்டுரைகளை அனுப்பிய பல்லாயிரக்கணக்கான அன்பர்கள் அனைவருக்கும் நன்றி. இங்கு இடம் பெறுபவை சில கருத்துக்களே. நல்ல முறையில் எழுதப்பட்ட கட்டுரைகள் என்பதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டவை. சிலை எடுப்பிக்கத் தக்கவர் வேறு பலரும் உண்டு என அறிவோம்.

– ஆசிரியர்

## மூட்டை!

இது வரை சிலைகள் இறந்த கால மனிதர்களுக்கும், தற்சமயம் நிகழ்கால மனிதர்களுக்கும் எழுப்பப்படுகின்றன. "புது யுகத்தில்" வாழும் நாம் வருங்கால மனிதர்களுக்குச் சிலை எழுப்புவோம்.

வருங்கால மனிதர்களில் யாருக்குச் சிலை எழுப்புவது?

வருங்கால சந்ததிகளில் யார் எப்படி இருப்பார்களோ தெரியாது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். அவர்கள் நம் கடனை அடைப்பவர்களாக இருப்பார்கள்! நம் வருங்காலத்துச் சந்ததியினருக்கு நாம் விட்டுச் செல்லும் செல்வங்கள் மகத்தான பேப்பர் திட்டங்களும், அவற்றுக்காக நாம் அன்னியரிடம் வாங்கிய கோடிக்கணக்கான கடன்களும்தான்.

நமது திட்டங்களால் அவர்கள் பயனடைகிறார்களோ இல்லையோ, நாம் பட்ட கடனை அவர்கள்தான் அடைக்க வேண்டும். நம் மானத்தைக் காக்கப் போகும் அவர்களுக்கே சிலை!

சிலையை எப்படி அமைப்பது?

ஒரு தவழும் குழந்தை. அதன் கழுத்தில் இந்தியா 2000 என்ற டாலர் சங்கிலியில் கோத்துத் தொங்குகிறது. அதன் முதுகில் பெரிய (கடன் என்ற) மூட்டை!

பிரேமா சிவப்பிரகாசம்

## ஏர் பின்னது உலகம்

சிலை வைத்துத்தானா ஒருவரின் நினைவை நாம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்? நல்லவருக்கு என்றுமே நம் நெஞ்சில் நல்ல இடம் உண்டு. இப்படிப் பார்க்கும்போது சிலையே வேண்டாம் என்று கூடத் தோன்றுகிறது.

அப்படியே சிலை வைப்பதாக இருந்தாலும் நம்மைத் தற்போது எதிர் நோக்கியிருக்கும் பிரச்சினை உணவு. அதனை விளக்கும் வண்ணம் – எழுகதிரோன் பின்னணியில் இருக்க ஓர் உழவன் ஏருடன் நிற்பது போல, 'சுழன்றும் ஏர் பின்னது உலகம்' என்னும் மொழியுடன் ஒரு சிலையைத் தாராளமாக வைக்கலாம்; உழைப்பாளிகள் சிலை போன்று. அப்படியாவது நம் கவனம் விவசாயத்தின் பக்கம் திரும்பட்டுமே!

இ. பீமராஜ்



வடக்கத்திப் புலவன் ஒருவன் பல புலவர்களை வென்று மமதையோடு எட்டையபுரம் சமஸ்தானத்துக்கு வந்து "என்னுடன் பாடி வெற்றி பெற இங்கு எவரும் உளரோ?" என்று கேட்டான். அப்போது உமறுப் புலவர் சிறு வயதினராயினும் தம்புலமையினால் வடக்கத்திப் புலவனை வென்றார். சீறாப் புராணத்தை உருவாக்கியவர் உமறு. தம் ஆசிரியர் கடிகை முத்துப் பிள்ளை, அரசர் முதலியோர் ஆசியுடன் அமைச்சரவையில் சமஸ்தானப் புலவரானார்.

இஸ்லாமியரின் மனக் குறையைப் போக்கிட, இஸ்லாமியரின்நேசத்தை வலுவூட்ட, எங்கள் அரசு இஸ்லாமியர்களுக்குத் தீங்கு விளைவிக்காத அரசு என்று தெரிந்திடத் தமிழக அரசு உமறு நினைவுச் சின்னம் அமைக்க வேண்டும்.

அ. வ.ச. ஷே. ஜமால் முகம்மது

## கற்பனைக்கு ஒரு சிலை

தமிழ் அரசனுக்குச் சிலை - (வள்ளுவர்), தமிழ் அரசிக்குச் சிலை - (ஔவை), தமிழ் இலக்கியத்துக்குச் சிலை - (கம்பன்), தமிழ்ப் பண்புக்குச் சிலை - (கண்ணகி), தமிழ் வளர்த்துக்குச் சிலை - (போப்), தமிழ் இலக்கணத்திற்குச் சிலை - (கால்டுவெல்) தமிழ் பற்றுக்குச் சிலை - (வீரமா முனிவர்), தமிழ்க் கவிதைக்குச் சிலை - (பாரதி), தமிழ் வீரத்துக்குச் சிலை (வ.உ.சி.) தமிழ் உணர்ச்சிக்குச் சிலை (பாரதிதாசன்), தமிழ் மகனுக்குச் சிலை - (அண்ணா).

ஆகியவை இருக்கத் தமிழ்க் கற்பனைக்குச் சிலை (அமரர் கல்கி) வேண்டாமா?

"அமைதியான பண்பு, ஆழ்ந்த சிந்தனை, இலட்சியப் போக்கு, சுவையே நோக்கம், உயர்ந்த அன்பு, ஊக்கமுள்ள நெஞ்சம்" ஆகியவைகளுக்குத் தம்மையே தந்தவரல்லவா அமரர் கல்கி?

— ஆர். சுந்தரமூர்த்தி





## கொடி ஏந்திய குமரன்

வெள்ளையர்களிடமிருந்து நம்மை விடுவிக்க மகாத்மா காந்தியின் கீழ் பல தொண்டர்கள் வெள்ளையரை எதிர்த்தனர். பலர் நமது நாட்டின் சுதந்திரத்துக்காக உயிர்த் தியாகமும் செய்தார்கள். அத்தகையோரில்நமது தமிழகத்தைச் சார்ந்த திருப்பூர் குமரனும் ஒருவர். குமரன் சுதந்திரக் கொடியை ஏந்தி ஊர்வலத்தின் முன்னால் வருகையில் வெள்ளைக்கார அதிகாரிகள் அவரைத் தடியால் அடித்துக் கொடியைப் பிடுங்க முயன்றனர். தடிகளால்பலர் அடித்த போதும், மண்டை உடைந்தும் பல இடங்களில் காயம் ஏற்பட்டும் தலையிலிருந்து ரத்தம் வழிந்தபோதும் கொடியைக் கையிலிருந்து விடுபடாது காத்தார் குமரன். சுதந்திரக் கொடியை விடாது பிடித்துக் கொண்டு உயிர் நீத்த அந்த வீரத் தியாகியின் சிலையை வைக்கலாம் அல்லவா? இந்தச் சிலையைக் காண்போர் உள்ளத்தில் நாட்டுப் பற்று வளரும் என்பதில் ஐயமில்லை. — டி.கே.துரைசாமி

## தாஷ்கண்ட் வீரர்

'சூடுபட்டாலும் சிறிதாயினும் காரம் போகாது' என்பது வழக்கு. அதற்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர் காலஞ்சென்ற இந்தியப் பிரதமர் திரு லால்பகதூர் சாஸ்திரி அவர்கள். 'நேருவுக்குப்பின் யார்?' என்ற தலைப்பில் பல நாட்டு எழுத்தாளர்கள் புத்தகங்கள் பல எழுதினர். ஆனால் ஒருவரேனும் தம் பிரதியில் சாஸ்திரி அவர்களைப் பற்றிக் குறிப்பிடவில்லை. நேரு இறந்தபின் பாரத நாட்டில் இரத்தவெள்ளம் ஓடும் என்று கூறியவர்கள் பலர். ஆனால் அவை யாவும் திரு சாஸ்திரி அவர்கள் ஆட்சிக் காலத்தில் நடைபெற வில்லை. அண்டை நாடான பாகிஸ்தான் நம் மேல் போர் தொடுத்தது. சமாதானத்துக்கு விழைவும் இந்தியா, வலுவில் வந்த போர் கண்டு அஞ்சாது எதிர்த் தாக்குதலுக்குத் தயாராயிற்று. ஆண்டவன் திரு சாஸ்திரி அவர்களைத் தன்னகத்தே இருத்திக் கொள்ள விரும்பினர். நல்லவர்களைத் தம்முடன் வைத்துக் கொள்வதிலே ஆண்டவனுக்குள்ள விருப்பம் அதிகமாயிற்றே. மாரடைப்பு என்ற பெயரால் திரு சாஸ்திரி அவர்கள் இறைவனடி எய்தியதை அறிந்த மக்களின் நிலையை வார்த்தைகளால் கூற இயலாது. போர், திரு சாஸ்திரி அவர்களைப் புகழேணியில் ஏற்றியது. சமாதானம் அவரை இறைவனுடன் இணைத்தது. அப்போரின் விளைவால் இந்தியா தன்னுடைய சுயபலத்தை நன்கு அறிந்தது. அப்போர் சீனாவையும் நம் மேல் படையெடுக்க ஒட்டாமல் செய்தது. இதற்கெல்லாம் காரணம் மறைந்த மாணிக்கம் திரு லால்பகதூர் சாஸ்திரி அவர்களே. இந்தியாவின் தாக்குதலைச் சமாளிக்க இயலாத பாகிஸ்தான் சமாதானக் கொடி உயர்த்திச் சமாதான ஒப்பந்தம் ருஷ்யாவில் உள்ள தாஷ்கண்ட் என்னுமிடத்தில் இனிதே நடந்தேறியது. இருநாடுகளின் பிரதம மந்திரிகளும் ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டனர். தாஷ்கண்ட் செல்லுமுன் தமிழகம் வந்து நமது உள்ளங்களைச் சுதந்திர நாள் விழாவிலே கொள்ளை கொண்டு சென்றவர். அந்த கைய மகானுக்கு நம் தமிழகத்தில் சிலை வைப்பதும் சாலச் சிறந்ததாகும். டி. டி. ஞானசேகர்

## மக்களில் ஒருவர்

யாருக்கு வேண்டுமானாலும் சிலை வைக்கலாம் என்றுள்ள இந்த நாளில் யாருக்குச் சிலை என்ற கேள்வி கொஞ்சம் கடினமானதுதான்.

தலைவர்கள் என்று நினைக்கும் போது எண்ணற்ற தலைவர்கள் எண்ணக் கோயிலில் வந்து மறைகின்றனர். அவர்களில் பெரும்பாலோர் மக்களோடு 'மேடை'யை விட்டு இறங்காமல் பழகுகிறவர்கள். அவ்வாறில்லாமல் மக்களோடு மக்களாக, மக்களில் ஒருவராக 'உங்களில் நானும் ஒருவன்' என்று பழகி, அவர்களுக்காகவே சேவை செய்யும் தலைவருக்குச் சிலை அமைப்பதுதான் பொருத்தம்.

மக்களைப் புரிந்து கொண்டவராகவும், மக்களுக்குப் புரியக்கூடிய தலைவராகவும் மக்களுக்குச் சேவை செய்து கொண்டும் இருப்பவர் திரு விநோபாபாவே. மக்களின் நண்பர் திரு விநோபாபாவேக்கே சிலை எடுத்து, 'பூதானம்' செய்யும் அந்தத் தியாகச் செம்மலின் சிறப்புக்குச் சிறப்பு கூறலாம்.



ஆனால் இந்தச் சிலை வைக்கும் பணியை ரகசியமாகவே, அவருக்குத் தெரியாமலே செய்ய வேண்டும். அவருக்குத் தெரிந்தாலோ அச்சிலை வைக்கும் சிறிய இடத்திலேயும் உழுது பயிரிட்டு நாட்டுப் பசியைப் போக்கலாம் என்ற உயர்ந்த எண்ணத்தில் அந்த இடத்தையும் தானம் செய்ய வந்துவிடுவார், மக்களால் போற்றப்படும் அந்த மகாத்மா.

— டி. சாந்தா

## "தியாக ராஜன்!"

ஒரு மனிதனின் இருதயத்தில் அன்புமனைமாயும் தன் குடும்ப நபர் போன்ற உணர்வும், தேசத்தில் கோடிக்கணக்கானவர்கள் இருதய கமலத்தில் இடம்பெற்றும் எல்லாவிதத்திலும் பெருமை என்ற சொல்லுக்குப் பொருத்தமும் ஆன 'நிகரில்லா' நேருவைத்தான் குறிப்பிட வேண்டும்.



காரணங்களா வேண்டும் ?

1. பாரதத் தலைப் புதல்வன் "தியாகராஜன்."
2. பாரத ரத்தினமவர்.
3. ஆசிய ஜோதி என்று புகழப்பட்டவர்.
4. வின்ஸ்டன் சர்ச்சிலால் வாயாரப் புகழப்பட்டவர். வசிஷ்டர் வாயாலும் பிரம்மரிஷி. சர்ச்சில் இவரைப் பற்றிக் கூறியது: "மனித இயல்பில் உள்ள இரு மிகப் பெரிய குறைபாடுகளை வெற்றி கொண்டவர் நேரு. அவருக்குப் பயமும் தெரியாது; துவேஷமும் தெரியாது!"
5. என் வாரிசு என்று காந்திஜியால் கூறப்பட்டவர்.
6. "நாகரிகமானவர்களுள் முதலிடம் பெறுபவர்"-ராஜாஜியின் பொன்வாக்கு.
7. குழந்தைகளுக்கு அன்பான 'சாச்சா'.
8. மன்மத சொரூபம். தொத்து நோய்போல் பரவுகிற புன்னகை! பழுகத்தைவிட சுத்தமான மனசு. துடிதுடிப்பான சுறுசுறுப்பு இளைஞர்கள் ஆச்சரியப்படத்தக்க பரபரப்பு.
9. இறப்பதற்கு ஐந்து தினங்களுக்கு முன்பு பத்திரிகை நிருபர்களிடம் இருதயநோய் வாய்ப்பட்டிருந்தும், "எனது முடிவுக்காலம் அவ்வளவு கிட்டத்தில் இருக்கிறது என்று நினைக்கிறீர்கள் ?" என்று கூறிய சிங்கம். உறுதியான பேச்சு. மனிதனுக்குப் பிறந்தும் ராஜகம்பீரம்.
10. மூடநம்பிக்கைகளைப் பற்றி உயில் எழுதிக் கங்கையின் பெருமையை உயிரோவியமாக்கி மறைந்தவர்.
11. பல ஜன்மங்களில் செய்ய முடியாத காரியங்களைத் தனி நபர் ஒரு வாழ்வில் செய்த பிறகும் "எனக்கு இன்னும் நிறையக் கடமைகள் உண்டு" என, கவி ராபர்ட் பிராஸ்டின் வரிகளை எழுதி வைத்துவிட்டு இறந்தவர்.
12. வேறு ஒரு காரணமுமே வேண்டாம். அப் புண்ணிய பூஜ்ய மனிதரை நினைத்தாலே என்னைப் போன்ற கோடிக்கணக்கானவர் கண்கள் குளமாகும். இந்த ஒரு காரணமே போதாதா?

— ம. சிவராமன்

## ★ கேள்விக்குறி!

யாருக்குச் சிலை என்ற கேள்விக்கு விடையை அதனருகில் வரைந்துள்ள சித்திரத்தில் நீங்களே அளித்து விட்டீர்கள். சைத்ரிகர் வரைந்துள்ளது போல் ஒரு பெரிய கேள்விக்குறியைத்தான் நிறுத்த வேண்டும்.

அன்று அடிமை பாரதத்தில் சுதந்திரம் எப்பொழுது கிட்டும் என்ற ஒரே பிரச்னைதான் இருந்தது. இன்று நமக்கு எத்தனை எத்தனை பிரச்னைகள் முளைத்துவிட்டன! வசதியுள்ளவருக்கும் ஓயாத ஒழியாத பிரச்னைகள்.

பற்றாக்குறை, விலைவாசி உயர்வு, கலப்படம், குடும்பக் கட்டுப்பாடு முதலான அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகள், மொழிச் சண்டைகள், கட்சிச் சண்டைகள், கொள்கையில்லாமல் தன்னலத்துக்காக அரசியலில் நுழையும் சுயநலவாதிகள், கல்வியில் குழப்பம் முதலான பலப் பல பிரச்னைகள்.

இப்படி எத்தனை எத்தனையோ பிரச்னைகள் நம்மைக் குழப்புகின்றன. ஆதலால் நாடு முழுவதிலும் அநேக இடங்களில் சிறியதும் பெரியதுமாய்க் கேள்விக் குறிவடிவில் சிலைகள் அமைக்க வேண்டும். ஒவ்வொரு மேடையிலும் நம்மைக் குழப்பும் ஒவ்வொரு கேள்வியைப் பொறிக்க வேண்டும். இதனால் மக்களின் சிந்தனை தூண்டிவிடப்பட்டு நற்பலன் விளையும் என்று நம்புகிறேன்.

- டாக்டர் அன்னாஜல்வாமி





## எனக்குத்தான் !

எனக்குத்தான் நிறுவுங்களேன்!

இதைக் கேட்டதும் உங்களுக்கு, 'இவன் மகா கர்வி போலிருக்கிறதே!' என்ற எண்ணம் எழலாம். 'பெரிய' மனிதர்கள் சிலர்கூட 'என்னைப் பற்றி மேடையில் பேசுங்கள்; என்னைப் பற்றிப் பத்திரிகையில் எழுதுங்கள்; என் புகைப்படத்தைப் பிரசுரியுங்கள்' என்று இரகசியமாகக் கேட்கிறார்களே — கொஞ்சம் சின்ன மனிதனை நான் இப்படிப் 'பப்ளிக்'காகக் கேட்கக் கூடாதா?

ஒரு பெரிய தலைவரின் சிலையை இன்று நிறுவி விட்டால், நாளைக்குச் சிலையின் தலையில் காகம், குருவி எல்லாம் வந்து உட்காரும்; அசுத்தம் செய்யும். "இதுதானா தலைவருக்கு நாம் செய்யும் மரியாதை?" என்று பலர் சாடுவார்கள். எதற்கு இந்த வம்பு?

அதோடு ஒரு தலைவரின் சிலையை நிறுவினால் அவரைப் பிடிக்காதவர்கள் தகராறு செய்யக் கூடும். இன்னொரு தலைவருக்குத்தான் சிலை வைக்க வேண்டும் என்று அவர்கள் பிடிவாதம் பிடிப்பார்கள். இந்தச் சச்சரவைத் தவிர்க்க இரண்டு பேர்களின் சிலைகளையுமே நிறுவவேண்டி வரலாம். இரட்டிப்புச் செலவு; அதோடு அப்புறம் நகரில் உள்ளவர்களுக்கு இடமில்லாமல் சிலைகளே நிரம்பிவிட நேரிடும்.

விண்ணுலகெய்தியவர்களுக்குத்தான் சிலை வைப்பதென்ற மரபு போய் மண்ணுலகை விடாமல் பிடித்துக் கொண்டிருப்பவர்களுக்கும் சிலை வைக்கும் வழக்கம் வந்திருக்கிறது. எனக்கும் அந்தத் தகுதி இருப்பதால் எனக்கே சிலை வையுங்கள்.

கடைசியாக, தினப் பத்திரிகைகளில் என் புகைப்படம் வரவேண்டும் என்ற ஆசை எனக்கு மிகுதியாக இருப்பதால் என் சிலையை நிறுவி என் ஆசை நிறைவேற வழி செய்யப்பட வேண்டும். —ஸந்தியன்

□ □ □ □ □ □ □ □ □ □ □ □

## நாவலர்

யாழ் நாட்டில் பிறந்து தாய்நாடு சென்று தொண்டாற்றிய பெரியார் யாழ்ப்பாணத்துநல்லூர் ஆறுமுக நாவலரவர்கள். பிற சமயத் தொண்டர்கள் என்று சொல்லிக் கொண்டு ஈழநாட்டுக்கு வந்து ஈழநாட்டில் மொழியையோ, சமயத்தையோ தேசிய உணர்ச்சியையோ வேரறுக்க முற்பட்டவர்களைக் கண்டபோது நாவலர்க்குத் தன்மான உணர்ச்சி தளிர்விட்டுத் தழைக்கத் தொடங்கியது.

சேய்நாட்டில் செய்த அரும் பெரும் தொண்டுகளுடன் தாய்நாடு சென்று செய்த மிஷனரித் தொண்டின் சான்றாகவே சிதம்பரத்திலே ஒரு கலாசாலையும், சென்னை தங்கசாலைத் தெருவில் ஓர் அச்சு யந்திர சாலையும் இன்று வரையும் தொண்டாற்றி வருகின்றன.

கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்பர். நாவலரவர்களின் கல்வி கேள்விகளின் பெருமையையும், தொண்டின் சிறப்பையும் ஒழுக்கத்தின் தூய்மையையும் போற்றும்முகமாகவே திருவாவடுதுறை ஆதீனம் "நாவலர்" என்னும் பட்டத்தைக் கொடுத்துக் கௌரவித்தது.

தலைசிறந்த பதிப்பாசிரியர், உரையாசிரியர், சொல்லின் செல்வர், குணக்குன்று. இவ்வாறு விளங்கிய நாவலரை "வசனநடை கைவந்த வல்லாளர்" என்று அறிஞர் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரிகள் போற்றிப் புகழ்ந்தனர். ஈழ நாட்டுப் பெரியாரையும் சிலையமைத்துக் கௌரவிக்கத் தமிழ்நாட்டு மக்கள் தயங்கமாட்டார்கள் என்றே எண்ணுகிறேன். — வெ.க.நடராசா

□ □ □ □ □ □ □ □ □ □ □ □

## ராணுவ வீரன்

சீனாவுடனும், பாகிஸ்தானுடனும் எல்லைப் பாதுகாப்புக்காக உயிரைத் தியாகம் செய்து போரிட்ட ராணுவ வீரர்களுக்காகச் சிலை எழுப்பினால் எவ்வளவு நன்றாயிருக்கும்! மேனாடுகளில் "அறிந்திரா வீரனின் சமாதி" (Tomb of unknown Soldier) என்று வைத்து அதைப் போற்றுகிறார்கள். அதைத் தேசிய உடைமையாக வைத்துப் பேணுகிறார்கள். பெரும் தலைவர்கள் அச்சமாதிக்கு மலர் வளையம் சாற்றி அஞ்சலி செலுத்துகிறார்கள்.



பண்டைக் காலத்தில் 'நடுகல்' என்று உண்டு. போரில் வீர மரணம் எய்தியவரை சகல மரியாதைகளுடன் அடக்கம் செய்து அங்கே ஒரு கல் நடுவார்கள். அதன்மேல் அவர் நாட்டுக்குச் செய்த தொண்டைப் பொறிப்பார்கள். ஆனால் நாம் தற்கால வழக்கப்படி போரில் வீர மரணம் அடைந்த ராணுவ வீரர்களின் ஞாபகார்த்தமாக ஒரு ராணுவ வீரனுக்குச் சிலை எழுப்பலாம்.

நல்ல கம்பீரம் வாய்ந்த உடற்கட்டுடன், கண்களில் வீரம் கொப்புளிக்க, கரங்களில் உணர்ச்சிகள்மோத, தோளில் துப்பாக்கி இருக்க, ஒரு கால் முன்னேறிக் கொண்டிருக்க அதைத் தொடர்ந்து இன்னொரு கால் வர, பார்ப்பவருக்கெல்லாம் அதைக் காணும்தோறும் உடலில் வீர உணர்ச்சி பரபரத்து எழச் சிலை இருக்க வேண்டும்.

இந்தச் சிலையைப் பார்க்கும் எவருக்கும் கட்சி வேறுபாடு தோன்றாது. மாறாக, நாட்டின் ஒற்றுமை, ஒருமைப்பாட்டு உணர்ச்சி ஓங்கச் சிலையை ஒருவித மதிப்புடனும், மரியாதையுடனும்தான் பார்ப்பார்கள். — சா. கல்யாணி

# சிதைவு நேராதபடி உங்கள் பற்களை வலுப்படுத்துகிறது பினாகா புளோரைட்

## பற்சிதைவு நேருவதேன்?

உணவுக்குப் பிறகு பல்லிடுக்குகளிலே விடப்பட்ட உணவுத்துகள்கள் அமிலங்களாக மாறுகின்றன.

அமிலங்கள் பாதுகாப்பு எனாமல்களை பலஹீனப்படுத்துகின்றன. விளைவு, பற்களின் உயிர்த்திசுக்கள் சிதைவூட்டும் கிருமிகளுக்கு இலக்காகின்றன. சிதைவு என்றால் பல்லிடுக்குகளிலே வலி ஏற்படுவதுடன் அநேகமாகப் பற்களையே எடுக்கவும் நேரலாம்.

## செய்ய வேண்டியதென்ன ?

புளோரைட் கொண்டு பல் எனாமலை வலுவாக்குங்கள். புளோரைட் எனாமலும் இணைந்து, அமிலம் ('ஆசிட்') மற்றும் சிதைவை எதிர்ப்பதற்கான உபரியான வலிமையை அளிக்கிறது.

## செய்வதெப்படி

பினாகா புளோரைட் கொண்டு பல் துலக்குங்கள். அந்த பற்பசை ஒன்றில்தான் திடமான புளோரைட் கலவையும், சோடியம் மானோப்ளூரோபாஸ்பேட்டும் அடங்கியுள்ளன. தவிர, அடிக்கடி உங்கள் பல் வைத்தியரை அணுகி சரி பார்த்துக் கொள்ளுங்கள்.

பினாகா புளோரைட் கொண்டு பல் துலக்கி, உங்கள் பற்களுக்கு உபரியான வலுவை ஊட்டுங்கள்-இப் பற்பசை குறிப்பாக குழந்தைகளுக்குச் சிறந்தது.

CIBA Cosmetics




ஒவ்வொரு ட்யூப் புடனும்
அழகிய பரிசு இணைக்கப்பட்டுள்ளது.

TAM



சென்னையில் விளம்பர ஆலோசகர்களான F. D. ஸ்டுவர்ட் கம்பெனியைச் சார்ந்த ஸ்ரீ வி.எல்.எஸ். மணி அவர்கள் குமாரத்தி சௌ. விஜயலக்ஷிமிக்கும், ஹைதராபாத் ஹிந்துஸ்தான் ஏரோநாடிக்ஸ் ஸ்தாபனத்தைச் சார்ந்த ஸ்ரீ கே. ராஜாராம் அவர்களுக்கும் வட ஆற்காடு மாவட்டம் குடியாத்தத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

# பொன்னிவனத்துப் பூங்குயில்

## கொத்தமங்கலம் சுப்பு

### அத்தியாயம் 34

## குயிலி பறந்தாள்!

குயிலியைப் பிரிந்ததில் சிறுவர்களுக்கு ஏற்பட்ட வேதனைக்கு அளவில்லை. அவர்களுக்கு ஆற்றிலேயே விழுந்துவிடலாமா என்ற யோசனை எழுந்ததும், முந்திரிக்கொட்டையை ஆற்றிலிருந்து காப்பாற்றக் குயிலி எடுத்துக் கொண்ட முயற்சி நினைவுக்கு வந்தது.

''சின்னத் தம்பி! நீயா என்னைத் தூக்கிட்டு நடந்தே? குயிலி சொல்லிச்சு, நீ கேட்டே. இல்லாட்டி நான் செத்து எத்தனையோ நாட்கள் ஆகியிருக்கும்.''

''ஆமாம்டா. இவனுக்காக அது பட்டபாடு...'' என்றான் சின்னத்தம்பி. திடீரென்று அவன் முகத்தில் ஒரு வெறி வந்தது. அதுதான் மனித இனத்தின் வெறி. அவன் எதிலும் சோர்ந்து விடுவதில்லை என்பதன் அறிகுறி.

''அட! எல்லோருக்கும் தைரியம் தான் இப்ப வேணும். அழப்படாது. கண்ணைத் துடையுங்க. உயிரைக் குடுத்தாவது குயிலியைக் கொண்டாந்துடணும். யார் யாருக்குச் சம்மதம்?'' என்று கேட்டான் சின்னத்தம்பி.

உடனே எல்லாப் பையன்களும் ''சம்மதம் சம்மதம்'' என்றார்கள்.

அந்த இருளில் சடசடவென்று மரத்தில் ஏறினான் சின்னத்தம்பி. பத்து இருபது கிளைகளை ஒடித்தான். அதில், ஆளுக்கு ஒரு கம்பு தயார் செய்து கொண்டார்கள். பையன்கள் வீர நடை போட்டார்கள்.

''இதோ அந்த வண்டி வருதுடா!'' என்றான் சட்டாம்பிள்ளை. ஆம்! குயிலியை இறக்கி விட்டு விட்டு அந்த வண்டி தஞ்சையை நோக்கி வந்து கொண்டிருந்தது. உடனே பையன்கள் சாலை ஓரத்தில் நின்றார்கள். வண்டி அருகில் வந்ததும் பாய்ந்தார்கள். தடதடவென்று வண்டிக் கூட்டின் மேல் அடிகள் விழ்ந்தன. இருபது பையன்களுக்கு முன்னால் இருவர் என்ன செய்ய முடியும்?

'படீர் படீர்' என்று அடி விழவே, அந்த ஆட்கள் இருவரும் 'தப்பித்தோம் பிழைத்தோம்' என்று வண்டியிலிருந்து குதித்து ஓடினார்கள். பையன்களின் சந்தோஷம் நிலைகொள்ளவில்லை.

''வெற்றி வெற்றி வெற்றிடா
நெற்றி மட்டக் கம்புக்கு!''

என்று பாடினான் ஒருவன். 'படார்' என்று அவன் தலைமேல் சின்னத்தம்பி அடித்தான்.

''என்னடா வெற்றி? முட்டாப் பய! குயிலியை எங்கே இறக்கி விட்டானென்று கேட்டீர்களா?'' என்றான்.

''நீதான் முட்டாப் பயல்களின் தலைவன் இருக்கிறாயே, நீ கேட்டாயா?'' என்றான் முந்திரிக் கொட்டை.

''சே! விளையாட்டுப் பிள்ளைகள் என்பது சரியாப்போச்சுடா!'' என்று அலுத்துக்கொண்டான் சின்னத்தம்பி.

''அடே ஏண்டா அலுத்துக்கறே! உங்களுக்குக் குயிலி இருக்கிற இடம் தானே தெரியணும்?''

''ஆமா. இவரு சோசியத்திலே புலி!''

''அடே, மனிசன் பொய் சொன்னாலும் சொல்லுவான். மாடு, குதிரை எல்லாம் பொய் சொல்லாது. இந்த வண்டியை அலுங்காமல் திருப்பு. குதிரை நடக்கட்டும். தானே போய்க் குயிலியை இறக்கி விட்ட இடத்திலே நின்றுவிடும்'' என்றான் முந்திரிக் கொட்டை.

''சபாஷ், சபாஷ்!'' என்றனர் எல்லோரும். வண்டி திருப்பி விடப்பட்டது. குதிரை கொஞ்சம் இடக்குச் செய்துவிட்டுத் திருவையாற்றை நோக்கி நடந்தது.

பஞ்சு மெத்தையும், பட்டுத் துணிகளும் அவள் உடம்புக்கு இதமாகத் தான் இருந்தன. ஆனால் நெஞ்சு பொருமியது. அந்த மஞ்சத்தைச் சுற்றிக் கொசு உள்ளே புகா வண்ணம் மல்லிகைப் பூ நிறத்தில் ஒரு சல்லாத் திரை தொங்கியது. உண்மையாகவே சுகந்த மணம் தரும் ஊதுபத்திகள் ஒரு புறம் புகைந்து சுருள் சுருளாக மேலே எழுந்தன. 'இடமோ அரண்மனை மாதிரி இருக்கிறது. இழுத்து வந்தவரோ திருட்டுத்தனமாகக் கொண்டு வந்தான். இது பெரிய மனிதனின் சின்னப் புத்திதான். என்னை ஏன் தூக்கி வரவேண்டும்?' 'இது என்னடி முட்டாள்தனமான கேள்வி? உன்னைத் தூக்கி வராமல் சின்னத்தம்பியையா தூக்கி வருவார்கள்?'

'இருட்டில் தனியாக யாரோ ஒருவரிடம் சிக்கிக் கொள்ளப் போகிறோமே!

எப்படித் தப்புவது? நாம் தப்பிளுலும் தப்பாவிட்டாலும் உலகம் தப்பாகத் தான் பேசும். இதற்காக நான் தவறி விடலாமா? ஓர் ஆணின் தவறுதலுக்குப் பெண் அடங்கிவிட்டால் அப்புறம் பெண்ணுக்கு என்ன பெருமை? என்ன துணிச்சல்டா இவங்களுக்கு? வேட்டையாடி மானைப் பிடிக்கக் காலைக் கட்டி வண்டியிலே போட்டுக்கிட்டுப் போற மாதிரி! நான் என்ன மாடா, மனுஷியா? இங்கே ஏதாவது அம்மிக் குழவி, ஆட்டுக் கல் குழவி இருக்கிறதா பார்ப்போம்.'

இவ்வாறு யோசித்துக் கொண்டே இருக்கையில் அவன் முகத்தில் யாரோ குளிர்ந்த பன்னீரைத் தெளித்தார்கள். வேறு யாராவதாக இருந்தால் தண்ணீர் பட்டவுடன் குபீர் என்று ஏதேனும் பதில் சொல்லி யிருப்பார்கள். குயிலி சிறிது நேரம் அசையவே இல்லை.

''பெண்ணே ! எழுந்திரு. பயப் படாதே!'' என்று ஒரு பெண்ணின் குரல் கேட்கவே, 'இனி விழிக்கலாம்' என்று நிச்சயம் செய்து கொண்டு அப் போதுதான் மயக்கம் தெளிந்து விழிப் பவள் போல் முகத்தைக் கோணிக் கொண்டே மெல்ல விழித்தாள் குயிலி.

ஆஹா! அவள் கண்ட காட்சி அவளையே ஆச்சரியமடையச் செய்தது. உண்மையில் அவள் மயக்கம் தெளிந்து விழித்திருந்தால் நிச்சயமாக, 'தாயே! பராசக்தி! மனமிரங்கிக் காப்பாற்று!' என்று கன்னத்தில் அடித்துக் கொண் டிருப்பாள்.

அத்தனை திவ்ய தேஜசுடன் துறவு பூண்ட அரசி போல் கையில் திருநீறும் தட்டும் பிரம்புமாக அழகே உருவாய் அங்கு நின்றிருந்தாள் அபுருபா பாய்! ஒரு முறை குயிலியைக் கம்பீரமாக ஏற இறங்கப் பார்த்தாள்.

''சித்திரமே உயிர் பெற்றதைப்போல் இருக்கும் இவள் நம் மகனுக்கு ஏற்ற வள்தான்'' என்று ஒரு நொடியில் அறிந் தாள். ஆனால் குயிலியும் அப்போது அவள் வாயிலிருந்து வந்த மது வாடையிலிருந்து 'இது பெண்ணல்ல! பெண் உருக் கொண்ட ஒரு புரட்டுக் காரி' என்று அறிந்தாள்.

''ஏ, பிள்ளாய்! உனக்கு மங்களம் உண்டாகுக!'' என்று தன் கையில் இருந்த மந்திரக் கோலால் ஒரு தட்டுத் தட்டினுள் அபுருபாபாய்.

அவள் வசனம் பேசிய விதத்தில் குயிலி மயங்கவில்லை. அவள் வாயி லிருந்து ரகசியத்தை வரவழைக்க வேண்டும் என்றுதான் எண்ணினுள்.

''நீ இப்போது எங்கே இருக்கிறுய், தெரியுமா?'' என்று கேட்டாள் அபு ருபாபாய்.

''தேவலோகத்தில்!'' என்ருள் குறும் புக்காரக் குயிலி.

''ஆம்! இது பூலோக கைலாசம்! தேவலோகம்தான்!''



'ஓ! திருவையாற்றுக்கா கொண்டு வந்திருக்கிறார்கள்!' என்று எண்ணினாள் குயிலி.

''நாம் யார் தெரியுமா?''

''இது தேவலோகம்னு நீங்க இந்திராணிதான்.''

அபுருபாப்பாய் கடகடவென்று சிரித்தாள். மதுவின் மயக்கமும் மனத்தின் களிப்பும் ஒன்று சேர்ந்து நிலைகொள்ளாமல் ஆடினாள்.

''இந்திராணி! ஆம்! நான் ராணியே தான். இப்போது நீ ஏன் இங்கு அழைத்து வரப்பட்டாய் தெரியுமா?''

குயிலி சிரித்தாள். இந்த நிலையிலும் அவளுக்கு ராணியிடம்' ''உன் முக ஒளியைப் பார்க்கத்தான்!'' என்று கூறிவிடத் தோன்றியது. அப்படியே சொல்லி வைப்போம் என்ற கருத்தில், ''உங்களைப் பார்க்க முன் பிறப்பில் புண்ணியம் செய்திருக்கிறேன். அழைத்து வந்திருக்கிறார்கள்'' என்றாள். ''தெய்வம் மாதிரி இருக்கிறீர்களே! என்ன அழகு? என்ன கம்பீரம்? இந்த மாதிரி அபூர்வமான அழகை நான் பார்த்ததேயில்லை.''

''அடி, கெட்டிக்காரி. என் பேரையும் உனக்கு யார் சொன்னார்கள்? வண்டியில் அவர்கள் பேசிக் கொண்டார்களா?''

''பேசாமல் இருப்பார்களா? ஆமாம்.''

''அவர்கள் சொன்னது உண்மைதான்.. என் மகன் பட்டத்துக்கு வரும்போது நீ பட்டத்தரசியாகி விடுவாய்!''

குயிலிக்குத் திகில் பிடித்தது. 'ஐயோ! ஆற்றில் துரத்திய சிப்பாய்தான் நம்மைப் பிடித்து விட்டான். இது ஏதோ அரண்மனை விஷயம்,' என்று எண்ணி, ''முடியாதுன்னு சொன்னால்?'' என்று சந்தேகத்தைக் கேட்டாள்.

''சொல்லலாம். நீ உடனே வெளியே அனுப்பப்படுவாய்; ஆனால் உயிரோடு அல்ல'' என்றாள்.

''முடியும்னு சொன்னால்?''

''அப்படிச் சொல்லு. வந்த அதிர்ஷ்டத்தை உதறாதே. என் மகனை அடைய நீ கொடுத்து வைத்திருக்க வேண்டும். அவன் யார் தெரியுமா? இந்த வீட்டு ராசா, இந்த நாட்டு ராசா. அவன்தான் காட்டு ராசா!''. குயிலிக்குத் திக்கென்றது. அந்தப் பெயரில் ஒருவன் உலாவுவதாகவும் அவன் அயோக்கியர்களுக்கெல்லாம் அயோக்கியன் என்றும் கேள்விப்பட்டதை நினைவுகூர்ந்தாள். மிக ஆவல் உள்ளவள் போல், ''அப்போ நீங்க என் மாமியாரா?'' என்று கேட்டாள்.

''ஆம்!'' என்று அவள் முகத்தில் நெட்டி முறித்தாள், மாயத் துறவி!

உள்ளே சென்றாள். குயிலிக்குச் சிரிப்புத் தாங்க இயலவில்லை.

'இந்த இடத்தில்கூடத் துறவி இருக்கிறாளே. இந்தக் காவிக்கு இதுதானா மதிப்பு?' என்று சிரித்தாள்.

'ராசாங்கத்திலும் போட்டியா...? பாவையை அடையத்தான் போட்டி என்றால் பட்டத்தை அடைய அதைவிடப் போட்டா போட்டி இருக்கும் போலிருக்கிறதே! இவர்கள் எக்கேடு கெட்டும் போகட்டும்! இங்கிருந்து தப்பும் வழி என்ன?' என்று நினைக்கையில் ஒரு பெண், இலங்கிணியின் தங்கை போல் அங்கு வந்து நின்று கொண்டு, ''இளவரசி! உங்களுக்கு உணவு



கொண்டு வந்திருக்கிறேன்'' என்றாள். குயிலிக்குப் பசியுமில்லை; விருப்பமுமில்லை. ஆயினும் நாம் தப்ப எவ்வளவு பாடுபட வேண்டியிருக்குமோ? உடலில் பலம் இருக்க வேண்டும் என்று கருதி அவள் கொண்டு வந்த பால் பழம் எல்லாவற்றையும் ஒரு கை பார்த்தாள். உடலில் தெம்பு வந்தது. வம்பு வந்தால் சமாளிக்கலாம் என்று முடிவு செய்து கொண்டாள்.

உணவை அடுத்து ஒரு தட்டில் மலரும், திலகமும், வாசனைப் பொருள்களும் எடுத்துக் கொண்டு வந்து வைத்து விட்டுத் தரையில் ஒரு பாயை விரித்து, ''அம்மா ! இப்படி வந்து உட்காருங்கள்!'' என்று அழைத்தாள். இதனால் யோசிக்கச் சிறிது நேரம் கிடைக்குமென்று குயிலி இசைந்தாள்.

தலை சீவிச் சடை போட்டு அலர் சூட்டித் தோழி அலங்காரம் செய்கையில் குயிலி, ''அம்மா ! அவர் அழகாய் இருப்பாரா?'' என்று வெட்கத்துடன் கேட்டாள்.

''இருக்கிறாரு, இல்லை. அதைக் கேட்க நீ யாரு?'' என்றாள் அந்த அதிகாரக்காரி.

''நான் அவரைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டாமா? அதுக்காகத்தான் கேட்கிறேன்'' என்று குனிந்தவண்ணம் சொல்லிக் கொண்டே பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த பால் கிண்ணத்தைப் பார்த்தாள் குயிலி.

''கட்டிக்கன்னு சொன்னால் கழுத்தைக் காட்டுறியா? இதெல்லாம் என்ன கேள்வி?'' என்று சீப்பை அழுத்தி இழுத்தாள்.

அந்த இலங்கிணியிடமிருந்து சேதியைத் தான் பெற முடியாது. ஆனால் வேறுவிதத்தில் இவளைப் பயன்படுத்திக் கொண்டால் என்ன என்ற முடிவில் திடீரென்று பால் கிண்ணத்தை எடுத்து அந்தப் பெண் தலையில் ஓர் அடி அடித்தாள் குயிலி. இலங்கிணி கலங்கி விழுந்தாள். அவளை இழுத்துக்கொண்டு போய் மஞ்சத்தில் கிடத்திவிட்டு அவள் உடைகளைத் தான் உடுத்திக் கொண்டு தன் உடைகளை அவளுக்கு உடுத்தினாள்.

அடுத்த கணமே படிகளில் இறங்கி வேகமாக ஓடினாள். ''நில்!'' என்று கீழிருந்து ஒரு குரல் அதட்டியது. திடுக்கிட்டாள். கையில் அந்தக் கிண்ணத்தை எடுத்து வராமல் போனேமே என்று திகைத்தாள்.

எதிரில் படிகளில் ஏறி வந்தான் காட்டுராஜா. ''அடேயப்பா !.... என்ன கொடிய முகம்? இவனுக்கா நான் பிறந்தேன்?' என்று நினைக்கையில், ''ஏய், எங்கே அவள்? எப்படி இருக்கிறாள்?'' என்று கேட்டான்.

பயம் நீங்கிய குயிலி பாசாங்குக்காரியாக ஆனாள். ''உங்களுக்காகத் தான் கட்டிலிலே காத்திருக்காங்க!''

''நீ எங்கே போகிறாய்? அவளிடம் சென்று நாம் விஜயம் செய்வதாக அறிவி !'' என்று ஆடினான்.

''அவங்களுக்கும் களைப்பாய் இருக்குதாம். கொஞ்சம் குடிக்க ஏதாவது கொண்டு வரச் சொன்னாங்க. அது தான் போகிறேன்.''

''போ, சீக்கிரம்!'' என்று படியில் சிறிது விலகினான் அவன்.

குயிலி விரைந்தாள். அவள் ஓடி வந்த வேகத்தில் அவன் நிலைதடுமாறினான். அவளைப் பிடித்துக் கொண்டு நிற்க அவள் மீது கையை வைத்தான். குயிலி சரேலென்று குனிந்து படிகளில் இறங்கினாள். இறங்கும்போதே குறும்பாக அவன் அங்கவஸ்திரத்தை வெட்டி இழுத்தாள். அந்த அசைவில் அவன் நாலு படிகள் கீழே இறங்கி ஏறினான்.

குயிலி வெளியே வந்தாள். ''ஏய், வேலைக்காரி ! எங்கே ஓடுகிறே?'' என்றான் காவல்காரன்.

''புது எசமானிக்குப் பூவும் பழமும் வேணுமாம். வாங்கியாரப் போறேன்'' என்று கூறிவிட்டுக் காவல்காரனைத் தாண்டி வெளியே இருளில் காவிரியில் இறங்கினாள். நட்ட நடுநிசியில் நடுக்கும் குளிரில் ஈரச் சேலையுடன் 'தெய்வம் விட்ட வழியே கதி' என்று அவள் தஞ்சாவூர்ச் சாலையில் ஓடி வருகையில் ஒரு குதிரை வண்டி எதிர்ப்பட்டது.

குயிலி பயந்து பாதையோரத்தில் ஒளிந்தாள். வண்டி அவளைத் தாண்டியது. கூட்டின் மேல் உட்கார்ந்திருந்த கூட்டத்திலிருந்து, ''அக்கா!'' என்று ஒரு குரல் கூவியது.

'' தம்பி, முந்திரிக் கொட்டை ! தப்பிச்சுட்டேண்டா! பெண்ணுக்குவந்த ஆபத்து புடவையோட போச்சுடா !'' என்றாள் குயிலி. 'ஓ'வென்று அலறினாள்.

வண்டி திரும்பியது. குறுக்குப் பாதையில் கும்பகோணத்தை நோக்கி வேகமாக ஓடியது.

முன் வைத்த காலைப் பின் வைக்கவில்லை பிரதாபசிம்மர். முப்பது நாற்பது கள்வர்களைப் பிடித்துவிட்டார். ஆயினும், முக்கியமான காட்டுராஜா பிடிபடாமல் தப்பியதில் அந்தச் சுத்த வீரனின் மனம் கஷ்டமடைந்தது. தந்தையின் முன் நிற்கவே தனயன் மனம் கூசியது.

''பிரதாபா, உன் வீரத்தை மெச்சினேன். எதிரி யார் என்ற ரகசியத்

மார்கோ சோப் மட்டுமே, தூய்மையோடு
பல நன்மைகளும் செய்கிறது. குளிர்காலத்திலும்
கோடைகாலத்திலும் சருமத்தை ஒன்றுபோல்
இசையச்செய்கிறது அது!

# காரணம், மார்கோவில் மட்டுமே வேப்பெண்ணெய் உள்ளது






மார்கோ சோப்பின் செழுமையான நுரையில் வேப்பெண்ணெய் நிறைந்துள்ளது. அது சருமத்தை இளக்கிக் கொடுத்துப் பராமரிக்கிறது. வேம்பின் கிருமியழிக்கும் தன்மை தொற்று நோய் அண்டாமல் காக்கிறது. மார்கோ உங்கள் சருமத்தை எந்தக் காலநிலையிலும் மிருதுவாகவும், மழுமழுப்பாகவும், மாசற்றதாகவும் விளங்கச்செய்கிறது. துர்நாற்றத்தைப் போக்கும் வேப்பெண்ணை மார்கோவில் கலந்துள்ளதால் அது எப்போதும் உங்களை தூய்மையுடன் இருக்கச்செய்கிறது. மென்மையும் நுரைவளமும் மிகுந்த மார்கோ சோப் உங்களுடைய குடும்பத்தினர் யாவருக்கும் சிறந்தது.

## மார்கோ சோப்

சருமம் மிருதுவாகவும்
மென்மையாகவும்
விளங்க!

ஒரு கல்கத்தா கெமிகல் தயாரிப்பு

CCM-4183

தைக் கண்டுபிடித்து விட்டாய்! இனி மற்றதை இப்போதைக்கு விட்டு வைத்துவிட்டு ரங்கமன்னாரின் சித்திர சாலைக்குச் சென்று வா'' என்று அன்புடன் உரைத்தார் மன்னர்.

'இதுவும் ராஜதந்திரமோ! நம்மால் இந்த வேலை முடியாது என்று தந்தை கருதுகிறாரோ ?'' என்ற எண்ணத்தில் வியாகூலம் அடைந்தார் பிரதாபசிம்மர்.

''மகாராஜா அவர்கள் என்ன ஆணையிட்டாலும் அதன்படி நடக்க நான் சித்தமாக இருக்கிறேன். என்மீது தங்களுக்கு அவநம்பிக்கை ஏற்பட வில்லையானால் நம் குடும்ப எதிரியைப் பிடிக்கும் பணியை எனக்கே இடும் படி கேட்டுக் கொள்கிறேன்'' என்று தந்தையின் முன் பணிந்தார் பிரதாப சிம்மர்.

துக்கோஜி மகாராஜாவின் முகத்தில் அன்பும் பாசமும் ஆனந்தக் கண்ணீரை வரவழைத்தன. மகனை வாரி எடுத்து அணைத்து உச்சி மோந்தார்.

''மைந்தா ! இந்த அரண்மனையில் தந்தைக்கும் மகனுக்கும் இடையே கூட இரு காதுகள் நுழையும். அரசர்கள் கண்ட உணவைச் சாப்பிடக் கூடாது. இஷ்டப்படி பேசவும் கூடாது. நாம் தாங்குவது முடி அல்ல. நமது மூளைக்குப் போட்ட பிடி. கவனி, உன் தாய் இரக்கம் மிகுந்தவள். அவளை விட்டு அந்த வேலைக்காரி குப்பி தப்பி விடக்கூடாது.''

''உத்தரவு !''

''இந்த விஷயம் ரகசியமாக இருக்க வேண்டும். இது நம் குடும்ப விஷயம்.''

''அதெப்படி முடியும்? ஓலையை அனுப்பிய ஒருவன் இருக்கிறானே?''

''அவன் முதற்கொண்டு நாம் இதைப் பெரிதாகக் கருதவில்லை என்று நினைக்கும்படி நடக்க வேண்டும்.''

''உத்தரவு !''

'' நீ உடனே சித்திரசாலைக்குச் சென்று ரங்கமன்னாரிடம் சிறிது நேரம் உரையாடிக் கொண்டிரு. அவர் உன் சித்திரத்தை முடித்துத் தருவார். அவரிடம்கூட அரசியலைப்பற்றிப் பேசாதே!''

''உத்தரவு !''

''அவர்கள் கலைஞர்கள். அரசியல் தந்திரங்கள் அவர்களுக்குத் தெரியாது. இடம், பொருள் ஏவல் பார்க்காமல் உளறி விடுவார்கள்.''

''உத்தரவு ! ஆனால் தந்தையே ! என் சித்திரத்தை எதற்காக இவ்வளவு முக்கியமாகத் தீட்டச் சொல்லி யிருக்கிறீர்கள் என்று நான் அறியலாமா?''

''உன் சித்திரத்தைத் தீட்டாமல் என் சித்திரத்தையா தீட்டச் சொல்வது ! போ! போ!'' என்று மகிழ்ச்சியுடன் மழுப்பினார் தந்தை. பிரதாப சிம்மர் வெளியே புறப்பட்டார்.

தம் அறையை அடைந்தவுடன் அங்கு அவர்களுக்காகக் காத்திருந்த சர்க்கரையை முதுகில் ஒரு தட்டுத் தட்டிக் கொடுத்தார் இளவரசர்.

'' புலவரே ! போன விஷயம் வெற்றிதானே?'' என்றார்.

'' விசாரித்தேன்! அது விட்டுத் தள்ள வேண்டிய விஷயம்!'' என்றான் அவன்.

''ஏன் ? அவள் யார்? எந்த ஊர்? அவளை அழைத்து வந்து பாடச் சொன்னால் பாடுவாளா ? ஏன் இதில் நீ சலிப்புடன் பேசுகிறாய்?'' என்று கேட்டார்.

''இளவரசே ! அது பொய் பிறக்கும் இடம். சூது விளையும் நிலம். பஞ்சமா பாதகங்களின் பாத்தி. அவளுடைய குரல் நஞ்சு. சிரிப்பு நெருப்பு. அவள் ஒரு விலை மாது!'' என்று அடுக்கினார் புலவர். பிரதாபசிம்மரின் முகத்தில் புன்னகை அரும்பியது. நண்பரிடம் கேலியாக, ''தாங்கள் அவள் வீட்டுக்கு விஜயம் செய்தீர்களோ?'' என்று குறும்பாகக் கேட்டார் இளவரசர்.

''பின் என்ன செய்வது? பேய்க்கு வாழ்க்கைப்பட்டால் புளிய மரத்தில்

---

காதலி: நம்முடைய கல்யாணத்துக்குப் பிறகு உங்கள் பெயரில் சொத்து எழுதி வைக்கிறேன் என்று எங்க அப்பாதான் சொல்லிவிட்டாரே, இன்னும் என்ன 'உம்' என்று இருக்கிறீர்கள் ?

காதலன் : சொத்து கிடைக்க வேறு சுலபமான வழி இல்லையே என்று கவலைப்படுகிறேன்!



ஏற வேண்டும். அரசனுக்கு நண்பரானால் அந்தஸ்தை மூட்டை கட்டிவிட வேண்டும்.''

''சென்றாயா என்றால்?''

''இதோ பாருங்கள், மார்பில் சந்தனப் பூச்சை! நான் போனேன். தலையில் முதலிலேயே துணியைப் போட்டுக் கொண்டேன். இரவு முதல் ஜாமத்திலேயே...பயந்து பயந்து....''

''ஏன் அவ்வளவு பயம்? எனக்காகத் தானே சென்றாய்?''

''உங்களுக்காகப் போகிறேன் என்று முகத்தில் எழுதி ஒட்டி வைத்துக் கொண்டு போக முடியுமா? அந்தத் தெருக்களில் நம்ம முட்டுக்கார ஆசாமிகள் நடமாட்டம் இருக்கும். எவனாவது பார்த்து விட்டால், 'ஒதுவார் மூர்த்திகளின் மருமகனை அங்கே பார்த்தேன்' என்று மாமாவிடம், போய் ஒதி விடுவான். அப்புறம் குண்டு ஜாலர் என்னுடைய மண்டையைப் பிளந்துவிடும்.''

''ஓஹோ! நானும் பார்த்திருக்கிறேன். நீங்கள் தேவாரக் கோஷ்டிக்காரர்கள். அவர்கள் திருவிழாவில் நாட்டியம் ஆடுபவர்கள்!''

''இதுதானே முடிச்சுப் போடுகிறீர்களே?''

''நீதான் விலைமகள் என்று சொல்லி விட்டாயே! அப்புறம் ஏது முடிச்சு? பிறகு?''

''அவள் பெயர் குயிலியாம். போன வியாழக் கிழமை வீட்டை விட்டுப் போனவள்தானாம். இருக்கிற விலாசமே தெரியவில்லையாம்.''

இளவரசர் திகைத்தார். 'அப்படி இருக்க முடியாது. இருக்க முடியாது... அவள் முகத்தில் அது இல்லை.... கள்ள மற்ற சிரிப்பு. காசாசை இல்லாத பார்வை. பூ மலர்ந்தது போல் புன்னகை! சிட்டுக் குருவி போல் பரபரப்பு. கலைப் பொக்கிஷம். தவறு செய்திருக்க மாட்டாள்' என்று தம் மனத்துக்குள் ஆறுதல் சொல்லிக்கொண்டார். ''பிறகு ஊரில் எங்காவது தேடிப் பார்த்தாயா?'' என்று கேட்டார்.

''இதுதானா வேலை? நான் ஓர் இளைஞன். இப்படியெல்லாம் பார்க்கலாமா?''

''அட! இளைஞர்கள் பார்க்காமல் கிழவர்களா இதையெல்லாம் பார்ப்பார்கள்? நீ பாடத் தெரிந்தவன். நாவன்மை உடையவன். இளைஞன்! இதற்குத் துப்பில்லையே!'' என்றார் இளவரசர்.

''துப்பில்லாமலும் இல்லை. நீங்கள் சொல்கிறபடி இன்னும் கொஞ்ச நேரம் தேடினால் அந்தத் துப்பு முகத்தில் கிடைத்துவிடும். இளவரசே! இந்த ஒரு வேலையில் மட்டும் என் திறமையின்மைக்கு மன்னியுங்கள்!'' என்று சிரித்தான் சர்க்கரை.

''உனக்கென்ன? நீ சிரிப்பாய்! அவள் சாதாரணப் பெண்ணல்ல. ஒரு கலைப் பொக்கிஷம்.''

''இப்படித்தான் முதலில் கலை, பொக்கிஷம் என்று ஆரம்பிக்கும். அப்புறம் திருவாரூர் தியாகராசாவையே தூது அனுப்பும். இருக்கட்டும். நாளைக்குத் தேடிப் பார்ப்போம்'' என்றான் சர்க்கரை.

''அவர்கள் வீடு எங்கே?'' என்றார் இளவரசர்.

''ஏன்? அங்கே விஜயம் செய்யலாமென்று ஆசையா? அங்கு உட்காரக் கூட நாற்காலி கிடையாது. ஊஞ்சலிலே ஒரு சங்கிலி குறைவு. அவள் மாமன் வேறு இருக்கிறான். கதவைக் கூடக் கடையில் கொண்டு போய் அடகு வைத்துக் கள்ளைக் குடித்து விடுவான். அவன் யாருக்கோ இந்தப் பெண்ணை விலை பேசி யிருக்கிறானாம். அவன் கையிலேயும் அகப்படவில்லையாம். இரண்டு நாளைக்கு ஒரு தடவையாவது வந்து பாட்டியைப் பார்க்குமாம். இப்ப ஒரு வாரமாக வரவே இல்லையாம். அவளுக்கு ஏதோ ஆபத்து வந்து விட்டது என்று அவளுடைய பாட்டி சின்னமேளம் பொன்னம்மாள் ஒரேயடியாக அழுது புலம்புகிறார்கள். எனக்கே பார்க்கப் பரிதாபமாக இருந்தது. நான் வந்து விட்டேன்.''

''உயிருக்கே ஆபத்தா?'' திகைத்தார் இளவரசர். ''கூடவே சில பையன்கள் நிற்பார்களே?''

''குயிலே பறந்து போச்சு என்றால் முட்டைகளைப்பற்றிக் கேட்கிறீர்களே!'' என்றான் சர்க்கரை.

இளவரசர் திடுக்கிட்டார். அவளுக்கு ஆபத்து என்ற வார்த்தையைக் கேட்கவே, என்ன காரணத்தாலோ அவர் மனம் கவலைப்பட்டது. சர்க்கரை இதைப் புரிந்து கொள்ளாமல் இல்லை. இருப்பினும் கேலியாக, ''என்ன யோசிக்கிறீர்கள்? அரண்மனையில் உங்களுக்கு இல்லாத ப்ராட்டா? உடனே உத்தரவிடுங்கள். சங்கீத மகால் கொள்ளாமல் வித்துவான்கள் கூடி விடுவார்கள். ஆயிரம் தாசிகள் ஆடுவார்கள். பண்டித முனிவரிடம் நான் சொல்கிறேன், உங்களுக்கு வெட்கமாக இருந்தால்!'' என்று கூறினான்.

**(தொடரும்)**



# பனாமா பிளேடுகள்

முகக்ஷவரத்தை இன்பகரமாக்குகின்றன!

நீங்கள் உயர்வாக மதிக்கும் சேவைக்கேற்ற

பனாமா மகிழ்ச்சிமிகு நல்ல

முகக்ஷவரத்திற்கு உறுதியளிக்கின்றன!

---

வீட்டின் முன்கூடம் இரண்டுபட்டது. கூச்சலும் கும்மாளமும் அங்கே வெள்ளமாக ஓடி அடுக்களைக்குள் பரபரப்பாக இருந்த தேவகியைத் திணற அடித்தன. ஈர விறகை ஊதி ஊதி அவள் கண்கள் ஏற்கனவே எரிச்சலாய்ச் சிவந்து விட்டன.

''டேய் கோபு, அங்கே என்னடா கூச்சல்? அப்பா இல்லையா?'' என்று அடுக்களைக்குள்ளிருந்து குரல் கொடுத்தாள்.

''அப்பா பேப்பர் படிக்கிறாங்க.'' மூத்தவளான கலா பதில் கொடுத்தாள்.

''இடி விழுந்தால்கூட உங்கப்பாவுக்குத் தெரியாதே!'' என்றவள், ''ஏய் கலா, இங்கே வா !'' என்றாள்.

''நான் வரல்லேம்மா !''

''ஏய் மூதேவி, வர்றியா என்ன?'' தாயின் குரலில் அதட்டல் அவளை அச்சுறுத்தியது.

''டேய்! மெதுவாப் பேசு. இல்லேன்னா அம்மா விறகுக் கட்டையை எடுத்திட்டு வந்திடுவாங்க'' என்றான் இளையவன் ராமு.

'' கோபு! வீட்டுக் கணக்குப் போட்டுட்டியா ?''

கோபு பதில் சொல்லவில்லை.

அப்போது அங்கே வந்த கமலாவிடம், ''கோபு என்னமா செய்யிறான்?'' என்று கேட்டாள்.

''அவங்க ரெண்டு பேரும் பந்தடிச்சு விளையாடறாங்கம்மா.''

''டேய், கோபு.''

''என்னம்மா ?''

''கணக்குப் போட்டுட்டியா என்ன?''

''அதுதான் போட வரலேன்னு சொல்லிட்டேனே ?''

''அப்பாகிட்டே கேட்கிறதுக்கென்னடா?''

அப்பாவிடம் பாடம் கேட்பதற்குப் பிள்ளைகள் தயங்குவார்கள். ஒரு தடவைக்கு இரண்டு தடவைகள் சொல்லிக் கொடுப்பார். அதன் பிறகும் புரியவில்லையானால் முதுகில் அறைந்து, காதைப் பிடித்துத் திருகிச் சீறி விழுந்து விடுவார்.

தேவகி அப்படியில்லை. ஒன்றுக்குப் பத்து தடவைகள் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொடுப்பாள். ஆகையால் குழந்தைகள் பாடம் கேட்கத் தேவகியை அணுகுவார்கள்.

''கலா! டம்ளர்களையும் தட்டுகளையும் கழுவி வை'' என்று சொன்னாள் தேவகி. கலா முணுமுணுத்தவாறு பாத்திரங்களைக் குழாயடிக்கு எடுத்துச் சென்றாள்.

''ராமு, மணி என்ன ஆகிறது?''

''எட்டடிக்கப் போகிறதம்மா.''

''முதல்லே அப்பாவைக் குளிக்கச் சொல். டேய் கோபு, அப்பாவுக்குச் சோப்பு, டவல் எல்லாம் எடுத்து வை.''

''நான் வைக்கிறேனம்மா'' என்றான் ராமு.

காலை ஐந்து மணி முதல் ஒன்பதரை மணி வரைக்கும் தேவகிக்குச் சாவதானமாக மூச்சு



-விட நேரம் கிடைக்காது. பம்பரமாக அவள் சுழல வேண்டும்.

கணவரை ஆபீசுக்கும் குழந்தைகளைப் பள்ளிக்கும் அனுப்பிவிட்டால், அவள் சற்று நிமிர்ந்து மூச்சுவிடலாம். அதன் பிறகு ஒவ்வொன்றையும் சாவதானமாகச் செய்வாள்.

வீட்டில் குழந்தைகள் ஒருவருக்கொருவர் என்னதான் அடிபிடி சண்டை போடட்டும், கணவன் மௌனமாக இருந்துவிடுவார். காலையில் ஒன்பதரை மணிக்கு ஆபீசுக்குக் கிளம்பினால் இரவு எட்டரைக்கு மேல்தான் வீடு திரும்புவார். அதற்குள் குழந்தைகள் படுத்துக் கொள்வார்கள்.

மூவரும் மகா குறும்புகள். மூத்தவள் கலா கொஞ்சம் பயந்தவள். இளையவர்கள் இருவரும் பிள்ளைகள். மூத்தவன் கோபு மூன்றடி குதித்தால், இளையவன் ராமு நான்கு அடி குதிப்பான். கலா பெண் ஆனாலும் குழந்தைதானே? அவளும் அவர்களுடன் சேர்ந்து வீட்டைச் சந்தைக் கடையாக்கி விடுவாள்.

மணி எட்டேமுக்கால்.

''தேவகி, என்ன ஆச்சு?'' என்று ராகவன் கேட்டார்.

''எல்லாரும் சாப்பிட வாங்க.''

''கோபு எங்கேடா?'' என்று ராமுவைப் பார்த்துக் கேட்டான்.

''அவன் இன்னும் குளிக்கலேம்மா. குளியலறைத் தொட்டியிலே கப்பல் விட்டு விளையாடறான்.''

''அது ஒரு பிசாசு. வேளா வேளைக்கு வராது. நீங்க எல்லாரும் உட்காருங்க'', என்றவள் கலாவைப் பார்த்து, ''கலா! வாயைப் பிளந்து கொண்டு நிற்காதே. தட்டுகளை எடுத்து வை'' என்றாள். அதற்குள் கோபுவும் வந்து விட்டான்.




அவன் தலையிலிருந்து நீர் சொட்டுச் சொட்டாக வடிந்தது.

''தலையைச் சரியாகத் துவட்டிக் கல்லே'' என்றாள் தேவகி.

''கோபு சாமி கும்பிடல்லேம்மா'' என்றான் ராமு.

காலையில் குளித்ததும் சாமி கும்பிட வேண்டும். நெற்றியில் திருநீறு பூச வேண்டும் என்பது அவள் கட்டளை. தட்டின் முன் உட்கார்ந்த கோபு அவசரம் அவசரமாக எழுந்து சாமி கும்பிட ஓடினான்.

இளஞ்செடியாக இருக்கும்போது ஆடு மாடுகள் கடிக்காமல் இருக்க வேலி கட்டி விட்டால் அது மரமாகிவிடும். அதன் பிறகு வேலி தேவையில்லை. அதைப் போல இளம் உள்ளங்களையும் தெய்வ வழிபாட்டில் திருப்பிவிட்டு விட்டால், மனம் வளர வளர அதுவும் பக்குவப் பட்டுவிடும். அதன்பிறகு தீய சக்திகள் அணுகாது என்று அன்னை சாரதா தேவியார் சொன்னதாகத் தேவகிக்கு நினைவு.

தெய்வ வழிபாட்டில் அவள் சில கட்டுப்பாடுகளை வகுத்திருந்தாள்.

''அடுத்த வாரம் முதல் பள்ளிக் கூடங்களுக்கு 'லீவு' விடுறாங்களாம். குழந்தைகளை ஊருக்கு அனுப்பினால் என்ன?'' என்று கேட்டாள் தேவகி.

''அனுப்பினால் போச்சு....'' என்றார் ராகவன்.

''நான் தாத்தா வீட்டுக்குத்தான் போவேன்'' என்றான் கோபு.

''நானும்'' என்றான் ராமு.

''நீ போகல்லையா கலா?'' என்று கேட்டார்.

''இல்லேப்பா, நானும் போவேன்'' என்றாள் கலா.

தேவகிக்கு அப்பா இல்லை; அம்மா இருந்தாள். ஆகையால் தேவகியின் பிறந்த வீட்டைக் குழந்தைகள் பாட்டி வீடு என்றும், ராகவனுக்குத் தந்தையும் தாயும் இருப்பதால் தாத்தா வீடு என்றும் அவர்கள் குறிப்பிட்டுப் பேசுவார்கள்.

''கோபுவையும் ராமுவையும் ஒரே இடத்துக்கு அனுப்பினால் அங்கேயும் சும்மா இருக்க மாட்டாங்க. ஒருத்தனைத் தாத்தா வீட்டுக்கும், மற்றவனைப் பாட்டி வீட்டுக்கும் அனுப்ப வேண்டும்'' என்றாள் தேவகி.

''அது முடியாதப்பா. நான் தாத்தா வீட்டுக்குத்தான் போவேன்'' என்றார்கள் இருவரும்.

தாத்தா வீட்டுக்குச் சென்றால் தாத்தாவுடன் வயல்வெளிக்குச் செல்லலாம், செல்லுமிடங்களில் எல்லாம் பண்டங்கள் கிடைக்கும். கடைகளில் தொங்கும் விளையாட்டுச் சாமான்களும் வாங்கிக் கொடுப்பார். பிள்ளைகளை அவர் ஒரு வார்த்தை கடிந்து பேசமாட்டார்.

பாட்டி வீட்டுக்குச் சென்றால் வேளா வேளைக்குச் சாப்பாட்டைத் தவிர வேறு

எதுவுமே கிடைக்காது; சத்தம் போட்டால் கூடப் பாட்டி திட்டுவாள்.

''அவங்ககூட கலாவையும் ஊருக்கு அனுப்பி வையுங்க. கொஞ்ச நாளைக்காவது நிம்மதியா இருக்கலாம். பொழுது விடிஞ்சால் தூங்குகிறது வரைக்கும் இவங்களோடு மல்லுக்கு நின்னு பாதி உயிர் போய்விடுது'' என்றாள் தேவகி.

ராகவன் இலேசாகச் சிரித்துக் கொண்டார்.

''அப்பாவை வரச் சொல்லிக் கடிதம் எழுதினால் அவரே வந்து அழைத்துப் போவார்'' என்றார்.

''மாமிக்கும் குழந்தைகள் என்றால் உயிர். கோபுதான் எதற்கு எடுத்தாலும் அடம் பிடிப்பான்.''

'' அதெல்லாம் ஒண்ணுமில்லேம்மா '' என்றான் கோபு.

''ஆமாம்மா. கோபு போன தடவை போயிருந்த போது ஒரு நாள் மத்தியானம் சாப்பிடாமல் மரத்தடியில் இருந்தான். சித்தப்பா வந்து கெஞ்சிக் கூத்தாடி அழைத்துப் போய்ச் சாப்பிட வைச்சாங்க'' என்றான் ராமு.

''போடா.... இல்லேம்மா.''

''பொய் சொல்லாதேடா கோபு. இங்கே மாதிரிதானே அங்கேயும் இருப்பாய் ?'' என்றாள் தேவகி.

''பள்ளிக்கூடம் திறக்கிறதுக்கு முதல் நாள்தான் வருவோம்'' என்றான் ராமு.

கோபு சற்றுத் துடுக்கானவன். வயதுக்கு மீறிய அறிவு. வயது பத்து. பள்ளியில் நடக்கும் போட்டிகளில் முதற்பரிசைத் தட்டிக் கொண்டு வந்துவிடுவான். அந்த ஆரம்ப உயர்தரப்பள்ளி அகத்தியர் மன்ற பேச்சுப் போட்டியில் எட்டாவது வகுப்பு மாணவர்களைவிடக் கட்டுரைப் போட்டி நன்றாக எழுதிப் பரிசு பெற்றுவிட்டான். குறும்புகள் செய்வதிலும் கைதேர்ந்தவன். சில வேளைகளில் சுத்த அசடு மாதிரி பேசுவான்; நடப்பான். அதைப் பார்க்கும் போது தேவகிக்கு உள்ளுக்குள் பயமாக இருக்கும்.

குழந்தைகள் தாத்தா வீட்டுக்குச் செல்லும் குஷியில் பாதிகூடச் சாப்பிடவில்லை.

''டேய் ராமு! நாவல் மரத்திலே நிறையப் பழங்கள் இருக்கும். உனக்கு நான் நிறையப் பறித்துத் தருவேன்'' என்று அவன் காதில் கிசுகிசுத்தான் கோபு.

குழந்தைகள் ஊருக்குப் புறப்படும்போது தேவகி 'நல்ல பிள்ளையாக நடந்துக்கணும். யாரையும் தொந்தரவு செய்யக் கூடாது' என்று உபதேசம் பண்ணி அனுப்பி வைத்தாள். அவர்களை அழைத்துச் செல்ல ராகவனின் தந்தை வந்திருந்தார்.

பள்ளிக்கூடம் இல்லாத நாட்கள் என்றால் கேட்க வேண்டாம். வீடு குருக்ஷேத்திரமாக மாறி விடும். கோபு ராமுவைக் கிள்ள, அவன் அடிக்கோலால் கோபுவின் கையை அறையப் பிரளயம் தானாக வந்துவிடும்.

தேவகி வேலைக்காரி வைத்துக் கொள்ள விரும்பவில்லை. வேலைக்காரிகள் செய்யும் வேலைகளில் அவளுக்குத் திருப்தி இருக்காது. எவ்வளவு கஷ்டப்பட்டாலும் வீட்டு வேலைகளை அவளே செய்து வந்தாள்.

குழந்தைகள் ஊருக்குப் போய் விட்ட பிறகு அவளுக்கு வேலையின் பளு குறைந்தது.

தனிமை அவளைத் தத்து எடுத்துக் கொண்டது. மனைவி வீட்டில் தனிமையாக இருப்பாள் என்று ராகவனும் ஆறுமணிக்கெல்லாம் வந்துவிடுவார்.

திருவிழா நடந்து முடிந்த இடம் போல அந்த வீடு வெறிச்சென்று ஆகிவிட்டது. தேவகிக்கும் தனிமை என்னவோ போல் இருந்தது. வீட்டில் ஒரு பொருள் வைத்த இடத்தை விட்டு அசைய வேண்டுமே. ஒரு மணி நேரத்தில் குப்பை கூளங்களைக் குவிக்கும் குழந்தைகள் இல்லை.

குழந்தைகளின் தொல்லை இல்லை ; ஆனால் அவர்களைப் பற்றிய கவலை அவளைக் கரையானாக அரிக்கத் தொடங்கிவிட்டது. தாய்மை உணர்ச்சிகளின் தெய்வீகத் தன்மையை அவளால் அப்போதுதான் முழுமையாக உணர முடிந்தது.

''கோபு எப்படி இருக்கிறானோ? சின்னவனுக்கு ஒரு நாளைக்கு ஐந்தாறு டம்ளர் காப்பியாவது வேணும்'' — குழந்தைகள் ஊருக்குப் போய் இரண்டு நாட்கள் முழுமையாக ஆகவில்லை. அதற்குள் அவர்கள் ஒவ்வொருவரைப் பற்றியும், அவர்களது தேவை — சுவை இவைகளைப் பற்றியும் பேசத் தொடங்கி விட்டாள்.

'' மாமாவிடமிருந்து ஏதாவது கடிதம் வந்ததா?''

''இல்லே. ஏன்?'' என்று கேட்டார் ராகவன்.

''குழந்தைகள் எப்படி இருக்கிறாங்களோ?''

இதுவரைக்கும் அவர்கள் மூவரையும் ஒரே சமயத்தில் ஊருக்கு அனுப்பி வைத்ததில்லை.

குழந்தைகள் மீது அவள் சீறி விழுந்தாள்; அடிக்கவும் செய்தாள். அவர்கள் இல்லாத போது அவர்களைப் பற்றிப் பலவாறு நினைத்து இதயத்தில் சுமையை ஏற்றிக் கொண்டாள். இதுதான் தாய்மையின் பெருமை !

ஒரு வாரம் ஓடி விட்டது.

''எதுக்கும் நீங்க ஒரு தடவை ஊருக்குப் போய்க் குழந்தைகளைப் பார்த்துவிட்டு வந்தால் தேவலே '' என்றாள் தேவகி.

''பைத்தியம். குழந்தைகளை அவங்க நம்மைவிடக் கவனமாகப் பார்த்துக் கொள்வாங்க'' என்றார் ராகவன்.

அவர் சொல்வது உண்மைதான் என்பது அவளுக்குத் தெரியும். ஆனாலும் தாயுள்ளம் ஆறுதலடைய மறுத்தது. குழந்தைகளைப் பற்றிய நினைவுகள் இதயப் பரப்பில் குமிழிகளாகப் பொங்கின. கோபுவின் அட்டகாசம், பிடிவாதம் இவைகள் அவளைப் பயமுறுத்திக் கொண்டே யிருந்தன.

அன்றைக்கு மத்தியானம் சாப்பிட்டு விட்டுப் படுத்தாள் தேவகி. நல்ல வெய்யில். தேவகி கண்களை மூடினாள்.

''அம்மா !''

தேவகி வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள்.

ஒப்புயர்வற்ற

*தம்ப்-க்ரிப்*

மற்றும் பிரபலமான

*ஆங்கர்-க்ரிப்* தன்னிகரற்றது

கொண்ட

# ஆரியன்

## டூத் பிரஷ் இது ஒன்றே

மிகவும் சிறப்பாகக் கழுவலாம்

நீண்ட காலம் உழைக்கும்

ஸ்டாண்டர்ட், டீலக்ஸ் மற்றும் சூப்பர் க்வாலிடி தரங்களில். ஹார்ட், மீடியம் மற்றும் ஸாஃப்ட வகைகளில் கிடைக்கிறது. பேபி மற்றும் ஜூனியர் சைஸ்களிலும் கிடைக்கிறது






வெல்வெட் போல மெத்தென்றிருப்பதற்கென விசேஷ முறையில் பதப்படுத்தப்பட்ட உயர்ந்த ரக நைலான் கொண்டு சூப்பர் மற்றும் டீலக்ஸ் டூத் பிரஷ்கள் தயாரிக்கப்படுகின்றன.



**திறமைக்கும் நேர்த்திக்கும் சின்னம்!**

---

# ரணசிகிச்சையின்றிப் புது முறையில் வலிமயமான மூலத்தைச் சுருக்கிக் குணமளிக்கிறது. நமைச்சலை நிறுத்துகிறது வலி தணிக்கிறது.

**நியூயார்க்—தீவிரப் பிணிகளில் தவிர மற்றபடி ரண சிகிச்சையின்றியே மூலத்தைச் சுருக்கி, நமைச்சலை நிறுத்தி, வலி தணிக்கும் அற்புத வல்லமையுள்ள புதிய மருந்துப் பொருளை முதன் முறையாகக் கண்டுபிடித்துள்ளது விஞ்ஞானம்.**

டாக்டரின் கண்காணிப்பில் நிகழ்த்தப் பட்ட பரிசோதனைகளே இதற்கு அத்தாட்சி-வலியும் நமைச்சலும் உடனடியாகத் தணிக்கப் பட்டன. இதனுடன் மெல்ல வலியாற்றிய அதே சமயம், உள்ளபடி சுருக்கமும் குணமும் ஏற்பட்டது.

அனைத்திலும் அதிசயம் என்னவெனில், பத்து, இருபது ஆண்டுகள் நீடித்திருந்த பிணிகளிலும் இந்த அபிவிருத்தி நிலைபெற்றதுதான்.

உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிக் கழகம் ஒன்றின் கண்டுபிடிப்பாகிய பயோடைன் * என்ற புதிய மருந்துப் பொருளே இதன் இரகசியம், இப்புதிய மருந்துப் பொருள் தற்போது ப்ரிப்பரேஷன் ஹெச் என்ற பெயருடன், களிம்பு வடிவிலே அளிக்கப் படுகிறது. மூலத்தைச் சுருக்குவதோடு, மலப்பாதைக்கு மழமழப்பூட்டி, மலப்போக்கினை வலி அற்ற தாக்குகிறது. ரணமும் நமைச்சலும் மேலும்பாவுவதைத் தடுக்கிறது. ப்ரிப்பரேஷன ஹெச், 30 கி. மற்றும் 50 கி. ட்யூபுகளாக இடுகுழாயுடன், எல்லா உயர்தர மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

மூல நோய்பற்றி விளக்கும் சிறுநூலை இலவசமாகப்பெற இன்றே எழுதுக: டிபார்ட்மெண்ட் 38. ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட்; தபால் பை 10133, பம்பாய்-1 பிஆர்

*டிரேட் மார்க்

21-PH TM

"அமுல் பாலுணவிலே
வைட்டமின்கள் எதற்காக
இருக்கின்றன தெரியுமா?"
என்று கேட்டது பாப்பா.



"தெரியுமே" என்று ஒத்துப்
பாடின அச் சிறு பிராணிகள்.



அமுல் பாலுணவு
உங்கள் குழந்தைக்குத் தேவையான 7 வைட்டமின்கள்
அடங்கியது.




ASP/ABF-14/67 TM



## இப்படி ஒரு பொருத்தம்!

நாட்டுத் தலைவர்கள் நேருவுக்கும் கென்னடிக்கும் இருந்த 'ஒரு பொருத்தம்' இலக்கியத் தலைவர்களான பாரதிக்கும் கல்கிக்கும் உண்டு.

நேரு நவம்பரில் பிறந்து, மே மாதம் காலமானவர். கென்னடியோ மே மாதம் பிறந்து நவம்பரில் காலமானார்.

பாரதி டிசம்பரில் உதித்து செப்டம்பரில் அமரரானவர். கல்கியோ செப்டம்பரில் தோன்றி, டிசம்பரில் மறைந்தவர். -டி. எஸ். வி.



## அம்மாவே பெரியவள்

என் உறவினர் ஒருவர் வீட்டுக்குப் போயிருந்தேன். அவர் ஒரு பட்டதாரி. ''ஏம்பா! எங்களை யெல்லாம் பொய் சொல்லக் கூடாதுன்னு சொல்லி விட்டு நீ மட்டும் பொய் சொல்லலாமா?'' என்று கேட்டாள் அவருடைய ஆறு வயதுப் பெண். ''பொய் சொன்னேனா நான்? என்ன அம்மா அது?'' என்றார் அவர் திடுக்கிட்டபடி.

''அம்மாவைவிட நான்தான் அதிகம் படிச்சேன்னு சொன்னியே. அம்மா எஸ். எஸ். எல்.சி. யாம். நீ பி. ஏ.வாம். உன்னைவிட ரெண்டெழுத்து அம்மாதாம்பா அதிகம் படிச்சிருக்கா....'' என்று போட்டாளே ஒரு போடு அச்சிறுமி.

--குத்தாலம் வீ. சம்பந்தன்

---

''கோபு.''

சுற்றுமுற்றும் பார்த்தாள். யாரையும் காணவில்லை. கோபுவின் குரல் அல்லவா அது? அவள் இதயம் வேகமாக அடிக்கத் தொடங்கியது. அவள் இதயத்தில் பீதி பாசியாகப் படரத் தொடங்கியது. கோபுவுக்கு ஏதாவது? அவளால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. பித்துப் பிடித்தவள்போலாகி விட்டாள்.

ராகவன் வரும் வரைக்கும் நெருப்பை மடியில் கட்டிக் கொண்டவளைப் போலத் தவித்துப்போனாள்.

ராகவன் வந்ததும் விஷயத்தைச் சொன்னான்.

''எல்லாம் மனப் பிராந்தி..... நீ சதா குழந்தைகளைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பதால் இப்படிச் சத்தம் கேட்டிருக்கும்.''

''நீங்க போகலேன்னா என்னையாவது ஊருக்கு அனுப்பி வையுங்க.'' அவள் அழத் தொடங்கிவிட்டாள்.

ராகவனுக்கும் குழந்தைகளைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. அவர் அதை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. 'தேவகியின் தொந்தரவுக்காகப் புறப்படுவதாகக் கூறி இரவே ரயில் ஏறிவிட்டார். அவர் புறப்படும் போது, ''குழந்தைகளைக் கூப்பிட்டுப் பாருங்க. வர்றதாச் சொன்னால் கையோட கூட்டிட்டு வந்திடுங்க'' என்று சொன்னதை நினைத்துக் கொண்டார்.

ராகவன் மறு நாள் காலையில் ஊர் போய்ச் சேர்ந்தார்.

அப்பாவைக் கண்டதும் குழந்தைகளுக்குக் குஷி பிறந்துவிட்டது. தாத்தா வீட்டுச் சேதிகளை ஒவ்வொருவரும் மாறி மாறிக் கூறத் தொடங்கினார்கள்.

''டேய், யாராவது அம்மாவைப் பார்க்க ஊருக்கு வர்றீங்களா?'' என்று கேட்டார் ராகவன்.

''நாங்க வரலேப்பா.''

''குழந்தைகள் வந்து ஒரு வாரம் ஆகல்லே. அதுக்குள்ளே....'' என்றாள் ராகவனின் தாயார்.

''தேவகியின் தொந்தரவு பொறுக்க முடியல்லே''! என்றார் ராகவன்.

''ம்....'' என்றவள், ''பெற்றவளுக்குத்தான் தெரியும்....'' என்று ஆழ்ந்த பெருமூச்சு விட்டாள்.

''அதைச் சொல்லு.....!''

''ராகவா! நான் ஒருத்தி இங்கே இருக்கிறது உனக்கு நினைப்பு இருக்கா?''

''என்னம்மா சொல்றே ?''

''ஒரு வாரம் குழந்தைகளைப் பார்க்காததினாலே தேவகி துடியாய்த் துடிக்கிறதாகச் சொன்னே. அவள் ஒரு தாய். நானும் ஒரு தாய்; உன்னைப் பெற்றவள். உன்னையும் எனக்குப் பார்க்கணும்னு ஆசை இருக்குங்கிறதைக் கொஞ்சமாவது யோசனை பண்ணிப் பார்த்தியா....? ஆறு மாதங்களுக்கு ஒரு முறை வந்து போகக் கூடாதா? தாய்னா எல்லாரும் ஒண்ணுதான்டா.....'' அவள் குரல் கரகரத்தது. வலது கை ஆள்காட்டி விரலால் கண்ணீரைச் சுண்டி எறிந்தாள்.

''அம்மா....!''

''இப்போதாவது புரிஞ்சுக்கோ. உன்னை அடிக்கடி பார்க்க ஒருத்தி இங்கே ஏங்கிக்கிட்டிருக்காங்கிறதை. நீ உன் குழந்தைகளைப் பார்க்க நினைப்பதுபோல, என் குழந்தையான உன்னை...அதுக்கெல்லாம் கொடுத்து வைக்கணும்.'' ஆழ்ந்த துயரப் பெருமூச்சு விட்டுக் கொண்டாள்.

ராகவன் சிலையாகி விட்டார்.

''தேவகியை ஒரு பத்து நாளைக்கு இங்கே அனுப்பி வை. அவளும் குழந்தைகளும் சேர்ந்திருக்கிறதையாவது பார்த்துச் சந்தோஷப்படுவேன். அவளை அழைத்து வர உன் அப்பாவை வரச் சொல்கிறேன்.''

பெற்றோர்களான தனக்கும் — தேவகிக்கும் இருக்கும் உணர்ச்சிகள்.... பாசம்.... எல்லாம் தன்னைப் பெற்றவர்களுக்கும் இருக்கும் என்பதை ராகவன் உணர்ந்து கொண்டார்.

''சரியம்மா! தேவகியை அனுப்பி வைக்கிறேன்'' என்றார் ராகவன்.

# கலை வியாபாரம்

## சினிமா சிந்தனை

படத் தயாரிப்பாளர்கள் சூதாட்ட மனப்பான்மையுடன் தமக்கென ஒரு நடிகரை வைத்துக் கொண்டு "அப்படிக் கதை எழுது: அதை மாற்று: அந்த நடிகருக்கு இந்தக் கருத்து வேண்டாம்; விநியோகஸ்தர்கள் இந்தப்பகுதி சேர்க்க வேண்டும் என்கிருர்கள்" என்றெல்லாம் சொல்லிப் படக் கதையை உருவாக்க வைக்கிருர்கள்.

- ஜாவர் சீதாராமன்

இது பற்றி இரு கே. பாலசந்தர் அவர்களைக் கேட்ட போது சொன்னதாவது :




திரு ஜாவர் சீதாராமன் அவர்களின் இந்தக் கூற்றை நான் முழுதும் ஆமோதிக்கிறேன். கலை என்பது வியாபாரமாகி விட்ட இந்தக் காலத்தில் எவர்தான் சூதாட்ட மனப்பான்மை இல்லாமல் இருக்கிருர்கள்?

ஒரு படத் தயாரிப்பில் ஈடுபட்டு, விநியோகஸ்தர்களும் அந்தப் படத்துக்கு உரிய பணத்தைப் போடும் போது, அவர்கள் விரும்பும் நடிகர், நடிகைகளேயும், பாத்திரங்களேயும் போடுவதிலோ அல்லது ஏற்படுத்துவதிலோ எப்படித் தவற்றைக் காண முடியும்?

பல லட்சங்களை முடக்கித் தயாரிப்பில் ஈடுபட்டிருக்கும் படத் தயாரிப்பாளர்கள் ஒரு நடிகருடைய குணச்சித்திர நடிப்பைப் பயன்படுத்திக் கொள்ளும்போது அந்த நடிகர் விரும்பும் வகையில் அவருக்கேற்ற காட்சிகளேயோ, கருத்துக்களேயோ மாற்றுவதில் என்ன தவறு? ஏனெனில் அந்த நடிகர் நடித்த படங்கள் மக்களிடையே மகத்தான பாராட்டையும், வசூலேயும் பெறும் பொழுது அந்த நடிகர் கூறும் மாற்றங்களை எப்படித்தான் புறக்கணிக்க முடியும்? மக்களின் அமோகமான ஆதரவைப் பெற்றுள்ள அந்த நடிகரை பகைத்துக் கொண்டு எத்தான் பணத்தைப் போட்டு, அதைப் போல் பல மடங்கு பணத்தை எதிர்பார்க்கும் படத் தயாரிப்பாளர்கள் விரும்புவார்களா?

ஆனல் என்னைப் பொறுத்த வரையில் இம்மாதிரியான தொரு நிலைமை ஏற்பட்டதில்லை. அவ்வாறு ஏற்பட்டாலும் அது தவிர்க்க முடியாததே! அதில் தவறும் இல்லை என்பது எனது அபிப்பிராயம்.

ஒரு படம், ஒரு குழந்தையை மையமாக வைத்துத் தயாரிக்கப்பட்டு, அந்தப் படமும் வசூலில் ஒரு சாதனையை ஏற்படுத்தினல் உடன் மற்ற படத் தயாரிப்பாளர்கள் எல்லோரும் ரசிகர்களுடைய ரசனையை ஒரே மாதிரியாக எடை போட்டு, அதே மாதிரி அதாவது ஒரு குழந்தையை மையமாக



வைத்துப் பல படங்களைத் தயாரிக்கிறார்கள். இந்தப் படங்களெல்லாம் தோல்வியடையும் பொழுது, வேறு ஏதாவதொரு கருத்தை மையமாகக் கொண்ட படம் வெற்றியடைந்தால் அதைப் போலப் பல படங்களைத் தயாரிக்க முற்படுகிறார்கள். இதிலிருந்தே நாம் ஓரளவு படத் தயாரிப்பாளர்களின் மனநிலையைப் புரிந்து கொள்ள முடியும்!

பொதுவாக ரசிகர்களின் மனப் போக்கை எந்த ஒரு படத் தயாரிப்பாளரும் புரிந்து கொள்ள முடிவதில்லை. அண்மையில் நான் எடுத்திருக்கும் படமான "தாமரை நெஞ்சம்" பெரிய நகரங்களில் ஓடுவது போல் கிராமங்களில் ஓடுமா என்பது சந்தேகமே! ஏனெனில் ரசிகர்களின் ரசிகத்தன்மை இடத்துக்கு இடம் மாறுபடுவதுதான். இது வரை நான் தயாரித்த படங்களனைத்தும் நான் எழுதிய நாடகங்களே! ஒருசிலர் நான் சினிமாவிலும் நாடக உத்தியைக் கையாள்வதாகக் கூறுகிறார்கள். எதை அடிப்படையாகக் கொண்டு அப்படிச் சொல்கிறார்கள் என்பது எனக்குப் புரியாத புதிராகத்தானிருக்கிறது.

ஒவ்வொரு படமும் ஒரொரு காரணங்களுக்காக ஓடுவதும் உண்டு, ஓடாமலிருப்பதும் உண்டு; குறிப்பாக எனது நண்பர் திரு ராமண்ணா அவர்கள் எடுத்த "நான்" படம் சென்னையில் 25 வாரங்கள் வரை ஓடியது நினைவிருக்கலாம்! அந்தப் படத்தில் எதைக் கண்டு ரசிகர்கள் அமோகமான ஆதரவை அளித்தார்கள்? அதுவும் புரியாததொரு புதிர்தான்; ஆனால் ஒன்று மட்டும் தெரிகிறது. ஏதோ ஒன்றை அந்தப் படத்தில் கண்டுதான் அப்படிப்பட்ட ஆதரவை ரசிகர்கள் அளித்தார்கள் என்பதுதான் அது! ஆனால் அதேபோல் சில மாற்றங்களுடன் தயாரிக்கப்பட்ட மற்றொரு படமான "மூன்றெழுத்து" மட்டும் "நான்" பெற்ற ஆதரவைப் பெறாத காரணம் என்ன? அதைக் கொண்டுதான் நான் மக்களின் ரசனையைப் புரிந்துகொள்ள முடியாது என்றேன்.

இப்படி ரசிகர்கள், நடிக, நடிகையர்கள், விநியோகஸ்தர்கள், டைரக்டர்கள், எல்லோரும் விரும்பும் எல்லா விதமான காட்சிகளும் நிரம்பியதொரு படத்தை வசூலுக்காக வென்றே படத் தயாரிப்பாளர்கள் பல மாற்றங்களுடன் தயாரிக் கிறார்கள் என்பது தான் எனது முடிவு.

வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு படங்கள் வெற்றியடையும்போது அம்மாதிரியான படங்களைத் தொடர்ச்சியாகத் தயாரிப்பதன் காரணம் படத் தயாரிப்பாளர்கள் எதிர்பார்க்கும் வசூலே!

எனவே சினிமாக் கலை என்பது கலைக்காக எடுக்கப்படுவது அல்ல! குறுகிய காலத்தில் அதிகப் பணத்தைச் சம்பாதிக்க வேண்டும் என்ற சூதாட்ட மனப்பான்மையே! அந்த மனப்பான்மை இந்தத் தொழிலில் மட்டும் அல்ல, எல்லாத் துறைகளிலுமே இருக்கும் பொழுது சினிமாவை மட்டும் குறை கூறுவானேன்?

**பேட்டி கண்டவர்: "திரைத்தருவி"**

சென்னை உட்லண்ட்ஸ் நீச்சல் குளத்தைத் 'திறந்துவைத்த' ஜெனரல் கரியப்பா, "என்ன, நீர்லேகுதித்து நீந்தட்டுமா?" என்று கேட்டார்.



நல்ல யோசனை.

இவரைப் போன்ற பிரமுகர்களை வேறு பல இடங்களிலும் 'திறந்து வைக்க' அழைத்தால் இம்மாதிரி யெல்லாம் கேட்கலாமோ !

## □ □ □ 'திறந்து வைப்பது' என்றால்!

ஹோட்டல்: இலை போடலாம். நான் தயார்.

பத்திரிகை ஆபீஸ்: என்னைப் படம் எடுத்தாயிற்றா? பேட்டியைத் தொடங்கலாம்.

போக்குவரத்து நிறுவனம்: டிரைவர், கொஞ்சம் நகருங்கள். முதல் ஒரு கிலோமீட்டர் நான் ஓட்டுகிறேன்.

புதிய டிரங்க் டெலிபோன் தொடக்க விழா: திருநெல்வேலிக்கு (அல்லது எது தங்கள் ஊரோ அதற்கு) லைன் போடுங்கள். பேசுகிறேன்.

புத்தகக் கடை: நான் எழுதிய புத்தகங்களை இன்று வாங்கினால் கையெழுத்து போட்டுத் தருகிறேன்.

கல்யாண மண்டபம்: 'என்னுடைய அறுபதுக்கு அறுபதை முதலில் இங்கே நடத்திவிடலாமா?'

மருத்துவமனை: 'விழா போட்டோவுக்குப் பதில் எக்ஸ்ரே எடுத்துவிடுங்கள்! இதோ என் டாக்டர் எழுதிக் கொடுத்த சீட்டு!'

--- கிகி-வாசன்

புதியது!

# நேஷனல் எக்கோ

மாடல் A—1514

விலை **ரூ. 415*** மட்டுமே



அவளுக்குப் பிடிக்கும் அதன் தோற்றம்...





அவருக்கோ அதன் விலை!

- 6 வால்வுகள், 4 பாண்டுகள்
- கவர்ச்சிமிக்க லோ—லைன் மரக் காபினெட்
- தொடர்ச்சியான ஒலிக் கட்டுப்பாடு
- பயானோ கீ
- சக்தி வாய்ந்த மத்திய மற்றும் சிற்றலை ரிஸப்ஷனுக்கு ஃபர்ரைட் மற்றும் உட்புற ஏரியல்கள்

(* விலை, எக்சைஸ் தீர்வை உள்ளிட்டது. வரிகள் தனி)

GRA

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ்
தி நேஷனல் எக்கோ ரேடியோ & இன்ஜினியரிங் கோ.
லிமிடெட்டின் ஒரு பிரிவு.
பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . தில்லி . பெங்களூர்
செகந்தராபாத் . பாட்னா . எர்ணாகுளம்.

NE. 244 TH

# எழுத்தில் புதுமை



## வாஷிங்டனில் திருமணம்

தஞ்சாவூரில் நடந்த ஒரு நான்கு நாள் திருமணத்தை ஓர் அமெரிக்க தம்பதி பார்த்து அனுபவித்துவிட்டு அமெரிக்கா திரும்பியதும் உறவினர்களான ராக்பெல்லர் தம்பதியிடம் அத்திருமண வைபவத்தை விவரிக்கிறார்கள். தமிழ் நாட்டுப் பழக்கவழக்கங்களை வெகுவாக ரசிக்கும் ராக்பெல்லர் சீமாட்டிக்கு வாஷிங்டனிலேயே அத்தகைய ஒரு திருமணத்தை நடத்திப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆவல் தோன்றி விடுகிறது. தமிழ் நாட்டிலிருந்து. திருமணத்துக்கு வேண்டிய எல்லாச் சாமக்கிரியைகளையும், கல்யாணப் பெண் — பிள்ளை, உறவினர்கள், சாஸ்திரிகள், காஸ்லெட் தூக்க நரிக் குறவர்கள் உள்பட எல்லோரையும் வாஷிங்டனுக்கே தருவித்துக் கல்யாணத்தை ஜாம்ஜாம் என்று முடித்து வைக்கிறாள் ராக்பெல்லர் மாமி. இதுதான் கதை. நாவல் நெடுகிலும் கல்யாண சம்பந்தமான அத்தனை பரிபாஷைகளும், கல்யாணங்களில் காணப்படும் எல்லாவித பாத்திரங்களும், ஹாஸ்யச் சம்பவங்களும், சம்பாஷணைகளும் எல்லாவற்றுக்கும் மேலாகச் சம்பந்திச் சண்டையும் நிறைந்து நாவல் படிப்பதற்கு மிகவும் சுவையாக இருக்கிறது. பஞ்சுவும் ராக்பெல்லர் சீமாட்டியும் வாசகர்கள் நெஞ்சில் நிலைத்து நிற்கும் பாத்திரங்கள். ஆங்கில தமிழ் மணிப் பிரவாள நடையில் ஆங்காங்கே 'பன்'களை உதிர்த்துக் கொண்டே செல்கிறார் 'பன்'களைக் கையாளுவதில் விற்பன்னராகிய சாவி.

வடஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்தவரும், 1916ல் பிறந்தவரும் இந்த நூலாசிரியருமான திரு சா. விசுவநாதன் (''சாவி'') இன்று தமிழ் நாட்டிலேயே பத்திரிகைத் தொழிலில் மிகுந்த அனுபவம் உள்ளவர். 'விசித்திரன்', 'சந்திரோதயம்', 'ஹனுமான்' முதலிய பத்திரிகைகளில் இருந்துவிட்டு 1937ல் 'ஆனந்த விகடனி'ல் சேர்ந்து 1940 வரையில் அங்கு பணியாற்றினார். 1942 ஆகஸ்டில் சத்தியாக்கிரகம் செய்து ஒன்பது மாதம் சிறைத் தண்டனை அனுபவித்தார். 1943-ல் 'கல்கி'யில் சேர்ந்து 1947 வரை அங்கு பணிபுரிந்து விட்டு 1947—1948 ல் சொந்தத்தில் 'வெள்ளிமணி' என்ற வாரப் பத்திரிகையை நடத்தினார். பிறகு சில ஆண்டுகள் அஞ்ஞாத வாசம் புரிந்து விட்டு 1955-56ல் மீண்டும் கல்கியில் உதவி ஆசிரியராக இருந்துவிட்டு 1957ல் 'ஆனந்தவிகடனி'ல் துணையாசிரியராகச் சேர்ந்து, இப்போது 1966 முதல் 'தினமணி கதிரி'ல் ஆசிரியராக இருந்து வருகிறார்.

'' 'வாஷிங்டனில் திருமணத்'தை நீங்கள் எப்படி எழுத நேர்ந்தது?'' என்று திரு சாவியைக் கேட்டேன்.

'' 'ஆனந்த விகடனி'லும், 'கல்கி'யிலும் நான் பேராசிரியர் கல்கியின் கீழ் பணி புரிந்தபோது அவர் என்னிடம் இயற்கையாக ஹாஸ்ய உணர்ச்சியை வளர்க்கும் வகையில் துக்கடாக்கள், ஹாஸ்யச் சித்திரங்கள், கட்டுரைகள் பல எழுதச் செய்து ஊக்கம் அளித்தார். ஒரு நீண்ட ஹாஸ்யத் தொடர் நாடகம் எழுத வேண்டும் என்ற ஆவல் இருந்தும் பல அலுவல்கள் காரணமாக அவரால் இயலவில்லை. ஒரு நாள் அவர் என்னைப் பார்த்து, ''ஹாஸ்யத் தொடர்கதை ஒன்று எழுதேன்'' என்றார். எனக்கு அப்போதிருந்த அனுபவக் குறைவு காரணமாக அந்த முயற்சியில் இறங்காமலே இருந்து விட்டேன்.''

''இதற்கு நீண்ட நாட்களுக்குப் பிறகு, தியாகய்யர் உற்சவத்தைப் பார்க்க வந்திருந்த வெளிநாட்டுக்காரர்கள் சிலர் காவிரியில் முகம் கழுவிக் கொண்டிருந்ததைப் பார்த்தபோது, 'ஒரு வருஷம் தியாகய்யர் ஆரா



தனையை வெளிநாட்டில் நடத்தினால் எப்படியிருக்கும் என்ற கற்பனை உதித்தது. இது மட்டுமல்ல. நான் எப்போதாவது ஹாஸ்யத் தொடர் எழுதினால் அது நம்முடைய கல்யாணப் பழக்க வழக்கங்கள் பற்றித்தான் இருக்க வேண்டுமென்று தீர்மானித்து வைத்திருந்தேன். ஒரு கல்யாணத்துக்குச் சென்றால், பந்திக்குக்கூட முந்திக் கொள்ளாமல், சாஸ்திரிகள் பேசுவது, சம்பந்திகள் சம்பாஷணை, உறவினர்களின் விமரிசனம் இவற்றையெல்லாம் காது கொடுத்துக் கேட்டு மனத்தில் பதிய வைத்துக் கொள்வேன். ஆகவே, வெளிநாட்டில் தியாகய்யர் உற்சவம் கொண்டாடும் கருத்து, வெளிநாட்டில் கல்யாணம் நடத்துவதாக மாறிவிட்டது! மையக் கருத்து கிடைத்துவிட்ட பிறகு எழுதுவதுதானா சிரமம்? பதினொரு வாரங்கள் தொடர்ந்து எழுதினேன்.''

''முதலிலே கல்யாணத்தை வாஷிங்டனில்தான் நடத்தத் தீர்மானித்தீர்களா ?''

''இல்லை. லண்டனில் வைத்துக் கொள்ள நினைத்தேன். ஆனால் ஜானவாஸ ஊர்வலம் போக லண்டன் வீதிகளும், பாலிகைவிட தெம்ஸ் நதியும் லாயக்கில்லை என்று தோன்றவே வாஷிங்டனைத் தேர்ந்தெடுத்தேன்.''

''சில எழுத்தாளர்கள், தங்கள் சரித்திர நாவலை எழுதுவதற்குமுன் நாவலின் நிலைக்களனை நேரில் பார்க்கப் போய் வருவதுபோல் நீங்கள் வாஷிங்டனுக்குப் போய் வந்தீர்களா ?''

''இல்லை. முன்பும் போகவில்லை. பின்பும் போகவில்லை. ஆனால் வாஷிங்டனிலேயே பல வருஷங்கள் வசித்தவரும் 'ஹிந்து' பத்திரிகையின் பிரதிநிதியுமான திரு பலராமன் அவர்களே வியக்கும் வகையில் அந்த நகரின் மூலை முடுக்கையெல்லாம் !புத்தகங்கள், வரைபடங்கள் மூலமாகவே நன்கு தெரிந்து வைத்துக் கொண்டேன். இதையே ஒரு புதுமை என்று கூறலாம். இது மட்டுமல்ல. பதினொரு அத்தியாயம் கொண்ட இந்த நாவலின் பெயரில் இருப்பதும் பதினொரு எழுத்துக்கள் ! கடைசி அத்தியாயம் வரை நாவலை யார் எழுதுகிறார்கள் என்று அறிவிக்கப்படவே இல்லை. நாவலாசிரியர் பெயர்கூடத் தெரியாத நிலையில், ஒரு நாவலுக்கு இப்படி ஓர் அமோக வரவேற்பு கிடைத்ததையும் ஒரு புதுமையாகவே கொள்ள வேண்டும். கல்கியின் ஆசையைக் கல்கி ஆசிரியராக இருந்த பத்திரிகையிலேயே நான் பூர்த்தி செய்ய நேர்ந்ததும் ஒரு புதுமைதான்!''

''நாவல் விகடனில் வந்து கொண்டிருந்த போது வாசகர்கள் அதை எப்படி வரவேற்றார்கள்?''

''நாவல் தொடர்ந்தபோதும், முடிவுற்ற போதும் எனக்கும் விகடன் காரியாலயத்துக்குமாகச் சேர்ந்து சுமார் இரண்டாயிரம் பாராட்டுக் கடிதங்கள் வந்தன. சௌ ருக்மிணி—சிர. ராஜகோபாலன் திருமணம் நடக்கவிருந்த திருமண இதழ் நாளான ஞாயிறன்று விகடன் காரியாலயத்துக்கு 167 திருமண வாழ்த்துத் தந்திகள் எக்ஸ்பிரஸ் டெலிவரியில் வந்து சேர்ந்தன ! சில அன்பர்கள் ஆசீர்வாதப் பணம்கூட மணியார்டரில் அனுப்பி வைத்தார்கள் ! தொடர்கதை முடிந்தவுடன் விகடன் மானேஜிங் டைரக்டர் திரு எஸ். பாலசுப்பிரமணியம் ஆசிரியர் — நண்பர் குழாமுக்குத் திருமண விருந்தே அளித்து ஜமாய்த்து விட்டார்.....''

''இந்த நாவலில் உங்களுக்குப் பிடித்த பாத்திரம் எது?''

''பஞ்சுவின் பாத்திரமும், பொடோமாக் நதியில் துணி துவைக்கும் அம்மாஞ்சி சாஸ்திரிகளின் பாத்திரமும்.''

''ராக்பெல்லர் சீமாட்டியைப் பற்றி ஏதாவது ரசமான தகவல்கள் உண்டா?''

''உண்டு. நான் முதலில் கென்னடி தம்பியின் பெயரையே உபயோகப்படுத்த நினைத்தேன். திரு பாலசுப்பிரமணியம்தான் 'வேண்டாம் ராக்பெல்லர் தம்பதி என்று போடுங்கள்' என்று பொருத்தமாக மாற்றினார்.''

'' 'வாஷிங்டனில் திருமணம்' இலக்கியப் படைப்பு இல்லை. அபாரப் புதுமையைப் படைத்துவிட்டோம் என்று மகிழ அதில் ஒன்றுமில்லை என்று சிலர் சொல்வது உங்களுக்குத் தெரியுமா ?''

''தெரியும். காதல், சோகம், வீரம் போன்ற ரஸங்களை எழுதத் தேவைப்படும் திறமையைவிட ஹாஸ்யம் எழுதக் குறைவான திறமை போதும் என்று யாரும் சொல்ல முடியாது. விகடனில், கல்கியின் 'தியாக பூமி'க்குக் கிடைத்த வரவேற்புக்கு அடுத்தபடியான அமோக வரவேற்பு 'வாஷிங்டனில் திருமணம்' என்னும் என்னுடைய ஹாஸ்யத் தொடருக்குத்தான் கிடைத்திருக்கிறது என்பதை இந்த இலக்கிய 'கிரிடிக்கு'களுக்குக் கூற விரும்புகிறேன்'' என்றார் சாவி.

''மகரம்''

[பிரசுரம் ; ஆனந்த விகடன், சென்னை-2 விலை : ரூ. 1.50.]





சிக்கல் சண்முகசுந்தரம் நாதசுரக் கலைஞன். திருவாரூர் மோகனாம்பாள் பரத நாட்டியக் கலையரசி. இவ்விரண்டு கலைகளுக்கும் போட்டி ஏற்படுத்தப்போக அது மேற்படி கலைஞர்களின் காதலில் முடிந்தது. இடையில் சில சுவையான சம்பவங்கள் — இருவருக்கும் ரயிலில் காதல், பிறகு மோதல், கடைசியில் சாதல் இல்லை, திருமணம்!

நாதசுரக் கலைஞர்களே வியக்கும் வண்ணம் சிவாஜி அக்கருவியை நிஜமாக வாசிப்பதுபோலவே ஒவ்வொரு கட்டத்திலும் நடித்துக் காட்டுவது பாராட்டுக்குரியது.

மோகனாம்பாளிடம் மனத்தைப் பறிகொடுத்தபோதும், அவள் வீட்டு வாசலில் சிங்கபுரம் மைனரின் கோச்சு வண்டியைக் கண்டு பொங்கிப் பொருமிய போதும் அவர் நடிப்பில் மெருகு பளிச்சிடுகிறது. கோபம், தாபம், கலையில் தமக்குள்ள திறமை காரணமாக ஏற்பட்டிருக்கும் பெருமிதம், தம் கலைக்கு இழுக்குக் கற்பிக்கும்போது ஏற்படும் சீற்றம் ஆகிய உணர்ச்சிகளை மிகவும் லாகவமாக வெளிப்படுத்தி யிருக்கிறார்.

பத்மினியின் நடனத்தைப் பற்றித் தனியாகச் சொல்ல எதுவும் இல்லை. திரையுலகில் அதற்கு என்றுமே தனி மவுசு உண்டு. சிவாஜிக்கு ஈடுகொடுத்து அருமையாக நடித்திருக்கிறார். கட்டங்களுக்கு ஏற்ற முகபாவங்களுடனும், துடிப்புடனும் நல்ல நடிப்பையும் சேர்த்துப் படத்தைப் பரிமளிக்கச் செய்திருக்கிறார். (கலப்படம் இல்லாமல் பரத நாட்டிய அபிநயங்களைப் பிடித்துக் காட்டியதோடு ஆபாச நடனங்களையும் சேர்த்துக் கொள்ளாமல் விட்டதற்காகப் பத்மினியைப் பாராட்ட வேண்டியதுதான்!)

# தில்லானா மோகனாம்பாள்



ஜில் ஜில் ரமாமணியாக வரும் மனோரமாவின் கன்னடப்பார்ட் ஆட்டங்கள் தியேட்டரில் 'விசில்' ஒலியையும், கரகோஷத்தையும் பலமாக எழுப்புகின்றன. மனோரமாவின் துணிச்சலைப் பாராட்ட வேண்டியதுதான்!

நாகேஷ் வந்தால் கூடவே கலகலப்பும் வந்துவிடுகிறது. ஒரு சதித் திட்டமும் உருவாகிறது. அவர் பேச்சும், பார்வையும், சிரிப்பும், அவர் சவடால் வைத்திதான் என்பதை நிரூபிக்கின்றன. மேலும் நாதசுர இசையும், நடனமுமாக ஒரே பாதையில் செல்லும் திரைக் கதைக்கு விறுவிறுப்பூட்டி அலுப்பில்லாமல் ஓட வைக்க உதவுகின்றன. சபாஷ் நாகேஷ்!

டி. எஸ். பாலையா, கே. சாரங்கபாணி இருவரும் 'தவுல்' வாசிக்கும் பாணியைத் தத்ரூபமாகக் காட்டுகின்றனர்.

மெச்சும் வண்ணம் சென்று கொண்டிருக்கும்

திரைக் கதையில் சில பொத்தல்கள் விழுந்து விட்டன. அழகர் கோவிலிலிருந்து மதுரைக்குச் செல்லும் மோகனாம்பாள் நடனக் குழுவினரின் மாட்டு வண்டியை மடக்கிய ரவுடிக் காட்சி அசடு வழிகிறது. மோகனாம்பாளைத் தூக்கிச் செல்ல மிட்டாதார் தன் அடியாளிடம் திட்டமிடுவதை மனோரமா மறைந்திருந்து கேட்கும் காட்சி நாடக மேடையை நினைவுக்குக் கொண்டு வருகிறது. மதன்பூரில், காதலில் தோல்வியடைந்த மோகனாம்பாள் தூக்குப் போட்டுக் கொள்ள முற்படும் காட்சியை நீட்டி, படம் பார்ப்பவர்களைப் பழி வாங்கியிருக்க வேண்டாம்!

பாராட்டுக்குரிய அம்சம்: காதலர்களை நந்தவனத்தில் சந்திக்க வைத்துக் கட்டிப் பிடித்து 'டூயட்' பாடி ஆட விடாதது; கொத்தமங்கலம் சுப்புவின் மூலக் கதையை மாற்றிக் குட்டிச்சுவராக்காமல் விட்டது ஆகிய இரண்டுந்தான்! ஏ. பி. நாகராஜன் பாராட்டுக்குரியவர்.

''மறைந்திருந்து பார்க்கும்'', ''நலந்தானா?'' என்னும் இரண்டு பாடல்களும் பத்மினியின் அபிநயத்தோடு உள்ளத்தில் இடம் பிடிக்கின்றன.

நாதமும், பரதமும், காதலும், நகைச் சுவையும், நல்ல நடிப்பும் மக்களை ஈர்க்க முடியுமானால் ''தில்லானா மோகனாம்பாள்'' நூறு நாட்கள் ஓடும்.

சிறப்புச்
சிறு கதை



# தரிசனம்

## ரா. கணபதி

"கையும் ஓடவில்லே; காலும் ஓடவில்லே. தலைக்குமேலே வேலே கிடக்கு. இந்தப் பிள்ளையாணு என்னமோ பி.ஏ. பரீட்சை தட்டுக்கெட்டுப் போறப்பலே [பாட புஸ்தகத்தை வெச்சண்டு ஒக்காந்திருக்கே!" என்று அலுத்துக் கொண்டாள் கௌரி.

"இதுதான் இந்த வீட்டிலே உதயராகம். எப்பப் பார்த்தாலும் உனக்கு எதுக்காவது பரபரத்துக் கொண்டே இருக்கணும். இப்ப அவன் பாடம் படிக்கிறதுனுலே என்ன கெட்டுப் போச்சு? இன்னிக்கு அவனுக்கு வீக்லி டெஸ்ட். அதை விட்டுட்டு அவன் என்ன செய்யணும்ங்கிறே?" என்று கடிந்து கொண்டான் கிருஷ்ணன்.

" சரி, அப்பாவும் பிள்ளையும் எக்கேடு கெட்டுப் போங்கோ! கோவில்லே அத்தனும் பெரிய அபிஷேகத்தை வெச்சண்டு இவன் வீக்லி டெஸ்டுக்குப் போவான்னு நான் கண்டேனு? சட்டுப்புட்டுன்னு குளிச்சுட்டு அபிஷேகக் காரியத்துக்கு ஏதாவது ஒத்தாசை செய்யப்படாதான்னு தோணித்து. சொன்னேன்" என்றாள் கௌரி.

"அபிஷேகத்துக்கும் அர்ச்சனைக்கும் சகலமும் கோயில்லேயே சித்தமா வெச்சிண்டிருப்பா. பால், தயிர், சந்தனம், பூ, நைவேத்தியம் எல்லாம் தேவஸ்தானத்திலேயே 'ரெடி' பண்ணிவிடுரு. நாம நேரத்துக்குப் போய் நின்னுப் போறும். நீ இறக்கை கட்டிண்டு பறக்கவே வேண்டாம்" என்றான் கிருஷ்ணன்.

இந்த வாதப் பிரதிவாதம் எதையும் காதில் போட்டுக் கொள்ளாமல் குழந்தை சாயி படித்துக் கொண்டிருந்தான் :

> விவேகாநந்தர் குழந்தையாக இருந்தபோது ஒரு முறை தமது பள்ளிக்கூட விளையாட்டு விழாவில் ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொண்டார். வெகு நன்றாக ஓடக்கூடிய அவர்தான் வெற்றி பெறுவார் என்று அனைவரும் எதிர் பார்த்தார்கள். அதற்கேற்றாற் போல் அவரும் பந்தயத்தில் கலந்து கொண்ட மற்ற மாணவர்களுக்கு மிகவும் முன்பு சென்று விட்டார். ஆனால் மைதானத்தை ஒரு சுற்றுச் சுற்றிக் கொண்டு பந்தயம் தொடங்கிய இடத்துக்கு அவர் திரும்பி வரும் சமயத்தில் திடீரென அவரது வேகம் குறைந்தது. அவருக்குப்பின் இரண்டாவதாக வந்து கொண்டிருந்த மாணவன் அவரை நெருங்கி விட்டான். அப்போதும் அவரது வேகம் அதிகரிக்கவில்லை; மாறாகக் குறையவே செய்தது. அம்மாணவன் அவரை முந்திக் கொண்டு விட்டான். பந்தயக் குறிக்கோலை நெருங்கியும் விட்டான். ஆனால் பின்தங்கிய விவேகாநந்தர் முன்னுக்கு வரவே இல்லை. கடைசியில் அந்த இன்னொரு மாணவனே ஓட்டப் பந்தயத்தில் வெற்றி அடைந்து பரிசும் பெற்றான்.
>
> ஓட்டத்தில் புலியான விவேகாநந்தர் ஏன் அப்படிப் பரிசைத் தவறவிட்டார் என்று அவரை அவரது நண்பர்கள் கேட்டனர். அதற்கு விவேகாநந்தர் : 'பரிசை எங்கே தவறவிட்டேன்? நானே பெறுவதைவிட அந்தப் பையன் பரிசைப் பெறுவதில் அதிக மகிழ்ச்சி காண்கிறேன். அவனுக்காகவே தான் விட்டுக் கொடுத்து, ஓட்டத்தின் வேகத்தைக் குறைத்துக் கொண்டேன். நான் பரிசு பெற்றிருந்தால் எனக்கு மட்டும் மகிழ்ச்சி கிடைத்திருக்கும். இப்



போது அவன் பெற்றதாலோ அவனுக்கும் மகிழ்ச்சி ; அவனைவிட அதிகமாக எனக்கும் மகிழ்ச்சி' என்றார்.

குழந்தை சாயி ராகம் போட்டு உணர்ச்சியோடு படித்த பாடம் தந்தை கிருஷ்ணனின் காதில் பாய்ந்தது.

விவேகாநந்தரைப் பற்றி இதுவரையில் கிருஷ்ணன் கேள்விப்பட்டிராத ஒரு சம்பவம் அது. பாடபுத்தக ஆசிரியர் ஒரு வேளை தமது கற்பனையைத்தான் விவேகாநந்தர் மீது சார்ந்திருக்கச் செய்தாரோ என்னவோ? எப்படியாயினும் தியாகநிதியான விவேகாநந்தருக்கு அளவெடுத்துத் தைத்தாற்போல் மிகவும் பொருந்தியது அந்தக் கதை.

இதைப் பற்றி வியந்த கிருஷ்ணனுக்கு இன்னொரு ஓட்டப்பந்தயக் கதையும் நினைவுக்கு வந்தது. அது மிக மிகப் பழைய கதை. உலகைச் சுற்றி ஓட்டப் பந்தயம் நடத்தி அதில் வெற்றிபெறுவோருக்கு மாதுளம் கனி தருவதாகப் பரமேசுவரன் சொன்ன கதை அது. விக்நேசுவரன் தாய் தந்தையரையே பிரபஞ்சமாகக் கருதிப் பிரதட்சிணம் செய்து கனியைப் பெற்றான். ஏறுமயிலேறி அண்டத்தை வலம் வந்த கந்தன் தோல்வியுற்று, தோல்வியினால் கோபமுற்று, ஆண்டியாகிப் பழனி மலையை அடைந்தான்.

விவேகாநந்தர் விலகி நின்று வெற்றியைப் பிறருக்குத் தந்து மகிழ, வேலனோ விநாயகன் வெற்றி பெற்றதில் கோபமுறுவானேன் ? கிருஷ்ணனுக்குப் புரியவில்லை.

இன்று அந்த வேலனுக்குத்தான் அவன் விமரிசையாக அபிஷேகம் செய்து வைக்கப் போகிறான். தனது பொருளாதார நிலையை நினைக்காமல் ஒரு பெரும் தொகையைக் கட்டணம் செலுத்தி சுவாமிக்கு அபிஷேகம் செய்கிறான். அந்த அபிஷேகத்துக்குப் பிறகு சுவாமிக்கு விசுவரூப அலங்காரம். அது அந்தக் கோயிலின் தனிச் சிறப்பு.

விசுவரூப அலங்காரம் பெறும் சுப்பிரமணிய மூர்த்தி சிறியதுதான். ஆனால் அதன் பாதத்தின் அடியிலுள்ள யந்திரத்தை மறைத்துத் தழையத் தழைய ஆடை உடுத்தியும், சிரசில் மிகப் பெரிய மகுடம் சூட்டியும் அந்தச் சிறிய மூர்த்தியையே விசுவரூபம் எடுத்ததுபோல் பெரிதாக அலங்கரித்து விடுவார்கள். இரண்டே கைகள் கொண்ட மூர்த்திக்குப் பெரிதாகப் பத்து வெள்ளிக் கைகளையும் சார்த்திவிடுவார்கள். அதுவும் எவ்வாறோ அந்தச் சிறிய மூர்த்திக்கு அற்

புதமாகப் பொருந்தும். 'ஸிம்மெட்ரி'யும் 'ப்ரபோர்ஷனு'ம் நுணுக்கமாகப் பார்ப்பவர்களுக்கும்கூடச் சிறிய பிம்பத்தைப் பெரிதுபடுத்தியது போல் தோன்ருமல், இயல்பாகவே அந்த விக்கிரகம் அவ்வளவு பெரிதாக இருப்பது போலத்தான் தோன்றும். அப்படி ஓர் அற்புதம் அந்த ஊர் விசுவரூப சேவை.

ஐயனுக்கு அந்தச் சேவை செய்து வைப்பதில் கிருஷ்ணனுக்கு ரொம்பவும் பெருமை. ஆனல் இப்போது குழந்தை சாயி விவேகாநந்தர் பாடம் படித்தவுடன், முருகனின் ஓட்டப் பந்தயத் தோல்வி கிருஷ்ணனின் சிந்தனையில் இடறிற்று.

வைராக்கியத்தின் மீது துறவியாகப் போவதுதான் விசேஷம். பழம் கிடைக்கவில்லை என்ற கோபத்தில் அல்லவா சுவாமி பழனியாண்டித் துறவியானன்? இச்சம்பவத்தையும் விவேகாநந்தர் விலகி நின்று இன்னொருவனுக்கு வெற்றி வாங்கித் தந்ததையும் கிருஷ்ணனின் அறிவு எடை போட்டுப் பார்த்தது. கத்திரிக்காயை நிறுத்துப் பார்க்கும் தராசில் யானையை எடை போட்டால் தராசுதான் முறியும். இது கிருஷ்ணனுக்குத் தெரிந்திருந்தாலும் கிருஷ்ணனின் அறிவுத் தராசு யானையை எடை போடத்தான் செய்தது.

கௌரியின் குரல் அந்த எண்ண ஓட்டத்துக்குக் கரை கட்டியது.

"சொன்னல் நான் பொல்லாதவள். அவசரக்காரி, பரபரப்புக்காரின்னு பேர் வைப்பேள். இருந்தாலும் சொல்லாம இருக்க முடியறதா? கோவில்லேயே எல்லாம் 'அரேஞ்ச்' பண்ருன்னுதான் பங்கஜத்து ஆத்துலே எல்லாரும் கையை வீசிண்டு போருள். அப்புறம் அங்கே போன குருக்கள், "அபிஷேக சாமான்தான் எங்க பொறுப்பு; நைவேத்தியம் — தினைப் பொங்கல், சுண்டல்— இதெல்லாம் நீங்க பண்ணிக் கொண்டு வரல்லியா?"ன்னுராம். நீங்க போகாட்டாலும், இந்தச் சாயியையாவது குருக்கள் வீட்டுக்கு அனுப்பி — விவரமாத் தெரிஞ்சுண்டு வரப்படாதா?" என்ருள் கௌரி.

"எல்லாம் சாங்கோபாங்கமாக முன்னுடியே கேட்டுண்டாச்சு. அபிஷேகம், அர்ச்சனை, நைவேத்தியம் — எல்லாத்துக்கும் ஸப்ஜாடா கோவில்லேயே ஏற்பாடு பண்ணிடரு. நாம பத்து மணிக்கு அங்கே போய் நின்னப் போறும். அப்படியே போற வழியிலே சாயியை ஸ்கூல்லே விட்டுடலாம்" என்ருன் கிருஷ்ணன்.

"ஏன்ன! இந்த ஒரு வீக்லி டெஸ்டுக்கு அவன் போகாட்டாத்தான் என்ன? ஆண்டவனுக்கு இப்பேர்ப்பட்ட அபிஷேகம் பார்க்கக் கொடுத்து வைக்க வேண்டாமா?" என்று கௌரி சொன்னள்.

"அவன் பரீட்சைக்குப் போகாம இருக்கிறதிலே எனக்கொண்ணும் ஆட்சேபணை இல்லே. உன் பிள்ளைதான் பிடிவாதம் பிடிக்கிறன்... ஏண்டா பயலே, இது வெறும் கிளாஸ் டெஸ்ட்தானே? நான் வாத்தியார்கிட்டே சொல்றேன். நீ கோயிலுக்கு வாயேன்" என்ருன் கிருஷ்ணன்.

"மாட்டேம்பா" என்று சிணுங்கினன் சாயி. "இந்த டெஸ்ட் எழுதாட்டா எனக்குப் பிரைஸ் கிடைக்காமப் போயிடும்பா" என்ருன்.

"ஏண்டா, முழுப் பரீட்சைக்குத்தானே பிரைஸ் கொடுப்பா? கிளாஸ் டெஸ்டுக்கா பிரைஸ் தருவா? புளுகாம, சுவாமி தரிசனத்துக்கு வா. முழுப் பரீட்சையிலே முதல்லே வரத்துக்கு ஆண்டவன் அநுக்கிரகம் பண்ணுவான்" என்ருள் கௌரி.

"நான் ஒண்ணும் புளுகல்லே அம்மா!" என்ற குழந்தையின் முகம் 'ஜிவ்'வென்று சிவந்தது. "நீ வேணுமான ஸ்கூல்லே விசாரிச்சுப் பாரு. வருஷம் முழுக்கப் படிக்காம விளையாடிண்டு இருந்துட்டு, முழுப் பரீட்சையின் போது மட்டும் கடம் அடிச்சு எல்லாரும் பாஸ் பண்ணிடருங்கறதுக்காக, எல்லா வீக்லி டெஸ்டுக்குமாச் சேர்த்துப் பிரைஸ் வெச்சிருக்கா. இதுதான் இந்த வருஷம் கடைசி டெஸ்ட். இதுவரை நடந்த முப்பது டெஸ்டிலே, பதினஞ்சு டெஸ்டிலே நான் ஃபஸ்ட். பாக்கிப் பதினஞ்சுலே முரளி ஃபஸ்ட். இதுலே நான் ஃபஸ்ட் வந்தாத்தான் பிரைஸ் எனக்கு வரும். இல்லாட்டா முரளி அடிச்சுண்டு போயிடுவான்" என்ருன்.

அதன் பிறகு கௌரியோ கிருஷ்ணனே சாயியை வற்புறுத்தவில்லை.

ஃ ஃ ஃ

அபிஷேகம் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. அந்தச் சிறிது காலத்துக்கு அங்கு திரண்டிருந்த பக்தர்களின் மனத்திலிருந்து அழுக்குகளையெல்லாம் அழித்து விட்டுப் பரமசுத்தமாகக் குளிப்பாட்டி விட்டாற் போலிருந்தது. 'முருகா, முருகா' என்ற கோஷம் சந்நிதியெங்கும் தாபத்துடன் குமுறிக் கொண்டிருந்தது.

விசுவரூப அலங்காரம் செய்வதற்காகத் திரை போட்டிருந்தார்கள். அலங்காரத்துக்கு நீண்ட நேரம் ஆனபடியால், சுவாமிக்கு வெகு அருகில் புழுக்கத்தில் நின்று கொண்டிருந்த கிருஷ்ணன் சிறிது காற்ருட இருந்துவிட்டு வரலாம் என்று கிளம்பினன். கர்ப்பக்கிருஹத்திலிருந்து வெளியே வந்ததும், வியர்த்திருந்த உடலில் காற்று பட்டுச் சில்லென்று பரம சுகமாக இருந்தது. இருந்தாலும் அவனுடைய மனப் புழுக்கம் மட்டும் நீங்கவில்லை. 'அண்ணனுக்குக் கனி கிடைத்ததில் முருகன் ஏன் அவ்வளவு ஆத்திரமடைந்து ஆண்டியாக வேண்டும்? ஆசை மங்கித்தான் துறவு பிறக்க வேண்டுமேயன்றி, ஆசாபங்கத்தின் மீது பிறக்கும் துறவு துறவாகுமா?'

"ஆண்டவனுக்கு அபிஷேகம் பண்றது நீங்கதானுங்களா?" என்று அவனைக் கேட்டார் பக்தர் ஒருவர்.

"ஆமாம்!" என்ருன் கிருஷ்ணன்.

"பாக்கியசாலி! எம்பெருமானையே குளிரப் பண்ணுறீங்களே!" என்ருர் பக்தர்.

கிருஷ்ணனின் 'மூட்' வேறு விதமாக இருந்ததல்லவா? "இதுவும் ஒரு விதத்திலே அஞ்ஞானம்தான். நாம் செய்யற அல்ப அபிஷேகத்தினலேயும் அலங்காரத்தினலேயும் தான ஆண்டவன் மனசு குளிரணும்?

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்




அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.



காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






# காஷ்மீர் பொக்கே

**ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்**

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

CB.G.21 TAM.

அவனுக்கு இது என்ன பொருட்டு?'' என்று வாய் வேதாந்தம் பேசினான்.

''அதென்னங்க, அப்படிச் சொல்லிட்டீங்க? இப்படி அபிஷேகமும் அலங்காரமும் பண்ணுத்தானுங்களே நம்ப மனம் குளிர்ந்து போறது? அதுதான் அவனுக்கும் குளிர்ச்சி. அலங்காரம் பண்ணிக்கறதிலே அவனுக்குச் சந்தோஷம்இல்லேதானுங்க. ஆனா அந்த அலங்காரத்தைப் பார்த்து நாம படற சந்தோஷத்துலே அவனே இருக்கான்'' என்றார் பக்தர். தொடர்ந்து கூறினார்:

''ஆண்டவன் விசுவரூபம் எடுத்ததுகூடத் தன் பெருமையைக் காட்டிக்கறதுக்காக இல்லீங்க. அந்தப் பெருமையைப் பார்த்தவங்களுக்கு அறிவு தெளிஞ்சதுங்க. அந்தத் தெளிவுதான் அவனுடைய உண்மையான விசுவரூபம். அவன்கருணையைப் பாருங்க: முதல்லே அவனைப் புரிஞ்சுக்காமச் சண்டைக்கு வந்த தேவங்களுக்கு விசுவரூபம் காட்டினான். அப்புறமும் தன் விரோதியான சூரனுக்கு விசுவரூபம் காட்டினான். கிருஷ்ணன் கதையைப் பார்த்தாலும், பக்தன் அர்ஜுனனுக்கு விசுவரூபம் காட்டறதுக்கு முன்னாடியே விரோதி துரியோதனனுக்குத்தான் முதல்லே விசுவரூப தரிசனம் கெடச்சுது!''

கிருஷ்ணனுக்கு உள்ளம் குறுகுறுத்தது. முருகனின் துறவில் சந்தேகிக்கிற தனக்கு அவனது விசுவரூப தரிசனம்!

ஆலாட்சமணி டாண் டாண்என்றுஒலித்தது.சிறிய மணிகள் பல கிணி கிணி என்று நாதம் எழுப்பின.

திரை விலகியது.








''சாமி, சாமி மறைக்குது. சித்தே விலகிக்கோங்கோ சாமி!'' என்று பல குரல்கள் பரபரத்தன.

கிருஷ்ணனின் வாழ்வில் அது ஒரு மகத்தான விநாடி. அவனது அத்தனை ஆண்டு வாழ்வையும் விடப் பெரிது அந்த ஒரு விநாடி. தன் சக்திக்கும் மீறித் திரவியம் செலவிட்டு அவன் ஆண்டவனுக்கு விசுவரூபாலங்காரம் செய்திருக்கிறான். அந்தத் தரிசனத்தை அவன் காணச் செல்கையில் அவனை விலகி யிருக்கும்படி குரல்கள் எழும்புகின்றன! 'சற்று விலகியிரும் பிள்ளாய்' என்ற பாடல் கிருஷ்ணன் நினைவில் வந்தது. விவேகானந்தர் விலகியதும் உணர்ச்சி வெள்ளமாக மனத்தில் நிரம்பியது. அவ்வளவுதான்! அதே விநாடி ஒதுங்குவதன் பெருமையை அவன் உணர்ந்துவிட்டான். சுவாமிக்கும் பக்தர்களுக்கும் இடையே இருந்து விலகி, தான் இருந்த இடத்தில் அப்படியே ஒரு திரும்புத் திரும்பி, துவாரபாலர் மீது சாய்ந்து கொண்டான்.

எல்லோரும் ஆண்டவனின் விசுவ ரூபத்தை—விசுவரூபம் பெறும் கர்ப்பூர தீபாராதனையை — கண்டனர். விசுவ ரூபத்துக்கு ஏற்பாடு செய்தவனே, ஆண்டவனைக் காணவில்லை. ஆண்டவனைக் காணும் அடியார்களைக் காண்கிறான். கர்ப்பக்கிருஹ வாசற்படியில் கால் நுனியை மட்டும் ஊன்றிக் கொண்டு துவாரபாலகர்மீது தன் உடலைச் சாய்த்து, அவன் மற்றப் பக்தர்கள் தரிசனம் செய்யச் சௌகரியம் செய்து விட்டான்! தான் தரிசனத்தைத் தியாகம் செய்து விட்டான்

இதோ, விசுவரூப அலங்காரம் பெற்ற சுவாமிக்குத் தீபாராதனை நடக்கிறது.

''கிருஷ்ணன் ஸார்! சமயம் பார்த்து எங்கே போனேள்? முன்னாடி வாங்கோ, வாங்கோ'' என்று கர்ப்பக்கிருஹத்திலிருந்து பெருங் குரலெடுத்துக் கூவினார் குருக்கள்.

கிருஷ்ணன் முண்டியடித்துக் கொண்டு முன்னேறப் பார்த்தான். அதற்குள் கருவறைக்குள் வேறு கூட்டம் புகுந்துவிட்டது. தான் அங்கு போவதற்கில்லை என்பதால் துவாரபாலரை ஒட்டி, கருவறை வாசலருகே படியின் மீது நின்று விட்டான் கிருஷ்ணன்.

அப்படியானால் அவன் விசுவரூப தரிசனம் பார்க்கத்தான் இல்லையா ?

அதெப்படி அவ்வாறு சொல்ல முடியும்?

அவனது உள்ளத்தில் இப்போது நிரம்பியிருக்கிறதே, பேரானந்தம் — விசுவரூபம் காணாவிடில் அந்த ஆனந்தம் எப்படி உண்டாக முடியும் ?

ஆம், அவன் விசுவரூபம் கண்டு விட்டான். ஆண்டவனின் விசுவரூபத்தைக் காண்கிறவர்களைக் காண்கையில் அவனும் அந்த அற்புத தரிசனம் பெற்று விட்டான் ! அவர்கள் அத்தனை பேருடைய முகத்திலும் அப்போது மலர்ந்திருந்த மகிழ்ச்சியே தீபாராதனையாக இருந்தது !

# ஓவல்டின்

## புரதப் பொருள், வைட்டமின்கள், ஃபாஸ்பேட்டைடுகள், எடுகட்டிய புத்தம்புதிய பால், முதிர்ந்த பார்லி மால்ட் ஆகியவை வளப்பமாக அடங்கியது.

உடல்நலமும், வலிமையும், தென்பும்
உருப்பெற இவை யாவும் உங்களுக்குத் தேவை



உடல்நலமும், வலிமையும், தென்பும் உருப்பெற உங்களுக்கு இன்றியமையாத எல்லா ஊட்டப்பொருள்களும் செறிந்தது ஓவல்டின். பாலுடன் ஓவல்டின் சேர்க்கும்போது, நீங்கள் சேர்ப்பது இன்சுவை மட்டுமல்ல —உடல்நலம், வலிமை, தென்பு.

அருந்துங்கள் இன்சுவைமிக்க **ஓவல்டின்**

இன்றும்.. நாளையும்... என்றும்!






ASP/JI/22/Tam.

தீபமா? தீபம் கூட அல்லவா செய்யும்? இங்கோ குளிர்ச்சியாக இருக்கிறதே! மற்றவர் மனம் குளிர்வதிலேயே கிருஷ்ணனின் மனம் குளிர்ந்தது. அதே சமயத்தில், 'நம்ப மனம் குளிர்ந்து போறத்துலேதான் அவனுக்கும் மனம் குளிருது' என்று பக்தர் சொன்னது நினைவில் ரீங்காரமிட்டது.

ஆஹா, அப்படியானல் முருகனும் இப்போது என்னைப் போலவே இந்தப் பக்தர்களிடம் விசுவரூப தரிசனம் கண்டு கொண்டிருப்பானு? அவன் விசுவரூப தரிசனம் தருவதாக இவர்கள் காண, அவனே இவர்களிடமே விசுவரூப தரிசனம் கண்டு கொண்டிருப்பானு ?

அந்த ஒரு விநாடியில் புரியாத புதிர்களெல்லாம் மடலவிழ்ந்து விழுந்தன.

ஆம், முருகன் விசுவரூப தரிசனம் அளித்தவன் மட்டுமல்ல. விசுவரூப தரிசனம் செய்தவனும் ஆவான். கனிக்காக உலகை வலம் வந்தானே, அப்போது அந்த விசுவரூப தரிசனத்தைத்தான் அவன் செய்தான்.

ஆண்டவன் என்று ஒருவன் இருந்தால் அவனை ரசிக்க அடியார் என்று இருக்கிறார்கள். கலைஞன் என்று ஒருவன் இருந்தால் ரசிகன் என்று ஒருவன் இருக்கிறன். இருவரும் சேர்ந்தால்தான் முழுமை. இறைவன் இரண்டுமாக முடியும்.

விசுவரூபமாகவே இருந்த வேலன், உலகைப் பிரதிட்சணம் செய்து விசுவரூபத்தைக் காணும் ரசிகனும் ஆனன்.

அந்தத் தரிசனம் ஆனபின் கயிலை வந்து தாய் தந்தையைக் கண்டான். விசுவத்துக்குள் அவர்களைக் கண்டு வலம் வந்த வேலன், விசுவத்தை அவர்களுக்குள் கண்ட வேழமுகனைப் பார்த்தான். அவர்களது அன்பு முழுவதும் அவனிடமே பூரணமாகச் செல்ல வேண்டும் என்பதால், அதற்குத் தான் ஒரு போட்டியாக இராமல் விலகினன். மற்றவர்கள் தெய்வத்துக்காக உலகைத் தியாகம் செய்வார்கள். தெய்வ முருகனே மகாதேவனையும் தேவியையுமே தியாகம் செய்துவிட்டு உலகுக்கு வந்து விட்டான்.

கனியை ருசிக்கும் ரசிகனுக ஆனர் கணநாதன். கனியாகவே ஆகி, 'பழம் நீ' எனப் பரமனுல் பாராட்டப்பட்டான் முருகன்.

இதோ, இங்கே பக்தர்கள் விசுவரூப தரிசனம் செய்கிறர்கள். உள்ளே கர்ப்ப கிருஹத்தில் விசுவரூப அலங்காரம் பெற்ற இறைவன் அந்த பக்தர்களைப் பார்க்கிறன். இறைவனைப் போலவே பக்தர்களைப் பார்க்கும் கிருஷ்ணன் விசுவரூப ரசிகர்களை ரசிப்பதில் தானே விசுவரூபமானதுபோல் ஆனந்தமயமாகி விட்டான்.

ஃ ஃ ஃ

"அடாடா, கண்ட பேய்க் கூட்டத்துக்காக நீங்க போய் ஒதுங்கிட்டேளே! இந்தாங்கோ, விபூதி!" என்று கூறியபடி குருக்கள் கிருஷ்ணனை நெருங்கினர்.

விபூதியை வாங்கிக் கொள்ள அவன் கைநீட்டிய போது, கிழே இருந்து இரு குட்டிக் கைகள் மேல் நோக்கி வந்தன.

"யாரடாது வாண்டு, குருக்களே கைநீட்டறது !" என்றார் குருக்கள்.

அந்த வாண்டு யார் என்று பார்த்தவுடன் கிருஷ்ணனுக்கு ஆச்சரியமாயிற்று.

"ஏண்டா சாயி, அதுக்குள்ளேயா டெஸ்ட் எழுதிட்டு இங்கே வந்துட்டே?" என்றான்.

"இல்லே, மொதல்லேருந்தே இங்கேதான் இருக்கேன். நீங்க என்னை ஸ்கூல்லே விட்டுட்டுக் கிளம்பின உடனேயே நானும் ஒங்க பின்னலே வந்துட்டேன்" என்றான் சாயி, விபூதியை நெற்றியில் அப்பிக் கொண்டே.

"ஏண்டா, பரீட்சையை விட்டே ? இப்போ முரளிக்குன்னு பிரைஸ் கெடைக்கும்? ஏன் இப்படிப் பண்ணினே?" என்றான் கர்ப்பக் கிருஹத்திலிருந்து வெளியே வந்து சேர்ந்த கௌரி.

"ஏன் இப்படிப் பண்ணினே?" என்ற அதே கேள்வியைக் கிருஷ்ணனும் கேட்டான்.

---

## ஈ வந்தது !

சென்னையில் இருந்த தமிழ்ப் புலவராகிய ராமாநுஜ கவிராயரை ஒருமுறை பழனி மாம்பழக் கவிராயர் சந்தித்தாராம். அப்போது ராமாநுஜ கவிராயர் தம் பெயரைச் சொல்லும் போது இராமாநுஜ கவிராயர் என்று சொன்னர். மாம்பழக் கவிராயரோ வடசொற்களை அப்படியே



வைத்துப் பாடுபவர்..... இராமாநுஜர் என்பதைவிட ராமாநுஜர் என்று சொல்வதையே அவர் விரும்புறவர். எனவே, "அந்த ஈ ஏன் வந்தது ?" என்று கேட்டார். இராமாநுஜக் கவிராயர் உடனே சொன்னர். "மாம்பழத்தைத் தேடி வந்தது."

தாத்தா சொல்லியதைக் கேட்டு எழுதியவர்:

அ. ஐயப்பன்

---

இதற்குள் காற்றிலே கோலம் கலைவதுபோல் விசுவரூபம் கலைந்துவிட்டது! மனிதகபாவம்!

பேசாமலே இருந்த பிள்ளையிடம் மீண்டும் அதட்டிக் கேட்டான் : "ஏண்டா, இப்படிப் பண்ணினே?"

"விவேகாநந்தர் பாடம் படிச்சதாலேதான்" என்று தட்டுத் தடுமாறிக் கூறிய சாயி, தன் வயதுக்கு மீறிய உணர்வை வெளியிட்டதால் வெட்கத்துடன் வெளியே பராக்குப் பார்க்கலானன்.

அவனுடைய ஈர நெற்றியில் இட்டுக் கொண்டிருந்த விபூதி இப்போதுதான் காற்றில் பனிச்சென்று காய்ந்து ஒளிவிட்டது. கிருஷ்ணனின் மனத்தில் மங்கலாக இருந்த ஏதோ ஒன்றும் மங்கலமாக ஒளி வீசிற்று.

தரிசனம் பூர்த்தியாயிற்று !






அண்மையில் வெளியான எம். ஜி. ஆர். நடித்த ஒருசில படங்கள் வெறும் பொழுதுபோக்குப் படங்களாகவும் ஆட்ட பாட்டப் படங்களாகவும்தான் அமைந்தனவே தவிர, தரமான படங்களாக அமையவில்லை.

எம். ஜி. ஆர். ஒரு படத்தில் ஒரு நல்ல கருத்தைக் கூறுகிறார் என்றால் அதைப் பின்பற்றி நடக்க அவரது எண்ணற்ற ரசிகர்கள் தமிழகத்திலும் பிற மாநிலங்களிலும் நிறைய இருக்கிறார்கள். எம். ஜி. ஆர். தம் சொந்த வாழ்க்கையிலும் படங்களிலும் நடிப்புக்காகக் கூட மது அருந்தாமலும், புகை பிடிக்காமலும் இருக்கிறார் என்பதற்காக இன்று நம் நாட்டில் எத்தனையோ எம். ஜி. ஆர். ரசிகர்கள் அவரைப் போலவே மது அருந்தாமலும், புகை பிடிக்காமலும், இருந்து வருவதை நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம்.

ஒரு படத்தின் வெற்றி அல்லது தோல்வியைத் தனிப்பட்ட ஓர் எம். ஜி. ஆரால் மட்டும் நிர்ணயிக்க முடியாது என்பது உண்மைதான். இருப்பினும் கூடியவரை நல்ல கதையுள்ள படங்களில் நடித்து வழக்கம் போல் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் நல்ல கருத்துக்களைக் கூற முன் வருவாரானால் அவரது புகழ், பெருமை, பண்பு ஆகியவை இன்னும் மக்களிடம் நன்றாக உயரும் என்பதில் சந்தேகமே இல்லை.

திருவனந்தபுரம்
5—7—68 எஸ். எஸ். மணி

## " அம்மா ஒரு மலை "

திரு டி. எஸ். கோதண்டராமன் அவர்கள் எழுதிய "அம்மா ஒரு மலை" உண்மையிலேயே கதைகளுள் ஒரு மலை.

சிங்காநல்லூர் பெ.க. தங்கவேலு
25—7—68

## புதுமை எழில்!

அமெரிக்காவுக்குச் சென்று வந்த தமிழ் அறிஞர்கள் பலர் விவரித்துள்ள அனுபவங்கள் எல்லாவற்றையும் விடக் கல்கியின் மைந்தன் கி. ராஜேந்திரனின் அனுபவங்கள் புதுமை எழிலோடு பொலிகின்றன. எழுத்தில் எளிமையும், எண்ணங்களில் பசுமையும் இழையோடுகின்றன. இக்கட்டுரைத் தொடர் நூல் வடிவில் மலர்வதாக.

புனா — 11 "தேவிமைந்தன்"
18—7—68

## அரிசி கடத்தல்!

காஞ்சிபுரம், செங்கற்பட்டு பகுதிகளிலிருந்து சென்னைக்கு ஏராளமான அரிசி மூட்டைகளை ரயில் வண்டிகள் மூலம் கடத்துகின்றனர். இது தினசரி நடக்கும் ஒரு நிகழ்ச்சி. ஆண்களை விடப் பெண்களே அதிகமாக அரிசி மூட்டைகளை அடுத்தடுத்து எடுத்துச் செல்கின்றனர். தாம்பரம், கோடம்பாக்கம், ஆகிய இரண்டு இடங்களிலும் அதிகமாக மூட்டைகள் இறங்குகின்றன. கோடம்பாக்கத்தில் நிற்காத வண்டிகளை 'அபாயச் சங்கிலி'யைப் பிடித்து இழுத்து நிறுத்துகின்றனர். இதனால் இரயில்வே இலாக்காவுக்கு மட்டுமின்றிப் பொதுமக்களுக்கும் பல வகைகளில் சிரமமும், நஷ்டமும் ஏற்படுகிறது. இதையெல்லாம்விட அருவருக்கத் தக்க விஷயம் என்ன வெனில் குஷ்டரோகிகள் வேறு அதிக அளவில் அரிசியைச் சென்னைக்கு எடுத்து வருகின்றனர். சிறு பையன்களும் பெண்களும், பிரயாணிகளும் இவர்களுடன் தினமும் பயணம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் இருப்பதால் அனைவருக்கும் இவ்வியாதி பரவ ஏதுவாகலாம். தமிழக அரசு உடனடியாகத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

செங்கற்பட்டு.
4—7—68 "பருவச்சீட்டுப் பயணி"

## விவேகமற்ற செயல்!

இலங்கை—இந்திய ஒப்பந்த அமுலின்படி இங்கிருந்து இந்தியாவுக்கு ஐந்து லட்சம் மக்கள் அனுப்பப்பட விருக்கின்றனர். ஈழ நாட்டைப் பொறுத்தமட்டில், "உழைப்பு" என்ற சொல்லுக்குத் தங்கள் வியர்வை என்ற மையினால் அகராதி எழுதிய தென்னாட்டுத் தமிழர் பரம்பரையினர் தாங்கள் வளமாக்கிய நாட்டை விட்டு வெளியேறுகின்றனர்.

இலங்கைத் தோட்டங்களில் பணி புரியும் தமிழ்த் தொழிலாளர்களில் இருபது சதவிகிதமானோர் இலங்கையின் பதிவுப் பிரஜைகளாக இருக்கின்றனர். இவர்களில் சிலர், தங்களது இலங்கைப் பிரஜாவுரிமையை ரத்து செய்துவிட்டுத் தாங்களும் இந்தியா செல்ல ஆயத்தமாகின்றனர். இது தமிழக அரசின் இன்றைய நிலையைப் பொறுத்தமட்டில் முற்றிலும் வரவேற்கப்பட முடியாத விஷயம். பிரஜாஉரிமை பெற்றுள்ளவர்கள் தங்களது பிரஜா உரிமையை ரத்து செய்து விட்டு இந்தியா செல்ல யத்தனிப்பது, தமிழக அரசுக்கு மேலும் சிரமத்தை உண்டுபண்ணும்; இது விவேகமற்ற செயலுமாகும்.

இலங்கை
9—7—68 எஸ். இரத்தினஜோதி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

# தலைவலியா?

## போக்க ஒரே ஒரு

## ஸாரிடான் போதும்

'ரோஷ்'



## அது உங்களை புத்துணர்ச்சியுடன் திகழச் செய்யும்!

### அதுவே ஸாரிடானின் தனிச் சிறப்பு

வலிக்கு நீங்கள் சாப்பிட வேண்டியது ஸாரிடான் தான். வலியை விரைவில் போக்க ஸாரிடானுக்கு ஈடான இதர வழிகள் இருக்கலாம். ஆனால் வலியுடன் கூடவே நரம்புகளில் அனுபவமாகும் அழுத்தத்தையும் போக்கி தெம்பும் உற்சாகமும் ஊட்டுவதற்காக பிரத்தியேக முறைப்படி தயார் செய்யப்படுவது ஸாரிடான் ஒன்று மட்டுமே. ஆகவேதான் ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டதும் வலி நீங்கி உங்கள் மூளை சுறுசுறுப்பாக வேலை செய்ய ஆரம்பிக்கிறது, வேலையில் உற்சாகம் ஏற்படுகிறது, சிடு மூஞ்சி போய் சிரித்த முகத்துடன் திகழ முடிகிறது. ஸாரிடான் அளிக்கும் நிவாரணம் நிலையானது. எப்பொழுதும் ஸாரிடான் உங்கள் கைவசம் தயாராய் வைத்திருங்கள்!

## ஸாரிடான் சாப்பிடுங்கள்



பல்வலி, உடல்வலி, அசௌகரியமான நாட்களில் வலி, இவற்றிற்கும் ஸாரிடான் கைமேல் பலன் தருகிறது. குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை மட்டுமே போதும்.

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிமிடெட்

VT 7048

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# ஸிம்ஸன் கம்பெனியின்

## பெர்கின்ஸ் P6V டீசல் ரீபில்ட் என்ஜின் திட்டம்



ஸிம்ஸன் பாக்டரியிலேயே உருவான ரீபில்ட் என்ஜின் பழைய என்ஜினுக்கு பதிலாக கொடுக்கப்படும். இந்த திட்டத்தின் கீழ் பெர்கின்ஸ் என்ஜின்களை உபயோகிப்பவர்கள் அனைவரும் அவர்களுடைய பழைய என்ஜின்களை எத்தனை தடவை வேண்டுமானாலும் எப்பொழுது வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம்

### மேற்படி ரீபில்ட் திட்டத்தின் அனுகூலங்கள் பின் வருமாறு:

1. ரீபில்ட் என்ஜின்களுக்கு புது என்ஜினுக்குள்ள எல்லாவிதமான உத்தரவாதமும் உண்டு.
2. ரீபில்ட் என்ஜினை குறைவான விலையில் பெறவும் உதவுகிறது.
3. எப்பொழுது வேண்டுமானாலும் விரும்பிய சமயத்தில் கால தாமதமில்லாமல் பழைய என்ஜினை மாற்றிக் கொள்ளலாம்.
4. இந்த திட்டத்தின் பிரத்தியேக அனுகூலம் என்னவென்றால் பெர்கின்ஸ் என்ஜின்களை உபயோகிப்பவர்களுக்கு அவர்களுடைய என்ஜின்களை அகற்றி ஸ்பேர் பாகங்களுக்காகவோ ரிப்பேருக்காகவோ காத்திருக்கும் கால நஷ்டமில்லாமல் உடனேயே ரீபில்ட் செய்த என்ஜினை பொருத்திக் கொள்ள வசதி கிடைக்கிறது.
5. ரீபில்ட் என்ஜின் புது என்ஜினைப்போல் பரிசீலனை செய்யப்பட்டு பூர்ணமான திருப்தி அடைந்த பிறகே வழங்கப்படுகிறது.

பெர்கின்ஸ் ரீபில்ட் என்ஜின் திட்டத்தைப் பற்றிய முழு விவரங்களுக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு தயவுசெய்து எழுதவும்




**ஸிம்ஸன் அண்டு கம்பெனி லிமிடெட்**
(பிளாண்ட் 11)

தபால் பெட்டி No. 856, செம்பியம், சென்னை 11
கிளைகள்: பெங்களூர், உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி, சிகந்தராபாத்.